

# அமரர் கல்கி நூற்றாண்டில் கல்கியின் புகழ்மிக்க நூல்களை வானதி பதிப்பகம் வாசகர்களுக்கு மகிழ்வுடன் வழங்குகிறது.

வணக்கத்திற்குரிய கல்கி படைத்த வானதியின் பதிப்புக்களைப் படித்து இன்புறுங்கள்

| கல்கியின் நூல்கள் | விலை |
|---|---|
| பொன்னியின் செல்வன் (ஐந்து பாகங்கள்) | 525.00 |
| சிவகாமியின் சபதம் | 250.00 |
| அலை ஓசை *(சாகித்ய அகாதெமி பரிசு பெற்ற நாவல்)* | 200.00 |
| பார்த்திபன் கனவு | 85.00 |
| சோலைமலை இளவரசி | 20.00 |
| பாங்கர் விநாயகராவ் | 25.00 |
| ஒற்றை ரோஜா | 18.00 |
| தியாக பூமி | 65.00 |
| மோகினித் தீவு | 18.00 |
| ஏட்டிக்குப் போட்டி | 30.00 |
| அமர வாழ்வு | 20.00 |
| பொய்மான் கரடு | 28.00 |
| கள்வனின் காதலி | 45.00 |
| சாரதையின் தந்திரம் | 25.00 |
| வீணை பவானி | 20.00 |
| மயிலைக்காளை | 20.00 |

| கல்கியின் நூல்கள் | விலை |
|---|---|
| மயில்விழி மான் | 22.00 |
| கணையாழியின் கனவு | 57.00 |
| ஓ மாம்பழமே | 20.00 |
| மகாத்மாவும் மகாகவியும் | 18.00 |
| திருவழுந்தூர் சிவக்கொழுந்து | 17.00 |
| பாரதி பிறந்தார் | 25.00 |
| கண்கொள்ளாக் காட்சிகள் | 50.00 |
| நம் தந்தையர் செய்த விந்தைகள் | 15.00 |
| யார் இந்த மனிதர்கள்? | 40.00 |
| சங்கீத யோகம் | 50.00 |
| எழுத்துலகில் அமரதாரா *(அமரர் கல்கி அவர்களைப் பற்றி அறிஞர்களின் கட்டுரைகள். தொகுப்பு நூல்.)* | 75.00 |
| கல்கியின் நினைவுகள் | 160.00 |
| பகீரதன் எழுதியது | |
| மூன்று மாதம் கடுங்காவல் | அச்சில் |
| பொன்னியின் புதல்வர் – சுந்தா | அச்சில் |

**தேவையான புத்தகங்களுக்கு பதிவு தபால் செலவு ரூ. 15.00 சேர்த்து M.O. அல்லது டிராப்டு அனுப்பி பெற்றுக் கொள்ளவும்.**

**வி.பி.பி.யில் பெற கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. தபால் செலவு தனி. இலவச விலைப்பட்டியலுக்கு கடிதம் எழுதுங்கள்.**

# வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு,
(பாண்டிபஜார் தபால் நிலையம் எதிரில்)
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி எண் : 4342810



# பிரதமருக்கு வாழ்த்துச் சொன்னால்...

**"நம் பிரதமர் வாஜ்பாயிக்குப் புத்தாண்டு வாழ்த்துச் சொன்னால் என்ன சொல்லுவீர்கள்?"**

**என்று சாமானியர்கள் சிலரைக் கேட்டோம்...**



- குனியக் குனியக் குட்டிக்கிட்டுத்தாங்க இருப்பாங்க. இந்த உலகத்துல. 'இப்ப என்னாங்கரே'ன்னு நிமிர்ந்து நில்லுங்க! பயந்துடுவாங்க! அந்த தெகிரியம் உங்களுக்கு வரணும்! புத்தாண்டு வாழ்த்துக்கள்.

*– சலூன் நடத்தும் வீரமணி*



● பிரதமரான உடனே, நீங்களும் நரசிம்மராவ் மாதிரியே 'உம்'முனு ஆயிட்டீங்க. இந்த வருஷத்திலியாவது கொஞ்சம் சிரிக்கலாமே! ஹாப்பி நியூ இயர்!

– **பழக்கடைக்காரர் லோகனாதன்**



● இன்னொரு தடவை புத்தர் சிரிக்க வேண்டாம்! நாட்டிலுள்ள ஏழை மக்கள் முகத்தில் சிரிப்பு மலரட்டும். இந்த நிஜமான சாதனை புரியவும் உங்களால் முடியும்; அதற்கு, இந்தத் தருணத்தில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

– **குடும்பத் தலைவி மீனா**



● அடுத்த புதுவருசம் வரைக்கும் நீங்களே பிரைம் மினிஸ்டரா இருக்க, உங்க கூட்டணிக் கச்சிங்க உடுவாங்களான்னு தெரியல. அதனால, இந்த வருசமே புது வருசம் நல்லபடியா இருக்கணும்னு வாழ்த்தறேன்!

– **ரிக்ஷா ஓட்டும் சிகாமணி**



● வெங்காயம் மூலம் மறுபடி கண்ணீர் வராத ஆண்டாக இவ்வருடம் அமைய வாழ்த்துக்கள்.

– **வீட்டு வேலை செய்யும் தேவி.**



● எங்கவூர்ல ஒரு வளர்ப்பு மகன் இருந்தாரு! நாடே சிரிப்பா சிரிச்சுப் போச்சு! உங்களுக்கும் ஒரு வளர்ப்பு மருமகன் இருக்காராமே! எதுக்கும் கொஞ்சம் எச்சரிக்கையாவே இருங்க. ஹாப்பி நியூ இயர்!

– **வாட்ச்மேன் பூங்காவனம்.**



● புதுவருஷம் கொண்டாடுற மாதிரியாங்க நம்ம நெலமை இது? வெலைவாசி எகிறிப்போச்சு! வருமானம் பத்தலை! ஏழைங்களுக்கு ஒரு நல்லவழி காட்டுங்க! அப்புறம் வாழ்த்தெல்லாம் சொல்லறேன்!

– **காலணிகள் தைக்கும் பக்கிரி.**

தொகுப்பு: **கௌதம்ராம்**, படங்கள் : **யோகா**

# மாறன், ஸ்டாலினுக்கு எதிராக ஒரு குழு?

● திமுகவில் இளைஞரணி நிர்வாகிகளுக் கான தேர்தல் துவங்கி விட்டது. படிப்படியாக உயர்நிலையில் தேர்தல்கள் நடந்து, மாவட்டச் செயலாளர் தேர்தல் நடக்கும்போது பிப்ரவரி ஆகி விடலாம் என்கிறார்கள். ஆனால் இந்தத் தேர்தல்களை ஒத்திப் போடுவதில் ஒரு குழு ஆர்வமாகச் செயல்பட்டு வருகிறது. "எந்தச் சமயத்திலும் பொதுத்தேர்தல் வரலாம். கட்சித் தேர்தல் நடந்தால் கட்சிக்காரர்கள் மத்தியில் கசப் புணர்வு வந்து ஒற்றுமை பாதிக்கப்படலாம்" என்று சொல்லி, தங்கள் வாதத்திற்கு வலு சேர்த்துக் கொண்டிருக்கிறது அந்த 'குழு'. ஆனால் மாறன், ஸ்டாலின் ஆகியோர் "கட்சித் தேர்தல் நடந்தால்தான் கட்சி இன்னமும் வலிமையாக - செயல் துடிப்புடன் இருக்கும். ஆதலால் தேர் தல்களை விரைவில் நடத்தி முடிக்க வேண்டும்" என்று வலியுறுத்தி வருகிறார்கள். "தலைவருக் கருகில் சிலர் இருக்கிறார்கள். இப்போது தேர்தல் நடந்தால், அவர்களுக்கு வேண்டியவர்கள் மீண்டும் பதவிக்கு வரவே முடியாது. அத னால்தான் இதுபோன்ற தரித்தனத்தைக் கையாளு கிறார்கள்" என்று சொல்கிறார் துடிப்பான சென்னை பகுதிச் செயலாளர். இதற்கிடையில் யாரும் அசைக்க முடியாத நிலையில் இருந்த தென்சென்னை மாவட்டச் செயலாளர் கிட் டுவுக்கும் சோதனை வந்திருக்கிறது. இளைஞரணி அமைப்பாளர் ஷீலா கொலை தொடர்பான வதந்திகளால் ஏற்கெனவே நொந்து போய் இருக் கிறார் கிட்டு. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத் திக் கொண்டு, 'பழம்' தங்கள் கையில் விழாதா என்று தளபதியின் ஆதரவைத் தேடுவதில் சிலர் இறங்கியிருக்கிறார்கள்!

● உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி லிப ரானின் மாற்றல் விவகாரம் வழக்கறிஞர்களி டையே சர்ச்சையை உண்டாக்கியிருக்கிறது அல்லவா! "பல வழக்கறிஞர்களும் சரி; பத்திரிகை யாளர்களும் சரி, இது பற்றிய முழு விவரம் தெரியாமல் மாற்றல் விவகாரத்தில் 'அரசியல்' இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள். உண்மை என்னவென்றால் 1994ம் ஆண்டுக்குப் பிறகு மத்திய அரசு தானாகவே எந்த நீதிபதியையும் மாற்ற முடியாது. மத்திய அரசின் சட்ட இலாகா மாற்றல் சம்பந்தப்பட்ட processஐ கோப்புகளில் துவக்குவதோடு சரி! உச்ச நீதி மன்றத் தலைமை நீதிபதி மற்றும் உச்சநீதி மன்ற மூத்த நீதிபதிகள் குழு பரிந்துரைக்கும் நீதிபதியைத்தான் மாற்ற முடியும். இது பற்றி சுப்ரீம் கோர்ட் தெளிவான வழிகாட்டுதல்களைச் சொல்லியிருக்கிறது. இன்னமும் சொல்லப் போனால் சம்பந்தப்பட்ட நீதிபதியையே கேட்டு ஆலோசித்த பிறகுதான் மாற்றல்களைத் தீர் மானிக்கிறார்கள். ஆனால் சில வழக்கறிஞர்கள் தேவையில்லாமல் சர்ச்சையை உண்டாக்கி பப்ளி சிட்டி தேடிக் கொள்கிறார்கள். வழக்குகளை இழுத்தடிக்க ஜெயலலிதாவுக்கு வேறு ஆயிரம் வழிகள் இருக்கின்றன!" என்று சொன்னார் பாப் புலரான அந்த மூத்த வழக்கறிஞர்.



• மாறன்



• ஸ்டாலின்

● இப்போது போலீஸ் கமிஷனர் அலுவலகக் கட்டடம் மிகவும் பழைமையானதாக இருப்ப தாலும், இடம் போதாத காரணத்தாலும், கமி ஷனர் அலுவலகத்தை வேறு இடத்துக்கு மாற் றும் யோசனை அவ்வப்போது பரிசீலனைக்கு வரும். அரசினர் தோட்ட வளாகத்தில் தாற் காலிகமாக காவல்துறைத் தலைவர் அலுவல கத்தை வைத்துக் கொள்ள இரண்டு தளங்களைக் கொண்ட பழைய சட்டமன்ற விடுதி புதுப்பிக்கப் பட்டது. இப்போது காவல்துறைத் தலைவர் அலு வலகம் மீண்டும் கடற்கரைச் சாலைக்குப் போய் விட்டது. இந்த நிலையில் அந்த பழைய சட்ட மன்ற விடுதிக் கட்டடத்துக்குக் 'காவல் துறை ஆணையாளர் அலுவலகத்தை மாற்றி விடலாமா' என்ற யோசனை பரிசீலனைக்கு வந்தது. ஆனால் போலீஸ் மற்றும் சட்டமன்றத் துறை இரண்டுமே, யோசனையை செயல்படுத்தத் தயங்குகின்றன. "அந்தப் பழைய சட்டமன்ற விடு திக் கட்டடத்தின் எதிரே பலமாடி கொண்ட புதிய சட்டமன்ற உறுப்பினர்கள் ஹாஸ்டல் உரு வாகிக் கொண்டிருக்கிறது. எதிரே கமிஷனர் அலு வலகமும் வந்தால் அந்த ஏரியாவே நெருக்கடி யாகி விடும். அதனால்தான் தயக்கம்" என் கிறார்கள் கோட்டை அதிகாரிகள். "ஆனால் "போலீஸ் - அரசியல்வாதிகள் தொடர்பு என்பது கொஞ்சமாவது மறைமுகமாக இருக்க வேண்டு மல்லவா... அதனால்தான் தயக்கம் போலும்" என்றும் கிண்டலடிக்கிறார்கள் சிலர். ○

— தில்லப்பா

**"ஒன்றுக்கு மேற்பட்ட தனி நீதிமன்றங்களை நியமிக்க மாநில அரசுக்கு அதிகாரம் இல்லை" என்று தனி நீதிமன்றம் பற்றிய வழக்கில் சுப்ரீம் கோர்டில் மத்திய அரசு மனு தாக்கல் செய்ய "ஜெயலலிதா மற்றும் அ.தி.மு.க.வினர் மீதுள்ள ஊழல் வழக்குகளை முடக்க மத்திய அரசு சதி செய்கிறது" என்று கண்டனக்குரல்கள் வந்துள்ளன. இந்த நிலையில் தனி நீதி மன்றங்களில் வழக்கு விசாரணை எப்படி நடக்கிறது? இதோ ஒரு நேர்முக வர்ணனை...**

**கா**லை மணி 10.25. *(23.12.98)*

சென்னை ராஜாஜி சாலையில் உள்ள சிங்கார வேலர் மாளிகை. முதல் மாடியில் உள்ளது பதினோராவது கூடுதல் அமர்வு நீதிமன்றம். புரியும்படி சொல்வதென்றால் தனி நீதிமன்றம். நீதிபதி: சம்பந்தம். நீதிபதியின் நாற்காலிக்கு முன்னர் உள்ள ஓவல் அமைப்பு கொண்ட மேசையைச் சுற்றி கறுப்புக் கோட்டுகள். இந்திய அரசியல் சட்டம், ஊழல் தடுப்புச் சட்டம் என்று தலையணைப் புத்தகங்கள்.

"நோ நோ மிஸ்டர். 166 என்ன சொல்லுது பார்த்திங்களா...?" தங்க ப்ரேம் போட்ட கண்ணாடி அணிந்த நெற்றியில் அனுபவங்களின் ரேகைகளுடன் உள்ள அந்த சீனியர் ஜூனியரை கேட்கிறார். ஜூனியர் புத்தகத்தை வேகமாகப் புரட்டுகிறார்.

கறுப்புக் கோட்டுகளுக்கு அந்தப் பக்கம், சரியாகச் சொல்வதானால் நீதிபதியின் நேர் கோணத்தில் உள்ள நாற்காலிகளில் அமர்ந்திருக்கிறார்கள் முன்னாள் அமைச்சர்களான செங்கோட்டையனும் மதுசூதனனும். சுற்றிலும் கரை வேட்டிகளின் கூட்டம். நீதிபதிக்குப் பின்னால் சுவரில் உள்ள காந்தி அப்பாவித்தனமாக புன்னகைப் பூத்துக் கொண்டிருக்கிறார்.



• தலையைக் குனிந்தபடியே செல்லும் செங்கோட்டையன்

"என்னடா இன்னும் காணோம்?"

"அண்ணன் அப்பவே வந்துட்டாரு." தொண்டர்கள் கிசுகிசுத்துக் கொள்கிறார்கள்.

தாமதமாக வரும் அ.தி.மு.க. தொண்டர்கள், கொஞ்சம் வெட்கத்துடனும், கொஞ்சம் பயத்துடனும் முன்னாள் மாண்புமிகுக்களைப் பார்த்து வணக்கம் சொல்லி, அவசரமாகப் பின்னால் மறைந்து போகிறார்கள்.

மதுசூதனனும் செங்கோட்டையனும் எதிரில் பரபரப்பாக இருக்கும் வழக்கறிஞர்களைப் பார்த்து காதோடு காதாக பேசிக் கொண்டிருக்கிறார்கள். மணி 10.40.

"ஷ்...ஷ்... சைலன்ஸ்..."

கோர்ட் ஹாலை ஒட்டியிருக்கும் அறையிலிருந்து வந்து அமர்கிறார் நீதிபதி சம்பந்தம். எல்லோ



• தனி நீதிமன்றம்



• மதுசூதனன்

ரும் ஒரு முறை எழுந்து அமர்கிறார்கள்.

முதலில் சிறிது நேரம் நீதிபதியைச் சுற்றி வக்கீல்கள் சூழ்ந்து கொண்டு மனுக்களைக் கொடுக்கிறார்கள். மெல்லிய குரலில் பேசிக் கொள்கிறார்கள். பெஞ்ச் கிளார்க் மட்டும் கிரைம் நம்பர் 1/27, 12/97, 8/97 என்று உரக்கச்

# “மிஸ்டர் ஹெட்னெஸ் ஐ ஹோ ஐம் ஜாப்!”

சொல்வது காதில் விழுகிறது.

சேடப்பட்டி முத்தையாவுக்கு சொத்துக் குவிப்பு வழக்கில் தமிழில் ஆவணங்களைக் கொடுக்க உத்தரவிடும் நீதிபதி “விசாரணையை நிறுத்த முடியாது” என்று சொல்லிவிடுகிறார். இதே போன்று சொத்துக் குவிப்பு வழக்கில் சிக்கியுள்ள புவனகிரி முன்னாள் எம்.எல்.ஏ. மல்லிகாவின் வழக்கை அடுத்த மாதத்துக்கு ஒத்தி வைத்து விசாரணை நடைபெறும் என்று அறிவிக்கிறார்.

அடுத்து இலவச வேட்டி-சேலை ஊழலில் சிக்கியுள்ள மதுசூதனன் வழக்கு. பெஞ்ச் கிளார்க் குற்றம் சாட்டப்பட்டவரின் பெயர்களைப் படிக்க, மதுசூதனன் எழுந்து நிற்கிறார்.

“மிஸ்டர் மதுசூதனன்... தமிழில் ஆவணங்களைக் கேட்டிருக்கிறீர்கள். ஆனால் ஆங்கிலம் தெரியாது என்று சொல்லவில்லை, அல்லவா...?”

நீதிபதியின் இந்தக் கேள்வியால் கொஞ்சம் ஆடிப்போன மது சுதாரித்து, “ம்... இல்ல ஸார். தமிழ்ல கொடுக்கணும் ஸார்!” என்கிறார்.

அவரது வேண்டுகோளை ஏற்று உத்தரவிடுகிறார் நீதிபதி.

இருக்கையிலிருந்து எழுந்து வந்து அவரது வக்கீலின் பக்கம் சென்ற மது... “தெலுங்கில் ஆவணங்களைக் கேட்டிருப்பேன்” என்று சிரித்தவாறு சொல்லி, கொத்தான தொண்டர்களுடன் அறையை விட்டு வெளி வந்து சிகரெட்டுடன் ரிலாக்ஸ் ஆகிறார்.

“ஆய்... யாரது என்று நமது கேமராகாரரைப் பார்த்து ஒரு அதட்டல் போட, நாம் சுறுக்கே போய் “நம்மாளுதான்” என்றோம்.

“வெளியே போம்போது எவ்வளவு வேணும்னாலும் எடுத்துக்க!”

**மீ**ண்டும் கோர்ட் ஹால்.

அரசு வழக்கறிஞர் கிருஷ்ணமூர்த்தியிடம் “நீங்கள் தயாராக வந்திருக்க வேண்டும்” என்று சொல்லும் நீதிபதி சில மேட்டர்களில் அரசின் பதில் மனு தாமத

• வழக்கறிஞர் கோவை ராமச்சந்திரன்



மாவதைச் சுட்டிக் காட்டுகிறார். இதற்கிடையில் ஒரு வழக்கறிஞர் "தமிழில் மொழி பெயர்க்கும் பணியை போலீஸிடம் ஒப்படைக்கக் கூடாது'' என்று கருத்துத் தெரிவிக்கிறார்.

"பல வால்யூம்கள் கொண்ட ஆவணங்களை மொழிமாற்றம் செய்ய முடியாது. வழக்கறிஞர்கள் பார்த்து குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும்!'' என்று சொல்கிறார் நீதிபதி.

சிறிது நேர சலசலப்புக்குப் பின்னர் நீதிமன்றம் அமைதியாகிறது.

ஈரோடு ஜீவா போக்குவரத்துக் கழகத்திற்கு உதிரி பாகங்கள் வாங்கப்பட்டதில் நடந்த முறைகேடுகளைப் பற்றிய வழக்கு விசாரணைக்கு வருகிறது. குற்றம் சாட்டப்




பட்ட செங்கோட்டையன் பெயர் படிக்கப்பட, அவர் எழுந்து நிற்கிறார். நின்று கொண்டே இருக்கும் செங்கோட்டையனை சிறிது நேரத்திற்குப் பிறகு அமரச் சொல்கிறார் நீதிபதி.

"பிராஸிக்யூஷன், முதல் சாட்சி எங்கே?''

கோட்டு சூட்டுடன் சாட்சிக் கூண்டுக்கு வருகிறார் மாதவன் நாயர். "சத்தியமாகச் சொல்கிறேன்'' என்று துவங்குகிறார். "போக்குவரத்துத் துறை செயலாளராக நான் இருந்தபோது போக்குவரத்துக் கழகத்திற்கு இருக்கைகள், உதிரி பாகங்கள் ஆகியவை வாங்கப்பட்டது எனக்குத் தெரியும். அதிக விலை கொடுத்து பொருட்கள் வாங்கப் பட்டன!'' என்று முடிக்கிறார். சாட்சி, சொல்லச் சொல்ல, நீதிபதி அதை டிக்டேட் செய்ய, நீதிபதிக்கு அருகிலேயே ஒருவர் அமர்ந்து சாட்சியத்தை தமிழில் டைப் செய்கிறார். ஒரு கட்டத்தில் 'Bus body'க்கு தமிழில் எப்படிப் போடுவது என்று நீதிபதி கேட்க ''பேருந்துக்கூடு'' என்று குரல் வந்தது.

"என்ன... சாட்சியை விசாரணை செய்கிறீர்களா?'' என்று செங்கோட்டையன் தரப்பு வக்கிலான கோவை ராமச்சந்திரனைப் பார்த்து நீதிபதி கேட்க, "'இல்லை... இந்த சாட்சியை விசாரிப்பதை நான் தள்ளி வைத்துக் கொள்கிறேன்!'' என்று சொல்லி விடுகிறார் அவர்.

*11.55.* ஒரு சிறிய இடைவேளை... நீதிபதி உள்ளே போய்விட வக்கீல்கள் ஒன்று சேர்ந்து கொள்கிறார்கள். "இந்த விசாரணையை நாம் ஒப்புக் கொள்ளக் கூடாது'' என்று ஜூனியர் ஒருவர் படபடக்க, "I will not go by emotions. I will go by experience'' என்கிறார் ராமச்சந்திரன்.

***12****.05.* அடுத்ததாக கோட்டு சூட்டு சகிதம் மற்றொரு அதிகாரியான தேவராஜ் சாட்சிக் கூண்டுக்கு வருகிறார். செங்கோட்டையன் மீது வழக்குப் போடுவதற்கு ஆளுனர் முறைப்படி அனுமதி கொடுத்தார் என்றும் ஆளுனரின் உத்தரவை பொதுத் துறை செயலாளர் என்ற முறையில் தமது கையொப்பத்துடன் வெளியிட்டதாகவும் சொல்கிறார்.

குறுக்கு விசாரணையில் ஒரு பிடி பிடிக்கிறார் கோவை ராமச்சந்திரன். அரசுடைய பிஸினஸ் விதிகள், ஸ்பெசிபிக் அத்தாரிட்டி, கிரவுண்ட்ஸ் ஆப் ஸாடிஸ்பேக்ஷன் என்று கேள்விக் கணைகளாக வீச, அரசு வழக்கறிஞர் un easy ஆக மாறுவது அனைவருக்கும் தெரிகிறது.

"உங்களுக்குத் தெரியுமா? subjective satisfaction, objective satisfaction என்று இருவகை உண்டு!''

"தெரியும்!'' என்கிறார் சாட்சி.

தொடர்கிறார் வக்கீல். தாம் செய்யும் காரியத்தில் தாமே முழுக்க திருப்தி அடைந்து செய்வது subjective satisfaction. தாம் செய்யும் காரியம் மற்றவர்களையும் திருப்திபடுத்துமாறு பார்த்துக் கொள்வது objective satisfaction.''

"எங்களைப் பொறுத்தமட்டில் நாங்கள் விதிகளை அனுசரித்து திருப்தியாகத்தான் செய்தோம். இதில் objective satisfactionஐப் பற்றி கோர்ட்தான் தீர்மானிக்கணும்!''- இப்படி தேவராஜ் சொன்னதும் அது வரை இறுக்கத்துடன் உர்ரென்று இருந்தவர்கள் கூட சிரிக்க, கோர்ட் கலகலப்பானது.

ஒரு கட்டத்தில் தேவராஜ் "தொடர்பில்லாத விவரங்களைக் கேட்கிறார்'' என்று சொல்ல, மூக்குக் கண்ணாடிக்கு மேல் ராமச்சந்திரனுக்குக் கோபம் வருகிறது. "மிஸ்டர் விட்னஸ்.. ஐ நோ மை ஜாப்!'' என்கிறார்.

தொடர்ந்து போக்குவரத்துத் துறையில் சார்புச் செயலாளராக இருந்த நடராஜன் சாட்சிக் கூண்டுக்கு வருகிறார். உதிரி பாகங்களின் விலைகளைப் பற்றிய ஒரு comparative statement தயாரித்தது பற்றி அவர் சாட்சி சொல்ல விசாரணை சூடு பிடிக்கிறது. பொருள்களின் தரம், வாங்குவதற்கான வழிமுறைகள், விற்கும் நிறுவனங்களைப் பற்றிய விவரங்கள் என்று குறுக்குவிசாரணையில் கேள்விக் கணைகள் பறக்க, சாட்சி, ஒற்றை வரிகளில்...''இல்லை... ஆமாம்... தவறு..'' என்று சொல்வதோடு நிறுத்திக் கொள்கிறார்.

"நீங்கள் எந்தத் துறையில் பட்டப்படிப்பு படித்தீர்கள்?''

"பொருளாதாரத் துறை.''

''அப்படியென்றால் ஆட்டோமொபைல் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. என்ன, நான் சொல்வது சரிதானே?''

"நான் சார்புச் செயலாளர். எனக்கு மேல் உள்ள அதிகாரிகளின் உத்தரவுப்படி நான் செயல்பட்டேன். அவ்வளவுதான்!''

ஒரு கட்டத்தில் நீதிபதி, வழக்கறிஞரிடம் "நீங்கள் உங்கள் வாக்குவாதத்தில் இவற்றை வைத்துக் கொள்ளுங்கள்...'' என்று வழி சொல்கிறார்.

ஓய்வு பெற்றுவிட்ட அந்த அரசு ஊழியரிடம் குறுக்கு விசாரணை முடியும்போது மணி 2.15. எல்லோருக்கும் பசி வயிற்றைக் கிள்ள,

"மதியம் மூன்று மணிக்கு மீண்டும் துவங்கலாமா?'' என்று நீதிபதி கேட்க, "மூன்றரை மணிக்கு வைத்துக் கொள்ளலாம்'' என்கிறார்கள் வழக்கறிஞர்கள்.

குறுக்கு விசாரணையில் வெளிப்பட்ட விஷயங்களைப் பற்றிய விவாதத்துடன் வழக்கறிஞர் கூட்டம் வெளியே வருகிறது.




''சென்னையில் Trial Advocates எண்ணிக்கை குறைந்துகொண்டு வருகிறது. சாட்சியங்களைக் குறுக்கு விசாரணை செய்யும் திறமை மிக்க வழக்கறிஞர்கள் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவிலேதான் சென்னையில் இருக்கிறார்கள். அதனால்தான் மாவட்டங்களில் இருந்து அனுபவம் மிக்க பல சீனியர்கள் ஊழல் வழக்குகளில் இங்கு வந்து ஆஜராகிறார்கள்!'' என்று நம்மிடம் சொன்னார் முன்னாள் மாண்புமிகுக்களுக்கு ஆஜராகும் சீனியர் வழக்கறிஞர் ஒருவர்.

ஒரு புலனாய்வு அதிகாரி, சக தோழரிடம் "இந்த விட்னஸையெல்லாம், நம்ப ஆபீஸுக்கு ஒருமுறைக்கு இருமுறை வரச் சொல்லித் தயார் பண்ணணும்!'' என்கிறார்.

முதல் மாடியிலிருந்து தொண்டர்கள் சூழ இறங்கி வரும் செங்கோட்டையன் கீழே போர்டிகோவில் தொலைக்காட்சி காமிராக்களைக் கண்டதும் தலையைக் குனிந்து கொண்டு காரை நோக்கி ஆசியப் போட்டி தடகள வீரரைப் போல் ஓடுகிறார்.

ஆனால், பதக்கம் பெறும் வாய்ப்பு எல்லோருக்கும் கிடைத்து விடுமா என்ன! ●

— ப்ரியன்

படங்கள்: வெங்கடேஷ்

**AAA**

கேர் மற்றும்
க்ரிஸில்
வழங்கும்
மதிப்பீடு

**14%***

வருடாந்தர
வருவாய்

# ஐடிபிஐ
# :ப்ளெக்ஸிபாண்ட்ஸ் 5

பத்திரமான எதிர்காலத்திற்கு

## ரெகுலர் இன்கம் பாண்ட்*

**வருடாந்தர வட்டி**
**ஆண்டிற்கு 14%**

அரை வருடத்திற்கு (ஆண்டிற்கு 13.5%)
கால் வருடத்திற்கு (ஆண்டிற்கு 13.3%)
ஒரு 7 ஆண்டுத் திட்டம்.
5வது வருட இறுதியில்
திருப்பித் தரும் வசதித் தேர்வு
(ஒரு வருடத்திற்கான ஒய்டிஎம்
13.69% முதல் 13.75% வரை.)

## குரோயிங் இன்ட்ரெஸ்ட் பாண்ட்

**வருடாந்திர வட்டி**

முதல் ஆண்டிற்கான 11% வட்டி
7வது வருடத்தில் ஆண்டிற்கு **20%** ஆக
வளருகிறது. 12 மாதங்களுக்குப் பிறகு
எப்போது வேண்டுமானாலும் திருப்பித்
தரும் வசதித் தேர்வு

**பாதுகாப்பு#**
**ஆதாயம்**
**நம்பிக்கை**

## மல்டி ஆப்ஷன் பாண்ட்

**சமமான வருடாந்தர**
**வட்டித் தொகை முறையே**

2 ஆண்டுகள் வைப்புக் காலத்திற்கு பிறகு
வருடத்திற்கு **17.5%** அல்லது 3 ஆண்டு
வைப்புக் காலத்திற்கு பிறகு வருடத்திற்கு
**22.5%** அல்லது 4 ஆண்டு வைப்புக்
காலத்திற்கு பிறகு ஆண்டிற்கு **30.0%**
வட்டி 7 ஆண்டு திட்டம்.

## இன்ஃப்ராஸ்ட்ரக்சர் (டாக்ஸ் ஸேவிங்) பாண்ட்

**பிரிவுகள் 88, 54EA மற்றும்**
**54EB-ன் கீழ் வரிச் சலுகை**

பிரிவு 88 மற்றும் 54EA-ன் கீழ் 3 வருடங்
களுக்கு வட்டி ஆண்டிற்கு **12.5%**
மற்றும் பிரிவு 54EB-ன் கீழ் 7
வருடங்களுக்கு வட்டி. ஆண்டிற்கு **13%.**
வருடாந்தர மற்றும் ஒன்று திரண்ட
வட்டித் தேர்வு. பங்குக்கான முந்துரிமை.

**இஷ்யூ நடப்பிலிருக்கும் தேதிகள் டிசம்பர் 21, 1998 முதல் ஜனவரி 14, 1999 வரை.**

**கடம்பூர் காட்டுக்குள் சந்தனக் கடத்தல் வீரப்பன் நிகழ்த்திச் சென்ற சில்மிஷங்கள் நடந்து முடிந்து ஒரு மாதம்கூட முடிந்திருக்கவில்லை. அதற்குள் அந்தியூர் பக்கம் வெள்ளித்திருப்பூர் போலீஸ் நிலையத்தில் அவனுடைய தாக்குதல் வேட்டை என்று பரபரப்பான செய்திகள்... நேரில் சென்றோம்...**



# போலீஸ் ஸ்டேஷனுக்கு

ஈரோடு-பவானியிலிருந்து சுமார் 18 கி.மீ தூரம் பயணித்தால் எட்டுவது வெள்ளித் திருப்பூர். நிறைந்த கடைகள். பெரிய ஊர். அங்கிருந்து முக்கால் கி.மீ சென்றால் காட்டுப் பகுதியின் துவக்கத்தில் வெள்ளித்திருப்பூர் போலீஸ் ஸ்டேஷன்.

ஸ்டேஷனுக்கு இடதுபக்கம் சில குடிசைகள். நிறைய போலீஸ் தலைகள். கைகட்டி நிற்கும் குடியிருப்புவாசிகள். ஒற்றை டீக்கடை... அதில் டீ குடிக்க நிற்கும் போலீஸ் கும்பல். கொஞ்சம் தள்ளி பிராந்திக் கடை. எதிரில் ஒரு தோட்டம்; பெரிய வீடு. இடது பக்கம் நீளும் வீடுகள். வலது பக்கமோ ஒன்றுமில்லை. நீளும் தார்ச்சாலை. 8 கி.மீ தூரத்தில் மலைப் பிரதேசம் தாண்டினால் கர்நாடகப் பகுதி.

எல்லா இடங்களிலும் போலீஸாரின் வலைவிரிப்பு. போலீஸார் ஒவ்வொரு இடத்திலும் நான்கு, ஐந்து முறை சல்லடையாய்த் துருவி, திரும்பத் திரும்பச் சொல்வதில் முரண்பாடு ஏதும் உண்டா என ஆராய்ந்து கிடுக்கிப் பிடி போடுவதாக ஒரு தோட்டக்காரர் புலம்பினார்:

"நாங்க அன்னைக்கு (20.12.98 இரவு) ராத்திரி 10.30 மணிவரைக்கும் கடை நடத்திட்டுத் தான் இருந்தோம். போலீஸ் ஸ்டேஷன் பக்கம் அப்படியொண்ணும் வித்யாசம் தெரியல. ஒருவேளை போலீஸ் ஸ்டேஷனிலிருந்து எங்க கடை மறைஞ்சிருக்கிறதுனால இது தெரியாம போயிருக்கலாம். அப்புறம்தான் யார் யாரோ சத்தம் கேட்டுப் போனாங்க. வீரப்பன் வந்தான் போனான்னு அடுத்த நாள் பேச்சு வந்தது. அப்பவும் நாங்க போகல. வம்பு வழக்கு ஏன் தேடிக்கணும்னுதான்...!"



தாக்குதல் நடந்த அறை... துப்பாக்கிக் குண்டு பாய்ந்த சுவரில் வட்டமிடப்பட்டுள்ளது!

போலீஸ் ஸ்டேஷனுக்குப் பின்புறம் நூறு மீட்டர் தூரத்தில் வேலை நடந்து கொண்டிருக்கும் போலீஸ் குவார்ட்டர்ஸ். அடுக்கு மாடிக் கட்டடம். வேலை செய்யும் ஆட்கள் நிறைய்ய.

"தினம் இராத்திரி எங்க பசங்க தங்குவாங்க. பெரும்பாலும் வெளிய மணல் மேட்டுலதான் விழுந்து கிடப்பாங்க. ஆனா அன்னைக்குன்னு பாருங்க ஞாயிற்றுக்கிழமை. லீவு நாள். எல்லோரும் ஊருக்குப் போயிட்டாங்க. எண்ணி ரெண்டு பேர் மட்டும் இருந்தாங்க. அவங்களும் அடிக்கிற குளிர்ல அறைக்



# வீரப்பனா வந்தான்?

குள்ளே போய் படுத்துட்டான்க."

– கட்டட கான்ட்ராக்டர் ஒருவரின் பதில்.

அக்கம்பக்கம் உள்ள சிறு சிறு குடிசைகளில் நிறைந்து நிற்கும் பயம். குறிப்பாக டீக்கடைக்காரர் விசாரணையில் ஆடிப் போனது கண்களின் மிரட்சியில் ரொம்பவும் தெரிந்தது. அவர்களின் பிள்ளைகளைக்கூட எங்கேயோ (வெளியூரில்) கொண்டு போய் விட்டு விட்டதாக வெளி வட்டாரத் தகவல்கள். எல்லோருமே இதுபற்றி 'மூச்சு' விடவில்லை. அப்படியும் துருவிக் கேட்டதில் –

"வீரப்பனோ.. எவனோ வந்தான். அடிச்சிட்டுப் போயிட்டான். அதுக்கு நாங்க என்ன சார் பாவம் பண்ணினோம். போலீஸ்காரங்க மாத்தி நீங்க, நீங்க மாத்தி அவங்க. இப்பத்தான் யோசிக்கிறோம். ஏன்டா போலீஸ் ஸ்டேஷன் பக்கம் வீட்டைக் கட்டினோம்னு?"

– எதிர்க்குடியிருப்பில் கோபமாய் வெடிக்கும் வார்த்தைகள்.

போலீஸ் ஸ்டேஷனுக்குள்ளோ உள்ளூர்

• வெள்ளித்திருப்பூர் போலீஸ் ஸ்டேஷன்

போலீஸ் இன்ஸ்பெக்டர் முதற்கொண்டு டி.ஐ.ஜிவரை அத்தனை அதிகாரிகளும் வந்து போய்க்கொண்டு! விரைப்பாய் நிற்பதும் சல்யூட் அடிப்பதுமே போலீஸாருக்கு வேலையாய்!

வீரப்பன் தாக்கப்பட்டதாகக் கூறப்படும் அறையில் ஒழுங்குபடுத்தப்படும் டேபிள், சேர், ஃபைல்கள்... துப்பாக்கி சுடப்பட்டதாய்க் குறிப்பிடப்படும் சுவரிலிருந்து 'காரை பெயர்த்து' எடுக்கும் சில ஆய்வு நிபுணர்கள். மண்ணை வெளியே பரிசோதிக்கும் போலீஸார்.

"சம்பவம் நடந்தப்ப இருந்த போலீசார்?"

"பார்க்க முடியாதே!"

"எஸ்.பி.யைப் பார்க்கணும்."

"ஸாரி. அவங்க டி.ஐ.ஜி.யை பார்க்கச் சொல்றாங்க."

தடைக்கல்லாய் சில இன்ஸ்பெக்டர்கள்.

"கர்நாடகாவில் ஏழெட்டு வருஷம் முன்னால ராமாவரம் போலீஸ் ஸ்டேஷனை வீரப்பன் தாக்கினான்னா, அவங்களும் எதிர்த்துத் தாக்கினாங்கன்னா அவங்ககிட்ட அந்த அளவு 'வெப்பன்ஸ்' இருந்தது. இங்கே ஒரு துப்பாக்கி. ஒரு தோட்டா, தப்பித் தவறி குறி தவறிட்டா தோட்டாவை மாத்திப் போடறதுக்குள்ள எதிரி சடசடன்னு சுட்டுத் தள்ளிடுவான்! போலீஸ்காரன் என்ன செய்வான்?"

– இது ஒரு ஸ்பெஷல் பிராஞ்சின் ஆதங்கம். அதற்கடுத்தபடியாய் சன் டீ.வி.யில் முகம் காட்ட ஆசைப்படும் முகங்கள். கடைசியாய் வரும்போது வண்டியில் ஒருவர்:

"எங்க சொந்தக்காரங்க புள்ளையைத்தான் (இரண்டு பேராம்) ரெண்டு நாளா பிடிச்சு வச்சிருந்தாங்க. ஞாயிற்றுக்கிழமை ராத்திரி பத்து மணிக்கு போலீஸ் ஸ்டேஷன் வழியா போகும்போது அங்கே இரண்டு பேர் நின்னதா உளறிட்டான். உடனே போலீஸ் மடக்கிடுச்சு. ஒரே ரோதனை. இப்ப அவன் இங்க இல்லே. ஊருக்கு அனுப்பிட்டோம். இங்கே எங்கேங்க வீரப்பன் வந்தான். வேற யாராவதா இருக்கும்!"

– இதுதான் அப்பகுதி மக்களின் மொத்தப் பேச்சாக உள்ளது!

கட்டுரை, படங்கள்: **செல்வி ரோகிணி**

எஸ். சங்கரநாராயணன்

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோவிலின் பின் பக்கமாய் இருக்கிறது சபேசனுடைய ஜாகை. சித்திரக்குளம் அருகே மகாதேவ (சாஸ்திரி) தெரு. இப்போது அவர் வெறும் மகாதேவன். சாஸ்திரி இல்லை. மாற்றங்கள்!

தெருவுக்குப் பழைய அடையாளங்கள் அழிந்து புதிய அடையாளங்கள் வந்திருக்கின்றன. தெரு துவக்கத்தில் ஆவின் பூத். முன்போ அங்கே மாடு கட்டி அதிகாலை நாலு நாலரைக்கெல்லாம் நுரைக்க நுரைக்கப் பால் கறப்பார்கள். விடியலின் தளிர் வெளிச்சத்தையே அவர்கள் இப்படி சர்ர் சர்ர்ரென்று பாத்திரத்தில் பிடிக்கிறாற் போலிருக்கும்.

தெருவில் இப்போது உயரமாய்க் கட்டடங்கள் எழுந்து விட்டன. இத்தனை காலமாய் அவற்றை யாரோ பூமிக்கு அடியிலேயே காலால் அழுத்தி ஒளித்து வைத்திருந்தார்கள். அதிரடியாய் மாற்றங்கள். விரல் சொடுக்கும் பொழுதுக்குள், மாற்றங்கள் வருவதைப் பற்றிக்கூட இல்லை. ஆனால் அது வரும் விரைவு. மலைப்பாய் இருக்கிறது.

ஒரு பத்துப் பதினைந்து வருடம் முன்னே இந்த டேப் - ரிகார்டரும் சி.டியும் தொலைக்காட்சியும் வானொலியும் இத்தனை பரவலாய்ச் சீரழியும் என்று யாராவது கனவாவது கண்டோமா? ஆளாளுக்கு இப்படி கம்ப்யூட்டர் மேனியா வந்து திரிவார்கள் என்று எதிர்பார்த்தோமா...? என்ன வேகம், என்ன ராட்சஸ வளர்ச்சி.

தெருவின் இரு மருங்கிலும்



# 1

# ராகு கேது

## ரங்கசாமி

இதமான வேப்ப மரங்கள் எங்கே? இப்போது வெயில் வாட்டியெடுக்கிறது. இரு சக்கர, மூன்று நான்கு சக்கர வாகனங்கள் நிறைய வாசலில் நிற்கின்றன. ஜன நடமாட்டம் எப்போதும் இருக்கிறது. மக்களுக்கு பகலுக்கும் ராத்திரிக்கும் வித்தியாசம் குறைந்து போனது. அந்த வழியே இப்போது பஸ் போகிறது. பேன்சி ஸ்டோர். ஐஸ்கிரீம் மற்றும் குளிர்பானக் கடை. ஜெராக்ஸ். பிசிஓ. காபிப்பொடி, அப்பள வத்தல் வடகக் கடை. டிபார்க் கடைகள். எல்லாமே கிடைக்கிறது.

சபேசன் வீடு மாத்திரம் தொன்மை மங்காத, முக மங்கலுடன் தனித்திருந்தது. அதை யார் யாரோ ரியல் - எஸ்டேட்காரர்கள் வந்து விலைக்குக் கேட்டுப் பார்த்தார்கள். நல்ல நல்ல பார்ட்டிகள். சபேசன் இடங் கொடுக்கவில்லை.

புதையலைப் பூதம் காப்பது மாதிரி இந்த வீட்டுக்கு ஜெகதாம்பாள். நார்மடிப் பாட்டி. சபேசனின் மாமியார். பெண்ணைக் கட்டிக் கொடுத்த கையோடு அவளும் கூடவே வந்து விட்டாள்.

பெரிய சதுரத் தரையில் முன்பக்க ஒதுக்க மாய்ச் சிறு வீடு. சுற்றிலும் புதர் மண்டிக் கிடந்தது. மாதம் ஒருமுறை முடிவெட்டிக் கொள்வதுபோல, தரையையும் ஒழுங்குபடுத்தினால் நன்றாய் இருக்கும். அதற்கு வழி இல்லை. பின்பக்கமாய்த் தள்ளி கிணறு. அருகே குளியலறை. தனியே கழிவறை. காலத்தை அனுசரித்தும், பெண் கீதாவின் சங்கடத்தாலும் சபேசன் இப்போது வீட்டை ஒட்டிய மாதிரி குளியலறை இணைந்த கழிவறை கட்டினான். (டு இன் ஒன்). என்றாலும் அதைப் பயன்படுத்த பாட்டி முகம் சுளித்தாள்.

இந்த வீட்டுக்கு என்று வந்து சேர்ந்ததில் இருந்து, இப்போது சபேசனுக்கே ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் என்ற நிலையிலும் இன்றுவரை பாட்டிக்கு மாப்பிள்ளை பற்றி ஒரே அபிப்ராயம்தான். சபேசனுக்கு சமத்து பத்தாது. அதில் மாற்றமே இல்லை!

சமத்து இருந்தால் ஏன் உம் பொண்ணைக் கட்டிக்கறேன், என்று சபேசன் பதிலடி கொடுக்கிறவன்தான். எத்தனை சண்டை சச்சரவு என்றாலும் அவனுக்கு மாமியாரிடம் வாஞ்சை, மட்டு மரியாதை உண்டு. வயதானவள். தனக்கு தாயார் ஸ்தானம். இந்த வயதில் இந்த மனோதிடமும், குடும்பத்துக்கே பெரிய தலையாக இருந்து



அணைச்சுக் கொண்டு போவதும் யாருக்கு வரும்? அவள் இருந்ததில் தலைமைப் பொறுப்பு தெரியாமல் சபேசன் ஹாயாக இருந்தான்.

உலகத்தில் என்ன களேபரம் வந்தாலும், சபேசனுக்கு காலை எஃப் எம்மில் இசை யரங்கம் கேட்டாக வேண்டும். காலைக் காபி போல அவனுக்கு சங்கீதப் பித்து. செய்தித் தாள் திறந்தால் அவன் முதலில் இசையரங் கத்தில் இன்றைக்குப் பாடுவது யார் என்று தான் பார்ப்பது. அடுத்தது ராசி பலன் - இன்று நாள் எப்படி. பிறகுதான் வாஜ்பேயி யைப் பற்றியும், கிளின்டன் பற்றியும் நினைப்பு ஓடும்.

ரமணிக்கு தொலைக்காட்சியில் விளை யாட்டு பார்க்க வேண்டும். கால்பந்தோ கிரிக்கெட்டோ.

பெண் கீதாவுக்கு சினிமா. கதாநாயகியின் புதிய புதிய உடைகள் அவளுக்குப் பார்க்கப் பார்க்க அலுக்கவில்லை. அவர்கள் போட் டுக் கொண்டு வரும் உடைகளையும், அதன் கிளர்ச்சியூட்டும் வடிவமைப்பும்... அவற் றைப் போட்டுக் கொண்டு தெருவில் நடமாட முடியுமா?

பாக்கியலெட்சுமிக்கு சீரியல். கதை புரி யுதோ, தொடர்ச்சி புரியதோ அதைப் பத்தி யில்லை. பார்த்துக் கொண்டிருப்பாள். அடிக் கடி ச் கொட்டிக் கொள்வாள். சீரியல் பெண் பாத்திரங்கள் எதற்காவது அழுது கொண்டே இருந்தார்கள். அதிலும் வயதான அம்மா அப்பாக்களை இந்தப் பிள்ளைகள் மதித்து நடத்தினால்தான் என்ன? கூட வைத்துக் கொண்டால்தான் என்ன...?

என்ன டீ.வி என்பாள் பாட்டி அலட் சியத்துடன். எப்பவாவது சாமி படம் போட் டால் வந்து உட்கார்வாள். திடீர் திடீரென்று டீ.வி.யைப் பார்த்து கன்னத்தில் போட்டுக் கொள்வாள்.

அதிகாலையின் பரபரப்புகளில் அம்மா சமையலறைக்கும் வெளியேயும் ஓடியாடித் திரிவது, கால் பந்தாடுவது போலவே இருக் கும். அம்மாதான் கால்பந்து. வீட்டில் ஆளா ளுக்கு அவளை உதைத்தனுப்புகிறார்கள். வாசலில் கீதாவை நிற்கச் சொல்லி தலை பின்னி விட்டுக் கொண்டிருப்பாள். திடீ ரென்று 'இரு, உள்ள பருப்பு தீயற வாசனை வர்றாப்ல இருக்கு... குக்கர்ல தண்ணி தீந்துட் டதோ பாக்கறேன்' என்று ஓடுவாள். அதற் குள் 'வெந்நீர் விளாவி வெச்சிட்டியாம்மா?' என்று கேள்வியால் இயக்குற ரமணி. நேர மாகிறது என்று குளிக்காமலாவது ஓடு வானேயொழிய ஒருநாள் கூட தண்ணீரில் குளித்ததில்லை. அப்பாவுக்கு, காபி அடுப் பிலிருந்து எடுத்த ஜோரில் தொண்டைக்குள் சூடாக இறங்க வேண்டும். நெருப்புக்கோழி. பின் கட்டில் கனகாம்பரம் புதராய் மண்டிக் கிடக்கிறது. பாட்டி பூஜைக்கு என்று உட் காருமுன் அதைப் பறித்துத் தயாராய் வைக்க வேண்டும். தானே பறிக்கிறேன் என்று அங்கங்கே முள் கிய்ச்சிக் கொண்டாள் பாட்டி. குளித்து முடித்து ஈரப்புடைவை சுற்றிக் கொண்டு குளிர் நடுக்க உள்ளே வரு வாள் பாட்டி. குளிருக்கு உடலும், வாயும், வாயில் புரளும் சுலோகமும் நடுங்கும்.

சபேசனுக்கு இன்ன வேலை என்றில்லை. சமையல் வேலைக்கு என்று துணை ஆளாய்ப் போய் வருவான். வேலை தெரி யாது. சமையற்கார சாம்புவையர் லிஸ்டு தந்தால் போய்ப் பலசரக்கு கடையில் கேட்டு வாங்கி வருதல், பாத்திரங்கள் சரி பார்த்து வாங்கி வைத்தல் - இத்தியாதி. சுற்று வேலைகள். ஆனாலும் மயில் கண் வேஷ்டி யும் ஜபர்தஸ்துமாய் வந்து நின்றால் ஆளை அசத்திப்பிடும். வாயில் வெற்றிலை பன்னீர்ப் புகையிலையுடன் மணக்க மணக்க 'அண்ணா அண்ணா' என்று பழகுவான் யாருமே அவனுக்கு அண்ணாதான் லேசான ரோஸ் பவுடர். கண்ணுக்குச் சிறிது வெளியே தெரியாத பவிஷில் மை தீட்டிக் கொண்டிருப்பான். சிறு சந்தன குங்குமப் பொட்டு.

இந்த லட்சணத்தில் மயங்கிப் போய்த் தான் ஜெகதாம்பாள் தன் பெண்ணுக்கு அவனை மாப்பிள்ளை யாக்கினாள். இவன் தான் ஹெட் குக் என்று நினைத்திருந்தாள் அவள். சபேசனால் வீட்டில் சும்மா இருக்க முடியவில்லை. வேறு எந்த வேலைக்கும் துப்பு கிடையாது. ஆனால் மனுசன் நல்ல சங்கீத ரசிகன். ஓரளவு மகாராஜபுரம் பாணி யில் பாடவும் செய்வான். மூடு வந்துட்டா, வாயில் புகையிலையோடு 'நகுமோ...' மணக் கும். கல்யாணங்களில் பெரிய கல்யாணத் தில் நல்ல நல்ல வித்துவான்களின் கச்சேரி வைத்தார்கள். அதற்கென்றே சாம்புவையரை சிநேகம் பிடித்துக் கொண்டு கூடப் புறப்பட்டு விட்டான்.

பாத்தியதைப்பட்ட பழைய வீடு இருந் தது. பாட்டன் முப்பாட்டன் என்று அவன் கையில் வந்து சேர்ந்த வீடு. இடம் கவலை இல்லை. கோவில் வாசலில் ஒய்ந்த நாளில் பூணூல், திருமாங்கல்யச் சரடு, குங்குமம், விபூதி, சுலோகப் புஸ்தகம் என்று விற்றால் பொழுது ஓடிவிடும். பிராமணார்த்தம் என்று அவ்வப்போது வேலை வந்தால் ஏற்றுக்

கொள்வான். கல்யாண சீசனில் வேலைக்குப் பஞ்சமில்லை.

வீட்டு நிர்வாகம் பற்றிக் கவலை ஒன்றும் இல்லை. பாட்டி இருக்கிறாள். பார்த்துக் கொள்ளுகிறாள். இந்த வயதிலும் பாட்டி உட்கார்ந்து சாப்பிட மனசில்லாதவள். அவளும் பொண்ணுமாய்ச் சமையல் வேலை என்று போய் வந்தார்கள். சுமங்கலிப் பிரார்த்தனை, சீமந்தம் என்று வீட்டு வைபவங்கள். தவிர தீபாவளி பட்சண வகையறாக்களும் நன்றாகச் செய்து, வரும்போது கையில் கொண்டு வருவார்கள் சபேசனுக்காகவும் குழந்தைகளுக்காகவும். இன்னிக்குத் தேதிக்கு சமையல் பெண்களுக்குப் போல கிராக்கி வேறு எந்த வேலைக்கும் இல்லை. குழந்தைகள் படிப்பு உட்பட சபேசனுக்கு சிரமந் தெரியவில்லை. அவனுக்குத் தெரிய வேண்டியதும் இல்லை. குழந்தைகள் அம்மாவின், பாட்டியின் பராமரிப்பில் வளர்ந்தார்கள். உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம் என்று சபேசன் கோயில் காளையாட்டம் திரிந்தான்.

உலகம் பற்றிய விசாரம் போதுமானதாய் இருந்தது சபேசனுக்கு. என்ன கிளின்டன் இப்பிடிப் பண்ணிட்டாரு, என்று அவனுக்கு ரொம்ப வருத்தம். டில்லில வெங்காயம் இந்த விலை விக்கிறதாமே... ஜனங்க என்ன பொழைக்கிறதா சாகிறதா, என்று அவனுக்கு ஆத்திரம் வந்தது. அதுவும் பேச்சுத் துணைக்கு ஆள் கிடைத்து விட்டால், கபாலீசுவரர் குளத்தங்கரையில் விலாவாரியாய் இதெல்லாம் பேசுவான்.

பசித்தால் வீடு திரும்பினால் போதும்.

பழைய சாதத்துக்குத் தண்ணியூத்தி வெச்சிருந்தாலும் சரி. யதேஷ்டம்

டிரான்சிஸ்டரை எடுத்துக் கொண்டு மாடிக்குப் போவான். பழைய பாடல்களின் ரசிகன் அவன். பாடல் மாற மாற இசை யார் – டி. சலபதிராவா, எஸ்.எம். சுப்பையா நாயுடுவா, ஆதிநாராயணராவா என்றெல்லாம் யோசனை ஓடும். பாடகர்களில் அவன் கண்டசாலா அபிமானி. ராஜ சேகரா... என்ன பாடல்! என்ன பாடல்!

கிதா இப்போது பிளஸ் டூ. அடுத்து அவளைக் கல்லூரிக்கு அனுப்புவதா? எந்தப் பாடம் எடுப்பது? அடுத்து அவள் வேலைக்குப் போகட்டுமா வேண்டாமா? சரி, ஏதாவது மாப்பிள்ளை பார்த்துத் 'தள்ளி' விட்டுறலாமா...? அவனுள் ஊடே ஊடே இப்படிக் கேள்விகள் வரும்.

இதுவரை குழந்தைகள் சார்ந்த எந்த முடிவையும் அவன் எடுக்கவில்லை. பள்ளிக் கூடத்தில் அம்மா சேர்த்தபின், அப்பா என்று கையெழுத்து போடப் போனான். அதுகளும் நன்றாய்ப் படித்தன. அதையும் சொல்ல வேண்டும். பாட்டி மேற்பார்வை. சும்மா சொல்லக் கூடாது. கிதா வீடு திரும்பத் தாமதமானால் வாசலுக்கும் உள்ளுக்குமாய் அவள் பிரசவ வலி வந்தாற்போல நடப்பாள் பார்க்க வேண்டும். சபேசனுக்கே சிரிப்பாய் வரும். அப்பா கவலைப்பட, பாட்டி சிரிக்க வேண்டும்... இங்கே எல்லாம் தலைகீழாய் இருந்தது.

ஜெகதாம்பாளுக்கு சபேசனும் ஒரு குழந்தை. அவ்வளவுதான். சில நெகிழ்ந்த நாட்களில், பௌர்ணமி என்ற நிலாப்பால் கொட்டிக் கொண்டிருக்கிற வேளைகளில், பாட்டி கற்சட்டியில் குழையக் குழையத்




தயிர்சாதம் பிசைந்து எடுத்துக் கொண்டு மாடிக்கு வருவாள். துளி மாங்காய்த் தொக்கும் வைத்துக் கொண்டு அவரவர் கையில் போடுவாள். வயிறு நிறக்க எல்லாரும் திருப்தியாய்ச் சாப்பிடுவார்கள். இதில் சபேசன் ரமணி இடையே, அப்பாவும் பிள்ளையும் என்ற பேதங்கூட இல்லாது போகும். அங்கே யாவரும் பாட்டியின் குழந்தைகள்.

**சு**ற்றிலும் பெரிய பெரிய சலவைக்கல் கட்டடங்கள். நடுவே திருஷ்டிப் பரிகாரம் போல இருந்தது வீடு. கோவில் பிராகாரத்




தில் ஜமா சேர்ந்தவர்கள் பாதி கேலியும், பாதிப் பொறாமையுமாய், 'அவனுக்கென்னப்பா, கொடுத்து வெச்ச ஆத்மா. இப்படியொரு ஏரியால வீடும் நிலமும்' என்பார்கள். சபேசனுக்கே அதில் பெருமை உண்டு. 'இன்னிக்கு இங்கத்த ரேட் என்ன தெரியுமாவே? நாற்பது!' என்பான் உற்சாகத்துடன்.

பின்பக்க மரத்தோடு கயிறு கட்டி துணி காயப் போட்டிருப்பார்கள். சுற்றி ஒரே காடு. எப்போ பாம்போ, தேளோ வீட்டுக்குள்ளே புகப் போகிறது... பாட்டி இன்றைக்கும் கிணற்றடியையும், அந்தப் பக்க பாத்ரூம், கழிவறை என்றுதான் பயன்படுத்துகிறாள். வீட்டில் டார்ச் கிடையாது. பின்கட்டு விளக்கு அழுது வழியும். ராத்திரி பாட்டி எழுந்து பின்கட்டுக்குப் போனால், கவனித்து சபேசனும் எழுந்து கூடத் துணைக்குப் போனான்.

எத்தனையோ பேர் வந்து வந்து அந்த இடத்தைக் கேட்டார்கள். காரில் எல்லாம் வந்து உட்கார்ந்து 'எவ்வளவு எதிர்பார்க்கறீங்க? நாற்பதுதானே? ஒரே பேமெண்ட். ரெடி கேஷ். நீங்க ஒரு வார்த்தை சொல்லுங்க. நாளைக்கே பத்திரம் பதிஞ்சிறலாம்' என்று புன்னகைத்தார்கள். நல்ல பார்ட்டிதான். தெரிகிறது.

அவர்களிடம் ஒரு சிரிப்புடன், தான் விற்பதாக இல்லை, என்று சொல்லவே அவனுக்குப் பெருமிதம். சபேசன் ஏமாளி அல்ல. அவனிடம் யார் பருப்பும் வேகாது. 'தலையைக் கிலையை ஆட்டிப் பிடாதேடா பாவி... ஆச்சி, என் காலம் முடியட்டும். அதுக்கப்புறம் என்ன வேணா பண்ணிக்குங்கோ. என் தலை இங்கதான் சாயணும். புரிஞ்சதா?' என்றாள் பாட்டி. 'நான் விக்கவும் போறதில்லை. உன் தலை சாயவும் போறதில்லை' என்றான் சபேசன்.

கீதா பள்ளிக்கூடம் போய்வர, ரமணி இன்டர்நெட் க்ளாஸ் போக இந்த இடம் நல்ல வசதி. நாலு வீடு தள்ளினாற் போல பஸ் ஸ்டாப். பயம் கிடையாது. தெரு ஆரம்பத்தில் அவ்வப்போது அரசியல் கூட்டம் போட்டால் சபேசன் தவறாமல் ஆஜர்.

ரமணியைவிட குழந்தை கீதா நன்றாய்ப் படித்தாள். ரமணி பி.எஸ்ஸி. விவேகானந்தா. ஒரு வருடமாகிறது. வேலைக்குப் போட்டுக் கொண்டிருக்கிறான்.

ரமணியின் கையெழுத்து அத்தனை அழகாய் இருக்கும். வெளியே போக வர என்று வீட்டு ஹெர்குலிஸ் சைக்கிளை எடுத்துப் போகிறான். சபேசனின் தாத்தாவிடமிருந்து கைமாறி கைமாறி, இப்போதும் எண்ணெய்ப் பொலிவுடன் அதைப் பார்க்க நன்றாய்த்தான் இருக்கிறது. பாவம் அவன் நண்பர்கள் எல்லாரும் இரு சக்கர வாகனம் வைத்திருக்கிறார்கள். அப்பாவிடம் கேட்டால், 'அம்மாட்டாக் கேட்டுக்க' என்று விட்டார். பிராமணார்த்தம் பார்த்து அவர் கையில் புழங்கும் காசில் பொடிமட்டை வாங்கலாம், அவ்வளவுதான்.

ரமணி எந்த ஊரில் என்ன வேலை என்று உட்காரப் போகிறானோ, அதற்கு ஏதும் செலவு ஆகுமோ தெரியாது. திடுதிப்பென்று கீதாவுக்கு ஏதும் வரன் குதிர்ந்தால் என்ன செய்யப் போகிறோம் தெரியாது. குழந்தை இரண்டு பேரும் மொட்டாய் நிற்கிறார்கள். மாலையைத் தொடரும் இரவு மாதிரி, திடுதிப்பென்று அவர்கள் வாழ்க்கை திசை மாறி விடும். அதைப் பற்றிய கவனம் சபேசனுக்கு இருந்தது. இருந்தும் வெளி மனிதன் போல அவன் அதை வேடிக்கையான எதிர்பார்ப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

நம்பக்கூட முடியவில்லை. இப்போது வயது நாற்பதையும் கடந்தாகி விட்டது. வாழ்க்கை ஓடிவிடவில்லையா என்ன? இனி சொச்ச வருஷமும் ஓடிவிடும், என்கிற அசட்டு நம்பிக்கை அவனுக்கு இருந்தது.

ஆனால் அவன் வாழ்விலும் நிகழ்ந்தது மாற்றம். அதிரடி மாற்றம். நிலைமையை அப்படியே புரட்டிப் போட்ட தலைகீழ் மாற்றம்.

(தொடரும்)




1999 ஜனவரி 3
வெகுதான்ய மார்கழி 19
மலர் : 57
இதழ் : 23

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# அட, ஸ்ரீநிவாஸா!

டெலிவிஷனில் கர்னாடக சங்கீதத்துக்கென்றே தனி சானல் தொடங்க வேண்டும் என்று ஆர்வமாக யோசனை தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கருத்து ஒரு வித்வத் சபை தீர்மானமோ, வித்வான்கள் சங்கத்தின் கோரிக்கையோ அல்ல... தெரிவித்தவர் சாக்ஷாத் தூர்தர்ஷனின் சென்னை கேந்திர இயக்குனரேதான்!

பொறுப்புள்ள உயர் அதிகாரியான இயக்குனர் என்.ஜி. ஸ்ரீநிவாஸா வெளிப்படுத்தியதால் இந்த யோசனை முக்கியத்துவம் பெறும் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் அது நடைமுறைக்கு வந்தால் 'அட ஸ்ரீநிவாஸா!' என்று அங்கலாய்க்கும்படியாகத்தான் இருக்குமேயொழிய 'அடா அடா!' என்று பாராட்டும்படியிருக்காது.

கர்னாடக சங்கீதம் என்ன பாவம் செய்தது...? இப்படித் தனிமைப்படுத்தி ஓரங்கட்ட அது என்ன ஊழல் அரசியல்வாதியா!

பாரம்பரிய கலைகளைத் தனி சானலில் பிரித்துத் தந்தால் அதில் ஏற்கெனவே ஆர்வமுள்ள சிறு பிரிவினர் மட்டுமே அந்த சானலை நாடுவார்கள். மற்றவர்கள் பிரதான சானலை ஆக்கிரமிக்கும் சினிமா சார்ந்த கேளிக்கை நிகழ்ச்சிகளைத்தான் தொடர்ந்து பார்ப்பார்கள்.

வானொலியில் செய்வதுபோல் கர்னாடக இசைக்கும், நாட்டியத்துக்கும் இதர பாரம்பரிய கலைகளுக்கும் கணிசமான நேரம் ஒதுக்கி, நாள் முழுதும் நீடிக்கும் தொலைக்காட்சி ஒளிபரப்பினூடே அவ்வப்போது அந்தக் கலை நிகழ்ச்சிகள் இடம் பெறச் செய்ய வேண்டும். 'பிரைம் டைம்' என்று குறிப்பிடப்படும் பார்வையாளர்கள் விரும்பும் நேரத்தில் இந்த நிகழ்ச்சிகள் இடம் பெறுவது மிக முக்கியம். அப்போதுதான் புதிய ரசிகர்களை இந்தக் கலைகளின்பால் கவனம் திருப்பச் செய்யலாம்.




ஈர்க்கப்படும் புதிய ரசிகர்கள் மீண்டும் மீண்டும் அத்தகைய நிகழ்ச்சிகளை நாடும்படி செய்யும் பொறுப்பு, நிகழ்ச்சிகளை வழங்கும் கலைஞர்களுக்கு மட்டுமின்றி நிகழ்ச்சியைத் தயாரிக்கும் தூர்தர்ஷனுக்கும் இருக்கிறது. இரு தரப்பினரும் திறம்பட ஒருங்கிணைந்து செயல்பட்டால் இது சாத்தியமே.

தொலைக்காட்சியின் இரட்டை ஆற்றலை (ஒலி-ஒளி) திறமையாகவும் முழுமையாகவும் பயன்படுத்த வேண்டும். கடனுக்குப் பழைய ஜமுக்காளம் விரித்து, பிளாஸ்டிக் பூ அல்லது மண் பொம்மை ஜோடனை சூழலில் ஒரு பாடகரைப் பாட வைத்தால் அவரது விசிறிக்கேகூட வெறுப்புதான் ஏற்படும். மாறாக, நிகழ்ச்சித் தயாரிப்பாளர், காமெரா கலைஞர் ஆகியோரின் கற்பனை சக்தி, பாடகரின் மனோதர்மத்துடன் இணைந்து பணியாற்றுமானால் சங்கீதத்துக்குக் கவித்துவமான வடிவங்கள் தரலாம்.

வாத்தியங்களை வாசிப்பதிலுள்ள நுணுக்கங்கள், நடனத்தின் பாத-ஹஸ்த வேலைப்பாடுகள் எல்லாவற்றையும் கலை தெரிந்த நிகழ்ச்சித் தயாரிப்பாளர் மற்றும் காமெரா கலைஞரால்தான் அருமையாக எடுத்துக்காட்ட முடியும்.

வெறும் கச்சேரிகள் மட்டுமின்றி, இசை நடனம் ஆகியவற்றை ரசிப்பதற்கான அடிப்படைகள், கலை நுணுக்கங்கள், செயல்முறை விளக்கங்கள், கலைகளின் வரலாறு என்று கணக்கற்ற வகைகளில் கண்ணையும் கருத்தையும் கவரும் நிகழ்ச்சிகளை வழங்க வாய்ப்பிருக்கிறது.

தூர்தர்ஷனில் தேவை தனி சானல் அல்ல; அயரா முயற்சியும் கணிசமான உழைப்பும் விஷயம் தெரிந்தவர்களின் உதவியையும் பங்கேற்பையும் கேட்டுப் பெறும் பரந்த மனமும்தான்.

## ஆசிரியர்களா, அரக்கர்களா?

**மா**தா, பிதா, குரு, தெய்வம் என்று கடவுளுக்கும் முன்னதாகக் குறிப்பிடப்படுபவர் ஆசிரியர். அன்பு தருவோர் வரிசையில் இப்படி முக்கியமான இடத்தைப் பெறுகிற ஆசிரியர்கள் அரக்கர்களாக மாறினால்...? அது சமுதாயச் சீரழிவின் ஒரு பயங்கரமான அடையாளமன்றி வேறென்னவாக இருக்க




முடியும்?

மத்தியப் பிரதேசத்தில் இரண்டு குழந்தைகள் தங்கள் பள்ளி ஆசிரியரால் அடித்து நொறுக்கப்பட்டதில் இறந்தே போய் விட்டன! இது வெளிச்சத்துக்கு வந்திருக்கும் குரூரம். ஆனால் இந்தியாவின் ஆயிரக்கணக்கான பள்ளிகளில், குழந்தைகள் தினம்தினம் ஆசிரியர்களிடம் அடி வாங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பது எந்தச் செய்தித்தாளிலும் வெளிவராத உண்மை.

கல்வியும் ஒழுக்கமும் புகட்டும் முயற்சியில் இளம் உள்ளங்களைக் கட்டிப்போடுவது பெரிய சவால்தான். ஆனால் அன்பினாலும் சுவாரஸ்யமாகக் கற்பிக்கும் ஆற்றலினாலும் அதைச் சாதிக்கும் நிலையில் நமது ஆசிரியர்கள் இல்லை! அதனால்தான் அடி, உதை என்று அரக்கத்தனமான ஆயுதங்களைக் கையாண்டு தங்கள் இயலாமையை மூடி மறைக்கிறார்கள்.

பள்ளிகளில் தண்டப் பிரயோகத்தைத் தடை செய்யும் சட்டம் கொண்டு வரலாம். ஆனால் சட்டம் மனமாற்றத்தை ஏற்படுத்தாது. ஆசிரியர்கள், மாணவர்களைத் தமக்குப் பணியாற்ற வந்துள்ள வேலைக்காரச் சிறுவர்களாகவோ அல்லது தங்கள் பிராணனை வாங்க வந்துள்ள விரோதிகளாகவோ கருதிச் செயல்படும் அவலத்துக்கு முடிவு வராது.

ஒவ்வொரு குழந்தையும் அறிவும் ஆற்றலும் அடங்கிய விதை. அது வளர்ந்து விருட்சமாகி, நிழலும் பயனும் தருவதற்கான உரமும் நீரும் பராமரிப்பும் வழங்கும் இடம்தான் பள்ளி. அதில் பணியாற்றுவோருக்குத் தங்கள் பொறுப்பு குறித்த தெளிவான பார்வையும் பண்பட்ட உள்ளமும் இருக்க வேண்டும். அத்தகைய ஆசிரியர்கள் உருவாகும்போதுதான் அனைவருக்கும் கல்வி என்ற முயற்சி அர்த்தமுள்ளதாக இருக்கும்.

ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகள் ஆயிரக்கணக்கில் அரைவேக்காடான ஆசிரியர்களை உருவாக்கினால்...

அரசுப் பள்ளிகளில் லஞ்சம் கொடுத்து ஆசிரியர் பணி பெற வேண்டியிருந்தால்...

தனியார் பள்ளிகளில், வாங்குகிற சம்பளத்தைக் காட்டிலும் இரண்டு மடங்குக்குக் கையெழுத்துப் போட வேண்டிய கட்டாயம் இருந்தால்....

ஆசிரியர் சமுதாயத்தில் ஆரோக்கியம் எங்கே இருக்கும்?

# பட்டதாரி ஆசிரியர்களுக்கு இரண்டு பக்கமும் இடி!

துவக்கப் பள்ளிகளிலும், உயர்நிலைப் பள்ளிகளில் ஆறுமுதல் எட்டு வகுப்புகள் வரையிலும் பாடம் எடுக்க இடை நிலை ஆசிரியர்கள் நியமிக்கப்படுகிறார்கள். இவர்கள் பிளஸ் டூ வரை படித்தவர்கள்.

மேல் நிலை வகுப்புகளான பிளஸ் ஒன், மற்றும் பிளஸ் டூ வகுப்புகளுக்குப் பாடம் சொல்லித் தருவதற்கு, எம்.ஏ. அல்லது எம்.எஸ்ஸி படித்த முதுநிலைப் பட்டதாரி ஆசிரியர்கள் நியமிக்கப்படுகிறார்கள்.

இவற்றுக்கு இடைப்பட்ட ஒன்பது மற்றும் பத்தாம் வகுப்புகளுக்குப் பாடம் நடத்த பட்டதாரி இளைஞர்கள், பி.எட். பயிற்சி முடித்தபின், ஆசிரியர்களாக நியமிக்கப்படுகிறார்கள்.

இதில் சிக்கல் என்னவென்றால், எண்பதுகளின் தொடக்கத்தில் டிகிரி முடித்து ஆசிரியர் பயிற்சி பெற்ற பட்டதாரி இளைஞர்களுக்கு இன்னும் அரசாங்கம் வேலை கொடுக்கவில்லை. இவர்களுக்குப் பின்னால் பல வருடங்கள் கழித்து, பிளஸ் டூ படித்தவர்கள் இன்று பள்ளிக் கூடங்களில் ஆசிரியர்களாக வேலைக்குச் சேர்ந்து, கை நிறைய சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பட்டதாரிகள், வேலை வாய்ப்புக்குக் காத்திருந்து காத்திருந்தே, அரசு உத்தியோகத்தில் சேருவதற்கான அதிகபட்ச வயதான முப்பத்தைந்தைக் கடந்துவிட்டு, இருளான எதிர்காலத்தில் சூழ்கியிருக்கும் பரிதாபம் நிலவுகிறது.

மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி என்பது போல, இவர்களை விட குறைந்த கல்வித் தகுதி உடைய இடை நிலை ஆசிரியர்கள் பள்ளியில் வேலை பார்த்த படியே, ஏதாவது ஒரு பல்கலைக்கழகத்தில், டிகிரி படிப்பில் சேர்ந்து, பட்டம் வாங்கி, பட்டதாரி ஆசிரியர்களாக பிரமோஷனும், ஊதிய உயர்வும் பெற்று விடுகிறார்கள். எனவே, பட்டதாரி ஆசிரியர்களுக்கான காலி இடங்களில் பெரும் பகுதி, இவர்களால் நிரப்பப்பட்டு விடுகிறது.

நிலைப்பள்ளிக் கூடங்களில் பிளஸ் ஒன் மற்றும் பிளஸ் டூ வகுப்புகளுக்குப் பாடம் நடத்த நியமிக்கப்படுகிற முதுகலைப் பட்டதாரி ஆசிரியர்கள், அந்த இரண்டு வகுப்புகளுக்கு மட்டுமே பாடம் எடுக்காமல், ஒன்பதாம், பத்தாம் வகுப்புகளுக்கும் பாடம் நடத்துகிறார்கள். அப்போதுதான், ஓர் ஆசிரியர் ஒரு வாரத்தில் எடுக்க வேண்டிய குறைந்தபட்ச பீரியட்கள் விதி பூர்த்தியாகும். இதனாலும் பட்டதாரி ஆசிரியர்களின் பணி வாய்ப்பு வெகுவாக பாதிக்கப்படுகிறது.

"பிரச்னை அத்துடன் முடியவில்லை சார்! பட்டம் முடித்துவிட்டு, காவல் துறை, மின்சார வாரியம் போன்றவற்றில் வேலைக்குச் சேருகிறவர்கள், வேலை வாய்ப்பு அலுவலகத்தின் பட்டியலிலிருந்து, தங்கள் பெயரை நீக்குவதில்லை. இதனால், ஆசிரியர் வேலைக்கு நியமன உத்தரவு வரும் சமயம், தங்கள் வேலையை ராஜினாமா செய்து விட்டு, ஆசிரியராக வேலைக்குச் சேர்ந்து விடுகிறார்கள். (கணிசமான சம்பளம்! ஏராளமான லீவு, டியூஷன் வேறு. கேட்பானேன்!) இதனால் ஆசிரியர் வேலைக்காகக் காத்திருக்கும் பட்டதாரிகளின் வாய்ப்பு குறைகிறது.

இவர்கள், தங்கள் பிரச்னையை அரசின் கவனத்துக்குக் கொண்டு போகச் செய்த முயற்சிகள் அனைத்தும் பலனின்றிப் போய் விட்டதாகக் குமுறுகிறார்கள்.

அண்மையில் பாதிக்கப்பட்டுள்ள பட்டதாரி ஆசிரியர்கள் ஒன்று திரண்டு, சென்னைக்கு வந்து, அரசு விருந்தினர் மாளிகை முன் ஒருநாள் அடையாள உண்ணாவிரதம் இருந்தனர். ஆண்களும், பெண்களுமாய்த் திரண்டிருந்த அவர்களைச் சந்தித்தபோது, மனம் குமுறிப் பேசினார்கள்.

"மத்திய அரசு ஆசிரியர்களுக்கு இணையான ஊதியம் வேண்டும் என்று போராடிய இடை நிலை ஆசிரியர்களுக்குத் தமிழக அரசு, ஊதிய உயர்வும் வழங்கி விட்டது. ஆனால், ஒரு விஷயத்தை இருதரப்புமே வெகு சௌகரியமாக மறந்து விட்டனர். மத்திய பள்ளிக் கூடங்களில், ஆறு, ஏழு, எட்டு வகுப்பு

களுக்கு ஆசிரியர்களாகப் பணியாற்ற பிளஸ் டூ படித்திருந்தால் மட்டும் போதாது; பட்டதாரிகளாயிருக்க வேண்டும்.''

இவர்கள் பிரச்னைக்குத் தீர்வுதான் என்ன?

இன்று ஆறு, ஏழு, எட்டாம் வகுப்பு களுக்கு - குறிப்பாக கணிதம், அறிவியல் பாடங்களில், புதிய பாடத்திட்டத்தின்படி பாடம் நடத்துவதற்கு - வெறும் பிளஸ் டூ படித்த இடைநிலை ஆசிரியர்களைவிட, பட்டதாரி ஆசிரியர்களை நியமித்தால், மாணவர்களுக்கும் நல்லது; பட்டதாரி ஆசிரியர்களுக்கும் வேலை கிடைக்கும்.

இடைநிலை ஆசிரியர்களாகச் சேர்ந்து டிகிரி முடிக்கிறவர்களுக்கு இப்போது அளிப்பது போல, பதவி உயர்வு அளிக்காமல், இன்கிரிமென்ட் மட்டும் தரலாம். அல்லது பட்டதாரி ஆசிரியர்களின் காலி இடங்களில் பதவி உயர்வு மூலம் பாதி இடங்களை நிரப்பிவிட்டு, மீதி இடங்களை, வேலை வாய்ப்புக்காகக் காத்திருக்கும் பட்டதாரி ஆசிரியர்களைக் கொண்டு நிரப்பலாம்.

இது விஷயமாய், எம்.ஜி.ஆர் ஆட்சியின் போது எடுக்கப்பட்ட முக்கியமான ஒரு முடிவு பற்றிக் குறிப்பிடலாம். இடைநிலை ஆசிரியர்கள் நியமனத்தின் போது, இட ஒதுக்கீட்டு விதிகளின்படி ஒரு குறிப்பிட்ட பிரிவில் தகுதியானவர்கள் இல்லாத சூழ்நிலை ஏற்பட்டபோது, பட்டதாரி ஆசிரியர்களிடம், 'இடை நிலை ஆசிரியராக வேலை பார்க்க எந்த ஆட்சேபணையுமில்லை' என்று எழுதி வாங்கிக் கொண்டு, இ.நி. ஆசிரியர்களின் ஊதிய விகிதத்திலேயே வேலைக்கு நியமித்தார். ஆனால், இந்த முறை அதன் பிறகு பின்பற்றப்படவில்லை.

''இன்று வேலை இல்லாத பட்டதாரிகள், ''பட்டதாரி ஆசிரியர்களாகத்தான் வேலை வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கவில்லை. இடைநிலை ஆசிரியர்களாகவும், பணியாற்றத் தயார்!'' என்கிறார்கள்.

''இன்றுள்ள மேம்படுத்தப்பட்ட கல்வித் திட்டத்தை நடைமுறைப்படுத்த, ஆசிரியர்களுக்கான குறைந்தபட்ச கல்வித் தகுதியை டிகிரி என்று மாற்ற வேண்டியது அவசியம்!'' என்கிறார் ஓய்வு பெற்ற கல்வித் துறை உயர் அதிகாரியொருவர்.

இது விஷயமாக அரசு செயல்பட வேண்டுமானால் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பும் பெற்றோர்களிடம் ஒரு விழிப்புணர்ச்சி வந்தாக வேண்டும். ○

**— எஸ். சந்திரமௌலி**

படம் : ஸ்ரீஹரி

• அமைதியான உண்ணாவிரதம்...



"அமெரிக்கா, ஈராக்கின் மீது தாக்குதல் நடத்தியதன் பின்னணியைப் புரிந்து கொள்ள முடிகிறது" என்று கருதுபவர்களில் கூட கணிசமானவர்களுக்கு 'பிரிட்டனுக்கு இந்த விஷயத்தில் என்ன அக்கறை? அமெரிக்காவோடு அதுவும் சேர்ந்து தாக்குதல் நடத்துவானேன்?' என்ற கேள்விகள் தோன்றியிருக்கும்.

பிரிட்டனின் இந்த அக்கறை சமீபத்தில் ஏற்பட்ட ஒன்றல்ல. 1756ல் குவைத் தனி நாடாக உருவான கொஞ்ச காலத்திலேயே ஜெர்மனி தனது ஆதிக்கத்தை குவைத்தின் மீது செலுத்தத் தொடங்கியது! பெர்லினிலிருந்து பாக்தாத் வரை செல்லும் ரயில் பாதையை குவைத் வரை நீட்டித்தது. ஜெர்மனி தங்கள் நாட்டையே அபகரித்துக் கொண்டு விடுமோ என்ற பயம் ஏற்பட,



# ஈராக் மீது தாக்குதல் ஏன்?

குவைத் அரசு பிரிட்டனுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது. அதன்படி குவைத்தின் அன்னிய நாட்டு விவகாரங்களை பிரிட்டன் தான் தீர்மானிக்கும்.

தன்னுடைய ராணுவத்தை குவைத்தில் தொடர்ந்து நிறுத்தி வந்த பிரிட்டன், 1948 ல் தான் அதை விலக்கிக் கொண்டது. அதாவது குவைத் நிஜமான சுதந்தரத்தைப் பெற்றது. ஆனால் போதாத காலம். "குவைத் எங்களுக்குச் சொந்தமானது" என்று ஈராக் அறிவிக்க, எந்த சூப்பர் பவரின் நேரடி ஆதரவும் இல்லாத குவைத் தவித்துப் போனது. ஆனால் அரேபிய நாடுகளின் கூட்டமைப்பு குவைத்தை தனி நாடாக அங்கீகரிக்க, ஈராக் தனது 'உரிமைக் குரலை' விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று.

இந்த நிலையில் எட்டு வருடங்களுக்கு முன் ஈராக் குவைத்தை ஆக்கிரமிக்க, பிரிட்டன் தனது பழைய நண்பனான குவைத்தைக் காக்க அமெரிக்காவுடன் கை கோத்துக் கொண்டு களம் இறங்கியது. இப்போது, "பலவித ரசாயன ஆயுதங்களை சதாம் ஹுசேன் தொடர்ந்து தயாரித்து வருகிறார். இவற்றினால் குவைத் உட்பட அதன் அண்டை நாடுகளுக்குப் பெரும் ஆபத்து விளையக்கூடும். அதனால்தான் இந்த நடவடிக்கை" என்று பிரிட்டிஷ் பிரதமர் டோனி ப்ளேர் கூறுகிறார். ஆனால் இதை அப்படியே ஒப்புக் கொள்ளும் நாடுகள் மிக மிகக் குறைவுதான்.

எட்டு வருடங்களுக்கு முன் அமெரிக்கா நடத்திய தாக்குதலின் போது ஆதரவு தெரிவித்த பல நாடு கள், இப்போது அமெரிக்காவைக் கண்டிக் கின்றன அல்லது மௌனமாக இருக்கின்றன. இதற்கு முக்கிய காரணம் : முன்பு ஈராக் ஒரு குற்றவாளி – அண்டை நாட்டின் மீது படையெடுத்த அராஜகவாதி. ஆனால் இன்றைக்கு அது ஒரு பரிதாபமான நாடு.

அமைதி ஒப்பந்தத்தை ஈராக் ஒப்புக் கொள்ளாததாலும், குவைத்தைத் தனி நாடாக அங்கீகரிக்காததாலும், ஈராக் மீது ஐ.நா. சபை விதித்துள்ள பல்வேறு தடைகளினால், அதன் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. சென்ற வளைகுடாப்



போருக்கு முன்பே அது ஏற்றுமதி செய் திருந்த பெட்ரோலுக்காக வரவேண்டிய சுமார் நாற்பது கோடி டாலரையும் ஐ.நா முடக்கி வைத்திருக்கிறது. தன்னுடைய அடிப்படை உணவுத் தேவைகளுக்குக் கூட இறக்குமதியை நம்பியிருக்கும் நாடு ஈராக். இதனால் பசி மற்றும் கலப்பட உணவால் பல குழந்தைகள் அங்கு இறந்து கொண்டு இருக்கின்றன!

இவற்றின் காரணமாகவும், "ஐ.நா. சும்மா யிருக்கும் போது இந்த அமெரிக்கா என்ன உலகத்துக்கே ஏதோ நாட்டாண்மை போலச் செயல்படுவதா? மோனிகா விவகார அசிங் கங்களையும், நம்பிக்கையில்லாத் தீர்மானம் அளித்த அவமானத்தையும் திசை திருப்பத் தான் இந்தத் தாக்குதல்" என்று கருதுவதா லும்தான் பல நாடுகள் மனம் மாறியுள்ளன.

இந்தியா வெளிப்படையாகவே தனது அதிருப்தியைத் தெரிவிக்க, ரஷ்யா தனது தூதரை வாஷிங்டனிலிருந்து வாபஸ் பெறக் கூடிய அளவுக்குப் போயிருக்கிறது. பிரான்ஸ், அமெரிக்காவின் சட்டாம் பிள்ளைத் தனத் தைக் குறைகூற, "உலகில் அதிகார மையங் கள் பரவலாக்கப்பட வேண்டும் என்ற லட்சி யத்துக்கு எதிரானது இந்தத் தாக்குதல்" என்று சீனா ஆள்காட்டி விரலை நீட்டி யிருக்கிறது.

இவை ஒருபுறமிருக்க, நாடு பொருளா தாரத்தில் சரிந்திருந்தாலும், சதாம் ஹுசேன் தமக்காகப் புதுப்புது அரண்மனைகளைக் கட்டிக் கொள்கிறார் என்றெல்லாம் செய்தி கள். ஆனால், உள்ளூரில் சதாம் ஹுசேன் இன்னமும் ஹீரோவாகத்தான் இருக்கிறார். தவிர வேறு வகையான பிரசாரம் ஒன்றும் அவருக்கு வலு சேர்க்கிறது. சதாம் ஹுசேன் பதவியிலிருந்து நீக்கப்பட்டால், ஈராக்கின் வடபகுதியை துருக்கியும், தென் பகுதியை ஈரானும் ஓரளவாவது ஆக்கிரமித்துக் கொள்ளும் என்பதுதான் அந்தப் பிரசாரம். இதை அரபு நாடுகள் விரும்பாததால் சதாம் ஹுசேனை அவை வெளிப்படையாக எதிர்க்கவில்லை.

உலக அளவில் தங்களுக்கு நேரடி சவா லாக விளங்கிய சதாம் ஹுசேனை அவரது நாட்டு மக்களே தூக்கி எறிந்து விடுவார்கள் என்று அமெரிக்கா கண்ட கனவு பலிப்பதா யில்லை. அதனால் ஏற்பட்ட வெறியும் கூட இந்தத் தாக்குதலுக்கு ஒரு காரணம் என்று சொல்லப்படுகிறது.

— ஜி.எஸ்.எஸ்.

**தேர்தல் காலங்களில் வோட்டுக் கேட்டு வீடு வீடாக வேட்பாளர்கள் வருவது சகஜம். வென்ற வேட்பாளர் எம்.எல்.ஏ.வாகி 'வேனிலிருந்தே' கும்பிட்டபடி வீதி வழியே நன்றி சொல்லி அடுத்த தேர்தல் வரை கம்பி நீட்டுவது அதைவிட சர்வ சகஜம். தாம் தேர்ந்தெடுக்கப்பட்ட 32-வது மாதத்தில் சுமார் முந்நூறுக்கும் மேற்பட்ட குக்கிராமங்களுக்கு நடைப்பயணம் செய்தார், பெருந்துறை சட்டமன்ற உறுப்பினர் நா. பெரியசாமி (இ.கம்யூ). அவரது நடைப்பயணத்தில் நாமும் ஒரு சுற்று வந்ததில்....**



• குடிசைப் பகுதிகளில் எம்.எல்.ஏ-வோடு நல்லகண்ணுவும்...

"ஏண்டாப்பா. வீதிக்கு ஒரு பைப் போட்டா போதுமா? வீட்டுக்கு வீடு எப்படா போடப் போறே?"

– எடுத்த எடுப்பில் திருவேங்கடம்பாளையத்தில் அதட்டும் மூதாட்டி.

"ரேஷன் கார்டு கொடுக்கறேன்னு சொல்லி எத்தனை நாளாச்சு? எம்.எல்.ஏ. வீட்டு வாசல்ல வந்து நிக்கிறாரு. போய்க் கேளுங்க."

– கணவனை ஏவி விட்டு வீட்டுக்குள்ளேயே முடங்கும் பெண்மணி.

"பெரிய பெரிய வீதிகள்ல எல்லாம் ரோடு போட்டுட்டீங்க. சரி. இந்த சந்து பொந்துக்குள்ளெல்லாம் எப்ப 'கப்பிக்' கல்லாவது போடப் போறீங்க?"

"எத்தனை நாளைக்கு 'போர்' தண்ணியக் குடிச்சுக் குடிச்சு நாக்கு செத்துப் போறது? காவிரித் தண்ணி எப்ப வரும்னு சொல்லிட்டு அப்புறம் போங்க...!"

"போர் போட்டு தண்ணி டேங்க் கொண்டு வந்து மோட்டாரும் வச்சீங்க. எல்லாஞ்சரி. பாருங்க மோட்டார் ரிப்பேராகி பதினஞ்சு நாளாச்சு. ஒரு மோட்டார் ரிப்பேராகிப் போனா அதை சரிப்படுத்தறவரைக்கும் வேறொரு மோட்டார் வச்சுக் கொடுக்கலாம்ல?"

– இப்படி எம்.எல்.ஏவிடம் கேட்டது எல்லாமே உரிமைக் குரல்கள்.

அவர்களின் குறைகளை உடனுக்குடன் கையோடு கொண்டு வந்திருந்த கைபையில் குறித்துக் கொள்ளும் இளைஞர். முன்கூட்டியே கிராமத்தில் எம்.எல்.ஏ. வருகையை அறிவிப்புச் செய்துவிட்டு அடுத்த கிராமத்திற்கு விரையும் ஒரு வேன். துடிப்பாய் அதில் இளைஞர் பட்



• "ஏண்டாப்பா வீட்டுக்கு வீடு எப்பப் போடப் போறே?"



• எம்.எல்.ஏ. நா. பெரியசாமி



நிற்கும் மனுக்கள்.

நாம் எம்.எல்.ஏவுடன் சென்ற சிலம் பட்டி, தொட்ட சிலம்பட்டி, புத்தூர் புதுப்பாளையம், திருவேங்கடம்புதூர், சமாதானபுரம், ஓலப் பாளையம், சிலேட்டபுரம் உள்ளிட்ட பத்துப் பதி னைந்து கிராமங்களிலும் நெளிந்தது ஒரே மாதிரியான பிரச்னைகள். அனைத்துமே – பெரும்பாலும், 'நடை பாதை சரியில்லை. விளக்கு வசதி வேண்டும். தண்ணி ஒழுங்கா வரு வதில்லை...' என்கிற ஊராட்சி மன்றத்து வேலைகள்தான்.

விதிவிலக்காக வந்த ஒரு சில பிரச் னைகள்: சமாதானபுரத்திற்கு ஒரு சமத்துவபுரம் வேண்டும். சிலம்பட்டி ...க்கப் 'பஞ்சாயத்து டி.வி. வைக்கக்

# ஊரூராகச் சென்ற வித்தியாசமான எம்.எல்.ஏ!

கட்டிக் கொடுக்கப்பட்ட அறை (புதியது) விரிசலடைந்து விட்டது...' என்று ஒன்று. மற்றொன்று 'எங்களூரில் மயானமே இல்லை. சாலையோரத்திலே புதைக்கிறோம்...' – இந்தக் குறைகளைக் கூட அந்தந்த வார்டு உறுப்பினர்களே மனுக்களாய் எழுதி எம்.எல்.ஏ.விடம் கொடுப்பது சகஜமாய். ஏன் இப்படி?

"ஊராட்சி மன்றத்துலயும் கேட்டுக்கிட்டுத்தான் இருக் கிறோம். அங்கே கேட்டா நிதியில்லேங்கறாங்க. நிதிக்கு எம்.எல்.ஏகிட்ட சொன்னாத்தான முதலமைச்சர்கிட்டே போவாரு...?"

டாலம். எம்.எல்.ஏ. செய்த வேலைகள் அடங்கின சிறு புத்தக விநியோகம்.

எம்.எல்.ஏ.வுடன் கூடவே அந்தப் பகுதி ஊராட்சித் தலைவர், வார்டு கவுன்சிலர்கள், ஊரின் முக்கிய பிரமுகர்கள். பிரச்னைகளை எதிர்கொண் டதை விட அதிகமாய்க் கைகுலுக்க வரும் கைகள். பொன்னாடை போர்த்தும் பிரமுகர்கள். ஆரத்தித் தட்டு நீட்டி பொட்டிட்டு வரவேற்கும் பெண்கள். பரஸ்பர அன்புப் பகிர்வின் அடையாளமாய் தட்டில் ஆரத்திப் பெண்களுக்குப் பத்து ரூபாய் 'கிப்ட்'. அத் துடன் எம்.எல்.ஏவிடம்



• சாக்கடைப் பிரச்னை

– வெடுக்கென்று கேட்ட சரஸ்வதி, கருமாண்டிபாளையம் பேரூராட்சி உறுப்பினர். அனைவருக்குமே பொறுமையாய் எம்.எல்.ஏவின் பதில். அதிலும் குடிதண்ணீருக்கு அவர் சொல்லிய பதில் லட்சம் தேறும்.

"வோட்டுக் கேட்டு வரும்போது சாலை சரியில்லைன்னீங்க. போட்டுக் கொடுத்தோம். தண்ணியில்லேன்னீங்க. டேங்க் அமைச்சு போர் போட்டு வீதிக்கு வீதி விட்டோம். காவிரித் தண்ணி பத்தி அரசுத் தரப்புல பேச்சு நடந்துட்டுத்தான் இருக்கு. உடனடியா ஆத்திரப்பட்டா, அவசரப்பட்டா முடியுமா?"

பிரச்னைகள் ஆங்காங்கே நிறைய எதிர்கொண்டாலும் பல உயிரோட்டமாய் பொறுப்புணர்வுடன் வெளிப்பட்டன. சில மாற்றுக் கட்சிக்காரர்களால் உசுப்பி விடப்பட்டு ஆக்ரோஷமாய்ப் பேசும் தொனியும் வெளிப்படையாகத் தெரியாமல் இல்லை.

''எங்கெங்கியோ வயிறு ரொம்பி புளியேப்பம் விட்டுட்டு இருக்கிறவனுகளுக்கெல்லாம் சாப்பிடு சாப்பிடுன்னு திணிக்கறீங்க. ஆனா, இங்கே குடிக்கத் தண்ணி கேட்கிறோம். அதை சரிப்படுத்தாம கொஞ்சம் பொறுங்கறீங்க. தெரியாமத்தான் கேட்கிறோம். குடிக்கத் தண்ணி கொண்டு வர ஒரு எம்.எல்.ஏவுக்கு ரெண்டு வருஷம் போதாதா?"

– இது மாதிரி அங்கங்கே சில கோபங்கள்.

"இது பரவாயில்லை சார். முதல்ல வீதி வீதியாய்ப் போய்க் குறை கேட்டு மனு வாங்கினப்ப 'வோட்டுக் கேட்கையில வீடு வீடா வந்தீல்ல. இப்ப என்ன வீதியோட போறே...? வீட்டு வாசலுக்கு வான்னு குதர்க்கமா கூப்பிட்டவங்க உண்டு. அதுக்குப் பிறகு முடிஞ்சளவு வீட்டு வாசல்லயே போய் நின்னுட்டோம்" – என்றார் நடைபயணக் குழுவில் அங்கம் வகித்த பிரமுகர் ஒருவர்.

முதலில் தொகுதி முழுக்கத் தொடர்ந்து நடப்பது என்றுதான் இருந்தனராம். ஒருநாள் நடந்ததில் ஒரு குடியிருப்புக்கும் மற்றொரு குடியிருப்புக்கும் இடையே 2-3 கி.மீ. தூரம் வெட்டி நடையாக இருந்ததால் தூரமாக நடக்க வேண்டிய பகுதிகளில் காரில் சென்று, குடியிருப்புப் பகுதிகளில் மட்டும் நடைப்பயணம் என்று (பெரும்பாலும் கிராமங்கள் உள்ளடங்கின தொகுதி என்பதால்) மாற்றி அமைத்துக் கொண்டிருக்கின்றனர்.

தீர்க்கப்படாத உள்ளாட்சிப் பிரச்னைகளே இப்படி நிறைய இருப்பதற்குக் காரணம் என்ன? "இப்பவும் இரண்டு வருஷத்துல எங்க பகுதியில மட்டும் ஒரு கோடி ரூபாய்க்கு அபிவிருத்திப் பணி நடந்திருக்கு. அப்படியும் போதலைன்னா நிதி எங்கே இருக்கு? நீண்ட காலம் உள்ளாட்சித் தேர்தல்கள் நடக்காததால் பல பணிகள் செய்யப்படவில்லை. இப்போது தேர்தல் நடந்த இரண்டாண்டுகளுக்குள் எத்தனை செய்து விட முடியும்?'' – என்பது முன்னாள் எம்.எல்.ஏ.வும் கருமாண்டி செல்லிபாளையம் ஊராட்சித் தலைவருமான டி.கே. நல்லப்பனின் பதில். துடுப்பதி பஞ்சாயத்துத் தலைவரோ இதன் பின்னணி பற்றிய புள்ளி விவரங்களை நம்மிடம் அடுக்கினார்.

"உள்ளாட்சி அமைப்புகளுக்குத் தமிழக அரசு தம் வருமானத்தில் 8 சதவீதம் மட்டுமே ஒதுக்குகிறது. ஆனால் கேரளாவில் 35%, மே. வங்கம் 50%, கர்நாடகா 27%, ஆந்திரா 19% கொடுக்கிறது. இதில் குறைந்தபட்ச அளவாவது நம் அரசு ஒதுக்கலாம். அதையே நாங்க ஜனங்க பிரதிநிதியா நின்று எம்.எல்.ஏ.கிட்டே இந்த நடைப்பயணத்திலும் வலியுறுத்தியுள்ளோம்!"

நடைப்பயணத்தின் கடைசி நாளான அன்று, எம்.எல்.ஏ.வோடு கூடவே இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் நல்லகண்ணு. அவரிடம் இதுமாதிரி நடைப்பயணம் எந்த அளவுக்கு உதவும் எனக் கேட்டோம்.

"இந்த நாட்டில் மக்களின் அடிப்படை விஷயங்கள் கூட நிறைவேற்றப்படாதது வேதனையான விஷயம். சுடுகாடு இல்லை, குடிதண்ணீர் இல்லை, சாலை வசதி, சாக்கடை வசதி இல்லை என்பதைக்கூட சரிப்படுத்த முடியலைன்னா இது என்ன நாடு? என்ன அரசியல்? எதற்குக் கட்சி? அது இந்த நடைப்பயணத்தில் உணரப்பட்ட விஷயம். இது சட்டமன்றத்தில் வலுவாக இந்த நடைப்பயணம் மூலம் எதிரொலிக்கலாம்...!"

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சட்ட

மன்ற உறுப்பினர்கள் தம் சொத்து விவர அறிக்கையை 1996-லேயே தாக்கல் செய்தது அனைவரும் அறிந்த விஷயம். இதுமாதிரி சட்டமன்ற உறுப்பினர்கள் நடைப்பயணம் செய்தது - வரவேற்கத்தக்க அம்சம் என்பது பகுதியில் பலரிடம் வெளிப்பட்டு நின்ற ஒன்று. இந்த அனுபவம் எம்.எல்.ஏ. நா. பெரியசாமிக்கு திருப்தியளிக்கிறதா? அவரிடமே கேட்டோம்.

"நடைப்பயணம் வெற்றிகரமாகவும், திருப்தியாகவும் உள்ளது. இப்போது தொகுதியில் சரிபாதி ஊர்களுக்குத்தான் போக முடிஞ்சிருக்கு. திட்டம் அப்படித் தான். இன்னொரு பாதியை அடுத்த கட்டத்தில் திட்டமிட்டு நடைப்பயணம் மேற்கொள்ள உள்ளோம். எல்லா ஊர்களுக்கும் தொடர்ந்து சென்றால் மற்ற அலுவல்கள் பாதிக்கும் என்பதாலேயே இதனை இரு பகுதிகளாகப் பிரித்தோம். தினம் காலை ஏழு மணிக்குத் துவங்கி இரவு ஒன்பதரை வரையிலும் கூட கிராமம்தோறும் சென்று அவர்களுடனே கலந்துரையாடி, குறைகளைக் கேட்டறிந்து, அங்கேயே தங்கி வந்தது புது அனுபவம். இதன் மூலம் ஜனங்களின் அறியாமை வெளிப்பட்டிருக்கு. அந்த அறியாமையைப் பயன்படுத்தி அரசு தரப்பில் காரியம் சாதிப்பதாகச் சிலர் பணம் பெறுவதும் தெரிகிறது. அதுவே பலரிடம் கோபமாய் வெளிப்படுவதைக் காண முடிந்தது. பெரும்பாலான விஷயங்கள் உள்ளாட்சி அமைப்புகளே சரிப்படுத்த வேண்டிய விஷயம். அதற்கு கலெக்டர் ஆபீஸுக்கு நடந்து நடந்து சோர்ந்து போனவர்களும் நிறைய. இது எங்கள் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி வடிவமைத்துத் தந்த பயணம். இப்போது சேகரித்த விவரங்களைக் கொண்டு கமிட்டியில் விவாதித்து அடுத்த கட்ட நடவடிக்கைகள் மேற்கொள்ள உள்ளோம்."

நாம் அந்த நடைப்பயணத்திலிருந்து விலகி வெளிவந்த போது ஒரு கிராமவாசி குறுக்கிட்டுக் கேட்டது :

"சாமீ... வோட்டெலெக்சன் எப்பவுங்க...? கூட்டமா வந்து வோட்டுக் கேட்கத்தான் எம்.எல்.ஏ. வருவாரு. இப்ப எதுக்கு?"

கட்டுரை, படங்கள் :
**கா.சு. வேலாயுதன்**



**ஹா**ப்பி (அல்லது ஹேப்பி?) ந்யூ இயர்! புது வருஷ வைராக்கியமெல்லாம் வெச்சுக்கற வழக்கம் உண்டா உங்களுக்கு? ஒவ்வொரு வருஷமும் ஒழுங்கா டைரி எழுதணும்னு நான் சபதம் எடுத்துப்பேன். மேக்ஸிமம் மார்ச் மாசத்தோட சரி. அப்புறம் அந்த டைரில எழுதின பக்கங்களை ஸ்டேப்ளர் பின் அடிச்சுட்டு மிச்ச பக்கங்களை நோட்டுக்கா யூஸ் பண்ணிப்பேன். சமயத்துல, 'நாம என்ன பெரிசா சரித்திர சாதனை பண்ணிட்டோம்; (ofcourse, இந்த Column எழுதறது தவிர) டைரில பதிவு பண்ணி வெக்க'ன்னு தோணும். என் அப்பா, கல்கி படிச்சேன், குமுதம் புரட்டினேன், கரண்ட் பில் கட்டினேன்னு அம்பது வருஷமா விடாம எழுதிட்டு வர்றார். சுந்தர ராமசாமியோட 'ஜேஜே', டைரி இலக்கியமே படைச்சிருக்கான். ஆனந்தரங்கம் பிள்ளையோட டைரிக் குறிப்புகள் பிரபஞ்சனுக்கு சாகித்ய அகடமி பரிசே வாங்கிக் குடுத்திருக்கு. சாதனையாளர்கள் டைரி எழுதறதுல ஒரு அர்த்தம் இருக்கு. நானெல்லாம் எதுக்கு எழுதணும்? இந்த வருஷம், முதல் மூணு மாசம் கூட டைரி எழுதப் போறதில்லைங்கறதுதான் என் புது வருஷ விர சபதம்.

என் ஃப்ரெண்ட ஒருத்தன் பான்பராக் போடுவான். ஒவ்வொரு புது வருஷம் பிறக்கிற போதும், இந்த வருஷம் இதை விட்டுடறேன்னு ப்ராமிஸ் பண்ணுவான். ஆனா விட மாட்டான். ஏன்னு கேட்டதுக்கு அவன் சொன்ன பதில் : 'அடுத்த வருஷம் விடறதுக்கு வேற ஒண்ணும் இல்லையே?'

* * *

**சி.**சு. செல்லப்பா காலமாயிட்டார்ங்கறது நிஜ இலக்கிய விரும்பிகளுக்குத் தொண்ணூத்தெட்டுல கிடைச்ச பேரிழப்பு; பெரும் அதிர்ச்சி. செல்லப்பா மாதிரி ஒரு dedicated எழுத்தாளரைப் பார்க்கறது ரொம்பக் கஷ்டம். தம் சம்பாத்தியம், (பெரிசா ஒண்ணும் இல்லைதான்!) மனைவி நகை எல்லாத்தையும் புஸ்தகம் போடறதிலேயே செலவழிச்சவர்.

இன்னிக்குத் தமிழ்ல பெரிய கவிஞர்கள்னு சொல்ற எல்லாருமே அவரோட 'எழுத்து' பத்திரிகைல பிறந்தவங்க தான். மணிக்கொடி எழுத்தாளர்கள்னு சொல்லுவாங்க தெரியுமா? அந்த சின்ன லிஸ்டுல பெரிய இடம் செல்லப்பாக்கு உண்டு. பெரிய கலைஞர். ஈவிரக்கமில்லாத நேர்மையான விமர்சகர்.

எழுத்து நின்னு போனதுக்கப்புறம் செல்லப்பாவால சும்மா இருக்க முடியலை. 'சுவை'ன்னு ஒரு தொகுப்பு ஸீரிஸ் கொண்டு வர ஆரம்பிச்சார். 'வருஷத்துக்குப் பத்து புஸ்தகம். நாப்பது ரூபா மொத்தமா அனுப்பினா புஸ்தகம் மாசம் ஒண்ணா வீட்டுக்கு வரும்'னு அறிவித்தார். நாலஞ்சு இஷ்யூஸ் வந்தது. ஆனா மொத்தமா பணம் அனுப்பினது நூறே பேர் தானாம்! தனி மனுஷன், பாவம், என்ன பண்ணுவார்?

அந்த 'சுவை' கலெக்ஷன்ல ரெண்டு மூணு என் கிட்டே இருக்கு. ஏ க்ளாஸ் தொகுப்புகள்!

செல்லப்பா, ராஜராஜன் விருதை மறுத்தது, 'விளக்கு' அமைப்பு தர முன்வந்த தொகையை வாங்கிக்க மறுத்தது பத்தியெல்லாம் இந்த சந்தர்ப்பத்துல படிச்சிருப்பீங்க. இரண்டு விஷயம் சொல்றேன்.

'மணிக்கொடி' ரைட்டர் பி.எஸ். ராமையாவோட படைப்புகளை யாரும் புஸ்தகமா போடத் தயாரா

• சி. சு. செல்லப்பா



இல்லை, அப்ப. செல்லப்பாக்கு, தன் புஸ் தகமே வெளிவராதது மாதிரி கவலை; வருத் தம்! என்ன பண்ணார் தெரியுமா? தானே கஷ்டப்பட்டு முயன்று, ராமைய்யாவோட எழுத்துக்களைப் புஸ்தகமா கொண்டு வந்தார். இன்னிக்கு யாருக்கு இப்படி ஒரு மனசு வரும்?

சுபமங்களாவோட அமரராகிவிட்ட எடிட்டர் கோமல் சுவாமிநாதனை, அவர் இருந்தப்ப ஒருதரம் இலக்கியச் சிந்தனை கூட்டத்துல சந்திச்சி பேசிட்டிருந்தேன். அதுக்கு முன்தினம்தான் அவர் செல் லப்பாவை சந்திச்சுட்டு வந்ததா சொன் னார்.

கோமல் பிரமிச்சிப் போய் ஒரு விஷயம் சொன்னார் : "நாமல்லாம் பத்துப் பக்கம் எழுதறதுக்குள்ள கை வலி, முதுகு வலின்னு எழுந்து உலாவப் போயிடறோம். அவர் இந்த வயசுல மணிக்கணக்கா உட்கார்ந்து எழுதிட்டே இருக்கார். ஒரு பொட்டில ரெண்டாயிரம் பக்கத்துக்கு ஒரு நாவல் எழுதி வெச்சிருக்கார். இன்னும் ஆயிரம் பக்கம் எழுதினா பூர்த்தியா யிடுமாம். அடுத்த வருஷத்துக்குள்ள முடிச்சிடுவேன்னு நம்பிக்கையோட சொல்றார்!"

## செல்லப்பாவின் கனவு

செல்லப்பாவோட 'கனவு'ன்னு அதைச் சொல்லலாம். உறுதியோட உழைச்சி அந்த நாவலை முடிச்சுட்டுத்தான் அவர் போனார். இன்னிக்கு 'சுதந்தர தாகம்' மூணு வால்யூம்ல கிடைக்கறது. சுதந்தரப் போராட்டக் காலத்தைக் கண் முன் னால நிறுத்தற நாவல் அது! 'வாடி வாசல்'தான் அவரோட மாஸ் டர் பீஸ்னு சொல்வாங்க. But this is also a good piece from the great master.



* * *

'டைம்' பத்திரிகை தேர்தல் பத்தித் தகவல் தந்திருந்த லாவண்யா, இன்னொரு தேர்தல் விவரத்தை சுட்டிக்காட்டியிருக்கார். (மேடம், சேஷனுக்கு தூரத்து உறவா?)

'மின்னோவியம்' இன்டர்நெட் மாகஸின்ல "உங்களோட ஆல் டைம் ஃபேவரிட் இசையமைப்பாளர் யார்?"னு ஒரு தேர்தல் நடத்தியிருக்காங்க. மொத்த வோட்ஸ்ல ஏ.ஆர். ரெஹ்மானுக்கு 47%, இளையராஜாவுக்கு 43%, எஸ். ஏ. ராஜ்குமாருக்கு 5% தேவாவுக்கு 3%.

இதுல அநியாயம் என்ன தெரியுமா? விஸ்வநாதன் – ராமமூர்த்திக்கு ஒரு சதவீத வோட்டுத்தானாம்! (சுமார் ரெண்டாயிரத்தி இருநூறு வோட்டுல வெறும் முப்பத்தொரு பேர்.) நம்ம ஜனங்களோட ஞாபகசக்தியை என்ன சொல்றது? All time favouriteங்கற வார்த்தைக்கே அர்த்தம் இல்லாமப் போச்சு!

* * *

ரெண்டு வாரம் முன்னால வெளியிட் டிருந்த விஜயராகவன் கவிதைக்கு நல்ல ரெஸ்பான்ஸ். கவிதைல இருந்த ஹ்யூமரை அநேகமா எல்லாருமே ரசிச்சிப் பாராட்டி யிருந்தாங்க. திருவண்ணாதபுரம் பாலசுப்ர மணியம் மட்டும், "சூதாட்டமும் துகிலுரி தலும் நடந்தது அஸ்தினாபுரத்தில் தானே? பாஞ்சாலத்தில் இல்லையே? அது தருமர் & Coவின் மாமியார் ஊர் அல்லவா?"ன்னு ஒரு லா பாயின்ட் பிடிச்சிட்டார். கரெக்ட்தான். விஜயராக வனாவது சரியா எழுதியிருக்கணும். நானா வது கவனிச்சிருக்கணும். கவிதையோட நயத்துல இந்த வெண்டைக்காய் விஷ யத்தை கவனிக்காம விட்டுட்டேன். ஸாரி.

* * *

ரெண்டு சிவில் இஞ்சினியர்ஸோட மனைவிகள் பேசிட்டிருந்தப்ப ஒருத்தி கேட்டாளாம் : "உன் புருஷனுக்கு பிரிட்ஜ் ஆடத் தெரியுமா?"

"அது எனக்குத் தெரியாது. ஆனா, அவர் கட்டின பிரிட்ஜ் எல்லாம் ஆடும்."

– இந்த ஜோக்கை எந்தப் பிரபலம் எந் தக் கூட்டத்துல அல்லது டீவில சொன் னார்னு தெரிஞ்சா யாராவது எழுதுங்க. இந்த வாரம் மட்டும் ஏழு பேர் இதே ஜோக்கை அனுப்பியிருக்காங்க.

— சுமி

## சுமி சூப்பர் மார்க்கெட்!

# கடல் தாண்டிச் சென்றாலும்...

மியூசிக் அகாடமி தொடங்கி இன்ன பிற அமைப்புகள் இசைவிழா மைதானத்தின் 'மெயின் டிராக்'களில் அமர்க்களம் பண்ணிக் கொண்டிருக்க, நகரில் ஒதுக்குப்புறமாக, இந்திரா நகரின் யூத் ஹாஸ்டல் புல் தரையில், ஷாமியானா போட்ட மேடையில் (என்.ஆர்.ஐ) இசைவிழா நடத்திக் கொண்டிருக்கிறது ஹம்ஸத்வனி. இந்த சீசனில் இங்கே கச்சேரி செய்பவர்களில் ஏறத்தாழ அனைவருமே அயல் நாடுகளில் வாழும் இந்தியர்கள் தான். (அங்கே நியூஜெர்சி, டொராண்டோ, நியூயார்க், சிகாகோ, லண்டன் இவையே மிக அதிகமாய் உச்சரிக்கப்படும் வார்த்தைகள்) இந்த என்.ஆர்.ஐ வித்வான்களைச் சந்தித்துப் பேசினபோது:



• ரோஹன்



• வெங்கட்ராமன்

● அமெரிக்காவில் மிச்சிகனில் ஆறாம் கிளாஸ் படிக்கிறான் ரோஹன் கிருஷ்ணமூர்த்தி. அப்பா யுனிவர்சிடி புரொபசர். அம்மா சுஜாதா கிருஷ்ணமூர்த்தி அமெரிக்காவில் நடைபெறும் பரத நாட்டிய அரங்கேற்றங்களிலும், ஆராதனை உற்சவங்களிலும் பாடுவார். அப்போது மிருதங்கத்தைப் பார்த்துக் கவரப்பட்டான் ரோஹன். லோக்கலாக மிருதங்கம் கற்றுக் கொள்ள ஆரம்பித்த சிறிது காலத்துக்குள்ளேயே, சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தவர் வேறு ஊருக்கு மாற்றலாகிப் போய் விட்டார். அதன் பின் டெலிபோன் மூலம் மிருதங்க வகுப்புகள். ஆம்! குரு, தன் வீட்டு டெலிபோன் ரிசீவர் முன் அமர்ந்து மிருதங்கம் வாசிக்க, பல நூறுமைல்கள் தள்ளி இருக்கும் சிஷ்யன் வீட்டு டெலிபோனில் அது ஒலிக்கிறது. அதை டேப் பண்ணி வைத்துக் கொண்டு, திரும்பத் திரும்பப் பழகுகிறான்!

அமெரிக்காவில் பல்வேறு ஊர்களிலும் நடக்கும் தியாகராஜ உற்சவங்களில் பங்கேற்று, பரிசுகள் வாங்கியிருக்கிறான். வகுப்பில் ரோஹனுக்கு 'லிட்டில் இண்டியன் டிரம்மர்' என்றுதான் பெயர். புல்லாங்குழல் ரமணி, அமெரிக்கா சென்றபோது ரோஹனை ஆசிர்வதித்து, டிசம்பரில் சென்னை வா; நல்ல எக்ஸ்போஷர் கிடைக்கும் என்று சொன்னதன் பேரில், சென்னைக்கு வந்திருக்கும் ரோஹன், இங்கே ஐந்து கச்சேரிகளுக்கு வாசித்திருக்கிறான்.

● முப்பத்து ஒன்பது வயது வெங்கட்ராமனுக்கு வாய்ப்பாட்டு மட்டுமின்றி வயலினும் வாசிக்கத் தெரியும். மும்பை ஐ.ஐ.டி.யில் படித்துவிட்டு, இப்போது டெக்சாஸில் வசிக்கிறார். அரங்கேற்றங்களுக்குப் பாடுவதுடன், தனி கச்சேரிகளும் வழங்குகிறார். "சீக்கிரமே செஞ்சுரி போட்டு விடுவேன்!" என்கிறார் சந்தோஷமாய். அங்கே முப்பத்து ஐந்து மாணவர்கள் இவரிடம் மியூசிக் கற்றுக் கொள்கிறார்களாம். கச்சேரி செய்வதற்காக, சென்னை வருவது இதுவே முதல் தடவை. "ஹம்சத்வனி தவிர இன்னும் இரண்டு சபாக்களில் கச்சேரி செய்ய வாய்ப்புக் கிடைத்திருப்பது, நல்ல ஆரம்பம்! ஊக்கமளிக்கிற மாதிரி இருக்கிறது! வருஷா வருஷம் கச்சேரி செய்ய வாய்ப்புக் கிடைத்தால் ஓ.கே. இல்லையெனில் நல்ல இசை கேட்பதற்காகவே சென்னை வரப்

போகிறேன்!" என்கிறார்.

● லண்டனில் பல்கலைக்கழகமென்றில் இந்திய இசை கற்பிக்கும் யோகேஸ்வரன், டி.வி.ஜியின் சிஷ்யர். வயது முப்பத்தொன்பது. ஸ்ரீலங்காவில் பிறந்தவர். படித்தது சி.ஏ. ஆனால் இசை மீது அப்படி ஒரு வெறி. சி.ஏ. பிராக்டீஸ் பண்ணாமல், இசை கற்பிக்கப் போய் விட்டார். நாலு வருஷங்களாக சென்னையில் டிசம்பர் சீசனில் ஆஜராகி விடுகிறார். ஜெர்மனியைச் சேர்ந்த ஒரு ஃப்யூஷன் இசைக் குழுவிலும் இடம் பெற்றிருக்கிறார். நூறு நிகழ்ச்சிகளுக்கு மேல் வழங்கிய அனுபவம் உண்டு. இந்த வருஷம் மூன்று கச்சேரிகளுக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. போன வருஷம் 'ஹிந்து' விமர்சனத்தில் இவரை 'ரைசிங் ஸ்டார்' என்று குறிப்பிட்டதைச் சொல்கிறபோது, இவர் முகத்தில் சந்தோஷ சர்ஃப் அல்ட்ரா.

• காயத்ரி சத்யநாராயணா





• ஐயர் பிரதர்ஸ்

● சிங்கப்பூரில், தேசிய பல்கலைக்கழக மாணவரான ரவிக்கு வயது பத்தொன்பது. வருடம் இரண்டு தடவை சென்னையில் பெற்றோரைச் சந்திக்க வரும் இவருக்கு, இப்போது செமஸ்டர் விடுமுறை. கற்றுக் கொண்டது மிருதங்கம், கடம் இரண்டுமே என்றாலும், இப்போது கடம் வாசிக்கிறார். சிங்கப்பூரிலும் ஒரு ஆர்க்கெஸ்ட்ரா குழுவில் இடம் பெற்றிருக்கிறார். இந்தியாவில் ரேடியோ, டெலிவிஷன் நிகழ்ச்சிகளில் வாசித்த அனுபவமும் உண்டு. இந்த ஆண்டு எட்டுப் பத்து கச்சேரிகளுக்கு வாசிக்க வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. "டிசம்பர் சீசனில் கச்சேரி வாய்ப்பு என்பதைவிட நிறைய, நல்ல மியூசிக் கேட்க வாய்ப்பு கிடைக்கிறது. அதுவே பெரிய பாக்கியம்" என்கிறார் ரவி.

● ஷோபா சேகர் ஆஸ்திரேலியாவில் மெல்பர்ன் நகரில் வாழும் இந்தியர். கடந்த ஆறேழு வருடங்களாகத்தான் ஆஸ்திரேலியா வாசம். அதற்கு முன்னால் ஆறு வருடம் மலேசியாவில் வசித்தவர். 'ஸ்ருதி' இதழின் ஆஸ்திரேலிய நிருபர் என்கிற கூடுதல் பெருமை இவருக்கு உண்டு. ஆஸ்திரேலிய அரசாங்கத்தின் மானிய உதவியுடன், இந்தியன் மியூசிக் பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறார். இந்த வருடம் மொத்தம் ஐந்து இடங்களில் கச்சேரிக்கு வாய்ப்பு. தம் குருவிடம் நேரிடையாகப் பயிற்சி பெறுவது, நிறைய கச்சேரிகளுக்குப் போய் ஞானத்தை விருத்தி செய்து கொள்ளுவது; கச்சேரி செய்வது என்று தமது சென்னை விசிட்டுக்கு மூன்று நோக்கங்கள் இருப்பதாகச் சொல்லும் ஷோபாவின் கணவர், இந்தியாவிலிருந்து, பொருட்களை ஆஸ்திரேலியாவில் இறக்குமதி செய்யும் பிசினசில் இருக்கிறார்.

● மதுமோகன் ஒரு வித்தியாசமான இளைஞர். எலெக்டிரிகல் இஞ்சினியரிங் படித்தவர். குடும்பத்தாருக்கும் இசையார்வம் உண்டு. ஆனால் இவருக்கு மட்டும் கர்நாடக இசையே பிடிக்காது. (அப்பா, மாவட்ட கலெக்டர்; அம்மா வயலினிஸ்ட்) ஒரு தடவை எம்.எஸ். கச்சேரியைக் கேட்க வாய்ப்புக் கிடைத்தது. மனிதர் சொக்கிப் போனார். அப்புறம் கர்நாடக இசை கற்றுக் கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. கற்றுக் கொண்



• ஷோபா சேகர்



• மதுமோகன்



• ராஜேஸ்வரி



• யோகேஸ்வரன்



• ரவி

டார். கனடாவில் வேலை கிடைத்ததும் அங்கே போனார். "இன்னும் மியூசிக் கற்றுக் கொள்ள வேண்டும்; ஆனால் அங்கே அதற்குரிய வசதி இல்லை. எனவே வேலையை ராஜினாமா பண்ணி விட்டு, இங்கேயே வந்து விட்டேன். இந்த சீசன் முடிந்தபின் மீண்டும் கனடா போய், வேறு வேலை பார்க்கப் போகிறேன்'' என்கிறார் மதுமோகன். இந்த சீசனில் இவருக்கு ஏழு கச்சேரிகள்.

• 'செம்பை'யின் சிஷ்யையான தம் அம்மாவிடமே இசை பயின்றவர் ஜெயா பாலசுப்ரமணியம். இப்போது அமெரிக்கா வாசி. முன்பு டெல்லியில் இருந்தபோது ஆல் இந்தியா ரேடியோவில் நிறைய கச்சேரிகள் செய்திருக்கிறார். சோனல் மான்சிங் போன்ற பிரபல நடனக் கலைஞர்களுக்குப் பாடியதுடன், பிரான்ஸ், பல்கேரியா, மலேசியா போன்ற நாடுகளுக்கும் சென்று நடன நிகழ்ச்சிகளுக்குப் பாடிய அனுபவம் உண்டு. முதல் தடவை சென்னை சீசன் விஜயம் இது. இங்கே ஒரு கச்சேரி. அடுத்தபடி பெங்களூரிலும், மைசூரிலும் தலா ஒன்று. இவரது மருமகள் சத்தியாவும் வாய்ப்பாட்டும், வயலினும் கற்றுக் கொண்டவர். டெல்லியில் கலைக் கழகத்தில் எம்.ஏ. மியூசிக் கோல்டு மெடலிஸ்ட். 83ல் அரங்கேற்றம். இசை விழாக்களின் போது நடக்கிற போட்டிகளில் வாங்கிய பரிசுகளும் ஏராளம்.

• காயத்ரி சத்யநாராயணா கடந்த ஏழு மாதங்களாக சிகாகோவில் வசிக்கிறார். பதினைந்து வருடங்களாக இசை பயின்றவர். இங்கே குரு ஓ.எஸ். தியாகராஜன். கேஸட் மூலம் அங்கே இசைப் பயிற்சி தொடர்கிறது. டிசம்பர் சீசனில் அரங்கேறுவது இதுவே முதல் தடவை.

• ஐயர் பிரதர்ஸ் என்று தங்களை அழைத்துக் கொள்ளும் ராம்நாத், கிரிநாத் இரண்டு பேரும் இரட்டையர்கள். இரண்டு பேரும் சென்னை ஐ.ஐ.டியில் படித்தவர்கள். இப்போது ஆஸ்திரேலியாவில் இருக்கிறார்கள். பத்து நிமிட வித்தியாசத்தில் பிறந்த இவர்கள் திருமணம் மூன்று நாள் இடைவெளியில் நடந்தது. வீணை வித்வான்களான இவர்களின் குரு வீணை பிச்சுமணி. ஆஸ்திரேலியாவில் பிச்சுமணி பெயரில் ஒரு மியூசிக் ஸ்கூல் ஆரம்பித்து, வார இறுதி நாட்களில் சுமார் முப்பது பேருக்கு வீணை சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 94ம் ஆண்டு முதல், இசை விழாக்களில் வாசித்து வருகிறார்கள். இந்த வருடம் இந்த ஆஸ்திரேலிய இரட்டையர்களுக்கு ஆறு கச்சேரிகள். "ஒவ்வொரு தடவை சென்னை வரும் போதும், போகும் போதும், தவறாமல் ரிப்பேரான வீணையைக் கொண்டு வருவதோ, புது வீணையை வாங்கிச் செல்வதோ நடக்கும்'' என்கிறார்கள் இவர்கள்.

• நியூயார்க்கில் வசிப்பவர் ராஜேஸ்வரி. ஏழு வயதில் கர்நாடக இசை பயிலத் தொடங்கியவர். கல்யாணமாகி ஒரு குழந்தை. "இன்னமும் நான் ஒரு ஸ்டூடென்ட்தான்!'' என்கிறார். சிவில் இஞ்சினியரிங் முடித்தவர் இவர் என்பது ஒரு உபரி தகவல். ஏழு வருடங்களாக யு.எஸ்ஸில் வசிக்கிறார். இரண்டு வருடங்களாக இசை விழாவில் பாடுகிறார். "என் மூணு வயசுப் பெண் சியாமளா இப்போதே ராகங்களைக் கண்டுபிடிக்கிறாள்'' என்கிறார் சந்தோஷம் பொங்க.

**— எஸ். சந்திரமௌலி**

படங்கள் **யோகா**

# 'கல்கி'யை ராக்கெட்டில் ஏற்றிய காமராஜர் பல்கலை!



• ராக்கெட்டில் ஏற்றிய வண்ணக்கோலம்

அமரர் கல்கி அவர்களுடைய நூற்றாண்டினைக் கொண்டாடிக் கொண்டிருக்கிற இந்தச் சமயத்தில், மதுரை - காமராஜர் பல்கலைக் கழக தமிழ்த் துறை மாணவர்கள் அவரை ராக்கெட்டில் ஏற்றி விண்வெளிக்கே அனுப்பி வைத்து விட்டார்கள்!

அப்படித்தான் தமிழ்த்துறை கட்டடத்தின் வாசலில் வண்ணக் கோலம் போட்டிருந்தார்கள்! என்னவென்று விசாரித்ததில் சொன்னார்கள் :

"கல்கி காலத்துக்கு ஏற்ப தமது எழுத்தின் அணுகுமுறையை மாற்றிக் கொண்டேயிருந்தார். வாசகர் ரசனையை வளர்த்து, தமது எழுத்தாற்றலையும் வளர்த்துக் கொண்டே வந்தார். அதனால் தான் சின்ன நகைச்சுவைக் கட்டுரைகளில் தொடங்கி மாபெரும் பேரிலக்கியங்களான பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம், அலை ஓசை வரை அவரால் எழுத முடிந்தது. இன்றைக்கு அவர் இருப்பாரேயானால் விஞ்ஞான பூர்வமாக யோசித்து விண்வெளிப் பயணத் தொடர் கதைகளைத்தான் எழுதுவார். எனவேதான் இப்படி வண்ணக் கோலம் வரைந்தோம்!"

வாசலைக் கடந்து மாடிப்படிகளில் ஏறிச் சென்றால் கருத்தரங்கு மண்டபத்தை அடையும் வரை வழி நெடுக சுவரில் அமரர் கல்கி அவர்களின் பாடல்கள் (அதென்னவோ தெரியவில்லை 'அலை கடலும் ஓய்ந்திருக்க' என்ற பூங்குழலி பாடலுக்கு இளைய சமுதாயத்தினிடம் அப்படி ஒரு கவர்ச்சி!), கல்கி அவர்களைப் பற்றி அறிஞர் பெருமக்களின் பொன்மொழிகள் எல்லாம் அலங்காரமாக எழுதி ஒட்டப்பட்டிருந்தன.

சரி, இத்தனை அக்கறையோடு செயல்படும் மாணவர்கள் "கல்கி" பற்றிய முழுநாள் கருத்தரங்கிலும் பங்கேற்று, பொழிந்து தள்ளப் போகிறார்கள் என்று பார்த்தால்,




• வேங்கடராமன் பேசுகிறார்; இரா. மோகன் மற்றும் சிலர் மேடையில்...

அந்தப் பொறுப்பை மட்டும் முனைவர்களிடமே விட்டுவிட்டு சமர்த்தாக உட்கார்ந்து கேட்கத் தயாரானார்கள்!

முன்னொரு காலத்தில் பல்கலைக் கழக வேந்தர்கள் தங்கள் வளாகங்களைக் கோட்டைகளாகக் கருதினார்கள். அங்கே பழந் தமிழ்ப் புலவர்கள் மட்டுமே தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் ஆராய்ந்து பரம ரகசியமாக ஆய்வு நூல்களை எழுதி அடுக்கிக் கொண்டிருந்தார்கள்.

காலம் ரொம்பத்தான் மாறி விட்டது. இப்போது மேலும் மேலும் பல பட்டதாரிகள் எம்ஃபில் ஆய்வுக்கும் முனைவர் (டாக்டர்) ஆய்வுக்கும் நவீன இலக்கியங்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். பாரதி தொடங்கி நா. பார்த்தசாரதி வரை, ஏன் அதற்கும் சமீபமாக வந்தாகி விட்டது. நாவல்கள், சிறுகதைகள் தவிர, வார, மாத இதழ்களை, அவற்றின் சிறுகதை பரிசுத் திட்டங்களை, தீபாவளி மலர்களை ஏன், விளம்பரங்களைக் கூட ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறார்கள்! ஒருவேளை மாநகர டெலிஃபோன் புத்தகங்கள் தமிழில் வெளி வருமானால்... பயமாக இருக்கிறது! அந்த அளவுக்கு பல்கலைக் கழகங்கள் இப்போது கதவுகளை அகலத் திறந்து வைத்துள்ளன.

மற்ற எல்லா பல்கலைக் கழகங்களையும் முந்திக் கொண்டு மதுரை காமராஜர் பல்கலைக் கழகம் அமரர் கல்கி நூற்றாண்டினையொட்டி முழுநாள் கருத்தரங்கினை (மதிய விருந்து உள்பட!) நடத்தியது. பேராசிரியர்கள் பலர் அவரை, கட்டுரையாளர் கல்கி, சிறுகதை ஆசிரியர் கல்கி, சமூக நாவலாசிரியர் கல்கி, விமர்சகர் கல்கி என்றெல்லாம் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்தார்கள்.




ஆய்வு என்று வந்து விட்டால், ஆய்வாளர்கள் நீங்கலாக மற்றவர்களுக்கு சொற்பொழிவு அவ்வளவாக ரசிக்காது. ஓர் எழுத்தாளர் சிறுகதை என்ற தலைப்பில் தீட்டிய அழகு ஓவியத்தை துண்டு துண்டாக வெட்டிப் பார்ப்பது போல, ஜன ரஞ்சகம், பயன்பாட்டு நோக்கு, காலச் சூழல், மனித இயல்பு, கதைப் பின்னல், களத் தேர்வு, எதிர்பாரா திருப்பம் என்றெல்லாம் சிறுகதையைப் பகுத்துப் பார்க்கும் போது சராசரி வாசகனுக்கு ஈடுபாடு உண்டாகாது. ஆனால் அன்று பேசியவர்கள் பலரும் ரொம்ப சாமர்த்தியமாக "கல்கி" அவர்களின் எழுத்துக்களிலிருந்தே மேற்கோள்களை எடுத்துக் காட்டிக் கொண்டேயிருந்ததால் கருத்தரங்கு ரொம்ப சுவாரஸ்யமாக அமைந்து விட்டது. அதிலும் 'விமர்சகர் கல்கி' என்ற தலைப்பில் முனைவர் சசிகலா (பராசக்தி கல்லூரி) பேசிய போது அரங்கத்தில் சிரிப்பொலி குற்றால அருவி போல கலகலத்துக் கொண்டேயிருந்தது! (காண்க : கல்கி இலவச இணைப்பு 13.9.1998).

சமூக நாவல்களை ஆராய்ந்த முனைவர் ப. தண்டபாணி (கோவை, சி.பி.எம். கல்லூரி), கல்கியின் தொடர்கதைகளில் முப்பத்தி மூன்று படைப்பு உத்திகள் இருப்பதாகக் கூறி அவற்றை மூச்சு விடாமல் பட்டியலிட்ட போது இதோ எஸ்.பி. பாலசுப்பிரமணியத்துக்கு (கேளடி கண்மணி நினைவிருக்கா?) சரியான போட்டி என்றுதான் தோன்றியது!

'கட்டுரையாளர் கல்கி' என்ற தலைப்பில் பேச வந்த முனைவர் மதியழகன் (பாண்டிச்சேரி பல்கலைக் கழகம்) "ஏட்டிக்குப் போட்டி" என்ற 'கல்கி' அவர்களின் முதல் விகடன் கட்டுரையைத் தாண்டி அப்பால் போகவில்லை! அந்த அளவுக்கு அந்த ஒரு கட்டுரையே அவரை ஈர்த்துக் கட்டிப் போட்டு விட்டது. ஆனால் அந்த முதல் கட்டுரையிலே 'கல்கி' தமது பல்வேறு ஆற்றல்களுக்கு முத்திரை பதித்து விட்டார் என்பதைக் கூறி, நகைச்சுவை, சிறுகதை உத்தி, கட்டுரைச் சிறப்பு முதலிய பல அந்த




ஒரு கட்டுரைக்குள்ளேயே எப்படி பொதிந்து கிடக்கின்றன என்பதை விளக்கியபோது பிரமிப்புத்தான் ஏற்பட்டது.

முனைவர் மீனாட்சி முருகரத்தினம் (தொலை நிலைக் கல்வி - தமிழ் துறைத் தலைவர்) கல்கியின் சிறுகதைகள் எப்படியெல்லாம் விமர்சனங்களால் குறை கூறப்பட்டுள்ளன என்பதை எடுத்துக்காட்டி, அத்தகைய விமர்சனம் ஒவ்வொன்றுக்கும் எதிர்வாதம் செய்து, தம்மை ஒரு சிறந்த வழக்கறிஞராகவும் நிலைநாட்டிக் கொண்டார். 'தீர்ப்பு யார் வழங்குவது?' என்றால், அதற்குத்தான் காலம் கடந்து நிற்கும் படைப்புகளை இன்னும் படித்துக் கொண்டிருக்கும் 'கல்கி' ரசிகர்கள் இருக்கிறார்களே!

கருத்தரங்குக்கு வாழ்த்துச் சொன்ன முனைவர் தி. நடராசன் (தமிழியற்புல ஒருங்கிணைப்பாளர்), 'பேராசிரியர்' என்ற சிறப்புச் சொல் கல்கி அவர்களுக்கு மட்டுமே உண்டு என்பதை எடுத்துக் காட்டியதுடன் அவர் வேறு எத்தனை விதமான சிறப்புச் சொற்களால் பாராட்டப் பெற்றிருக்கிறார் என்பதையும் பட்டியலிட்டார்!

முற்பகல் கருத்தரங்குக்குத் தலைமை வகித்த முனைவர் இரா. மோகனோ, "தமிழ் நாட்டு பெர்னாட் ஷா" என்றும் "தமிழ் தாத்தா" என்றும் "சங்கீத பூபதி" என்றும் எத்தனை பேருக்கு எத்தனை விதமான "பட்டங்"களைக் கல்கி தமது எழுத்து மூலம் வழங்கி மகிழ்ந்திருக்கிறார் என்று எடுத்துக் காட்டிய போது நல்லனவற்றைப் போற்றி தியனவற்றைத் தயக்கமின்றித் தாக்கிய கல்கி ஆசிரியர் உண்மையிலே 'பேராசிரியர்'தான் என்பது நிலை நாட்டப்பட்டு விட்டது!

பிற்பகல் கருத்தரங்குக்குத் தலைமை வகித்தவர் முனைவர் சேது பாண்டியன். பல்வேறு தலைப்புகளில் பேசியவர்கள் எவ்வளவு சிரமப்பட்டு அனைவருக்கும் பயன்படத்தக்க கருத்துரைகளைத் தயாரித்தளித்திருக்கிறார்கள் என்று பெருமிதத்துடன் குறிப்பிட்டார். உடனே முன்னாள் மத்திய நிதி அமைச்சர் திரு ப. சிதம்பரம் கூறிய ஓர் உண்மைதான் நினைவு வந்தது: "கல்கியின் நாவல்களைப் படித்திருக்கிறேன் என்று யாருமே சொன்னதில்லை; திரும்பத் திரும்பப் படித்திருக்கிறேன் என்றுதான் சொல்வார்கள்" என்றார் சிதம்பரம். எனவே கல்கியின் படைப்புகளை ஆய்வு செய்து அன்று பேசிய முனைவர்கள் அனைவருமே சேது பாண்டியன் சொன்னது போல் சிரமப்பட்டிருந்தாலும், சிதம்பரம் கூறியது போல மகிழ்ச்சி பொங்கத்தான் உழைத்திருப்பார்கள்!

இந்தக் கருத்தரங்கினைத் திட்டமிட்டு ஏற்பாடு செய்து நடத்திய முனைவர் வேங்கடராமன், அன்று பேசப்பட்ட கருத்துக்கள் தொகுக்கப்பட்டு நூல் வடிவம் பெறும் என்றார். இவர், பல்கலைக்கழகத்தின் தமிழியற் புலத்தில், "இக்கால இலக்கியத் துறை" என்ற தனிப் பிரிவுக்குத் தலைவர் என்பதை இன்றைய இளம் எழுத்தாளர்கள் கவனிப்பார்களாக. தங்கள் எழுத்துக்கள் மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் ஆய்வுக்கு ஏற்கப்படும் அளவுக்கு சிறப்பான படைப்புக்களை உருவாக்கியவர்களாக இல்லையென்றால் வேங்கடராமன் போன்ற பல ஆர்வமிக்க முனைவர்களுக்கு வேலையில்லாமல் போய்விடும் அல்லவா!

கருத்தரங்கு முடிந்து மாலை புறப்பட்ட போது பல்கலைக் கழகத்தைச் சுற்றியிருக்கும் சோலையையும் ரசிக்க முடிந்தது. "கல்கி" அவர்கள் எழும்பூரில் மின்சார ரயில் ஏறி தாம்பரம் வரை சென்று, அங்கு கிறிஸ்துவக் கல்லூரியின் சோலை சூழ்ந்த வனாகத்தில் காலாற நடந்தபடி தொடர்கதையையோ, தலையங்கத்தையோ யோசித்த நாட்கள் நினைவு வந்தன. சோலையில் வீசிய சுகந்தமான தென்றல் போல் கருத்தரங்கின் பேச்சுக்களும் மணம் நிறைந்து மனத்தை நிறைத்தன.

— நமது நிருபர்

# நேசம்

அகிலா இரண்டு நாட்களாய் சாப்பிட வில்லை. குழிந்த வயிறுடன், விழிகள் விட்டம் வெறித்த நிலையில் கட்டிலிலேயே படுத்துக் கிடந்தாள். அக்கம் ப்க்கத்து வீட்டார் அகிலாவைப் பார்க்க வந்துவிட்டு, கேலியாய்க் கன்னத்தைத் தோளில் இடித்துக் கொண்டு சென்றனர். யதேச்சையாய் வந்திருந்த அவள் மாமாவும், மாமியும் அவள் சோகம் குறித்துக் குசும்பாய்ச் சிரித்து விட்டு ஊர் திரும்பினர். 'கேவலம்... ஒரு மாடு செத்ததுக்கா இந்தத் துக்கம்? பெத்த புள்ளையே போய்ட்டா மாதிரியில்ல அலட்டிக்கறா இவ...' என்று தெரு முழுக்க முணு முணுப்பது எனக்குத் தெரிய வந்தது.

என் மனைவியைப் புரிந்து கொள்ளாதவர் மீது எனக்கு அளவிலாக் கோபம் பொங்கியது. அதைக் கட்டுப்படுத்த மௌனமாய் விழி மூடி பழைய நாட்களை அசை போட்டேன்.

இரண்டு நாட்களாய் லட்சுமி உச்சஸ் தாயியில் உரக்கக் கத்தியபடி இருந்தாள். நான், தண்ணீர் காட்டியது போதவில்லையோ என்று நினைத்து தொட்டி நிறைய தண்ணீர் ஊற்றிவிட்டு வருவேன். லட்சுமி வந்து மோந்து பார்த்துவிட்டு, தன் கரிய மூச்சுக் குழல்களை புஸ்... புஸ்... என்று ஊதியபடியே தண்ணீர் குடிக்காமல் நகர்ந்து விடுவாள். கலக்கி வைத்த கடலைப் புண்ணாக்கும் எள்ளுப் புண்ணாக்கும் பத்தாதோ என்று எண்ணி நிறைய அள்ளிப் போட்டுக் கலக்கி வைப்பேன். லட்சுமி மீண்டும் மோந்து விட்டு நகர்வாள்.

நான் ஓய்ந்து போனேன். புல்லுக்கட்டும் வைக்கோலும் அள்ளி அள்ளிப் போட்டும் லட்சுமி எதையும் தொடாமல் வெறித்து வெறித்துக் கத்துவது எனக்குப் புரிபடாத குழப்பமாய் இருந்தது.

இந்த மாட்டு பராமரிப்புக்கு நான் புதுசு. முன்னே பின்னே மாடுகளை வளர்த்தறியாதவன். என் மனைவி அகிலாவின் நச்சரிப்பால் மாட்டை வாங்கிக் கட்டி விட்டு இப்போது அவஸ்தைப்படுகிறேன். அகிலா மாடு வளர்ப்பில் கைதேர்ந்தவள். அவள் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவளாதலால் அது பற்றி அக்ஷர சுத்தமாய்த் தெரிந்து வைத்திருந்தாள்.

எனது இந்த வேதனையை ஊரிலிருந்து வந்த அகிலாவிடம் நான் விவரித்த போது அகிலா, என் காது திருகி தலையில் குட்டினாள்.

"இது கூடத் தெரியாம என்னத்த ஆம்பளையோ நீங்க...? அது காளைக்குக் கத்து துங்க. பால் வத்தி நாளாச்சுதில்லியா, அதான் காளைக்குக் கத்துது" என்றாள்.

"அப்படின்னா..." என்று நான் அப்பாவியாய் வாய் பிளக்க, அகிலா என் காதில் கிசுகிசுத்தாள்.

அப்பொழுதுதான் புரிந்து கொண்டேன். பருவம் வரும்போது மாடுகள் உரத்து உரத்துக் கத்தி தங்கள் அபிலாஷைகளை அறிவித்து விடும் என்கிற உண்மையை.

"எங்க கிராமத்துலன்னா... பால் வத்தினோன்ன மாடுகளை அப்பிடியே மலைப் பக்கம் மேய விட்ருவோம். அது சக மாடுகளோட அலைஞ்சு திரிஞ்சு, தானா காளை கூட சேந்து சினையாயி வந்து நிக்கும். இங்க பட்டணத்துல அது முடியுமோ. அவுத்து விட்டா எவனாவது ஓட்டிட்டு போயிருவான். மாட்டாஸ் பத்திரிக்கு லட்சுமியக் கூட்டிட்டுப் போய் காளைக்கு விட்டுட்டு வாங்களேன்," என்றாள் அகிலா.

நான் அகிலாவின் கட்டளையை சிரமேற்கொண்டு செய்தேன். ஆஸ்பத்திரியில் டாக்டரின் அட்வைஸ் வேறு மாதிரியாக இருந்தது. "மாட்டுக்கு ஊசி போட்டுறலாங்களா?" என்றார் டாக்டர். எனக்கு ஒரே குழப்பம். அகிலா வேறு மாதிரி சொல்லியிருக்கிறாளே... மாற்றி ஏதானும் செய்தால் 'பிலுபிலு'வென்று சண்டைக்குப் பிடித்துக் கொள்வாள். அதனால் பயந்து, டாக்டரின்



ஆலோசனையை நிராகரித்து, அகிலா சொன்னபடியே செய்து வந்தேன்.

போகும்போது டாக்டர் சொன்னார். இது மாதிரி ஒவ்வொரு தடவையும் மாட்டை ஆஸ்பத்திரிக்கு இழுத்து வர வேண்டாமென்றும் மாட்டுக்குப் பருவம் வந்தது தெரிந்தவுடன் போன் செய்தால் போதும், தான் வீட்டுக்கே வந்து இனப் பெருக்க ஊசி போட்டுவிட்டுச் செல்வ தாயும் சொன்னபோது எனக்கு குதூகல மாய் இருந்தது. இத்தனை தூரம் சிரமப் பட்டு மாட்டை இழுத்து வர வேண்டா மல்லவா?

ஆனால் வீட்டுக்குச் சென்று இந்த விஷயத்தை அகிலாவிடம் சொன்ன போது அவள் மூர்க்கமாய் மறுத்து விட்டாள்.

**நந்தன்**

மாட்டை காளைக்குத்தான் விட வேண்டு மென்றும் அதற்கு ஊசி போடக் கூடா தென்றும் தீர்மானமாய்ச் சொல்லி விட் டாள்.

நான் காரணம் என்ன ஏதென்று துருவித் துருவிக் கேட்டபோது அதற்குச் சரியாய் பதில் சொல்லாமல் அகிலா நழுவி விட் டாள். ஆனால் எனக்கு மட்டும் குழப்பம். இதில் என்ன விஷயம் உள்ளது...? டாக்டர் தான் காளையின் விந்தினை ஒரு குழாய்க் குள் எடுத்து வைத்து அதனை பசுவின் கருப் பைக்குள் செலுத்தும் இம்முறை பெருமளவு வெற்றி கண்டுள்ளதாய்ச் சொல்கிறாரே... அது வெகு நாட்களாய் நடைமுறையில் உள்ளதாய் வேறு சொல்கிறாரே... இவள்

ஏன் இப்படி உளறுகிறாள், எதற்காகப் பயப்படுகிறாள் என்று எனக்குள்ளேயே கேட்டுக் கொண்டு, பின் அந்த விஷயத்தை முற்றாய் மறந்து போனேன்.

அடுத்த முறை எங்கள் லட்சுமி பருவம் வந்து உரத்துக் கத்திய போதுதான், எனக்கு டாக்டர் கூறியது நினைவுக்கு வந்தது. சுலபமாய் முடித்து விடலாமே என்றெண்ணி டாக்டரை போன் செய்து வரச் சொல்லி விட்டேன்.

ஆனால் அதற்காய் பின்பு நான் பெரிதாய்த் துக்கப்பட நேர்ந்தது.




வீட்டில் டாக்டரின் தலை கண்ட அகிலா ரௌத்ரியாகி விட்டாள். டாக்டர், மாட்டின் உடம்புக்கு எதுவும் ஆகாது என்று சொல்லியும் அகிலா மசியவில்லை. இது உலகம் முழுமையும் பரிசோதித்து வெற்றி காணப்பட்டு, காலம் காலமாய் இங்கும் கடைப்பிடிக்கப்பட்டு வரும் முறை என்று விரிவாய் பிரஸ்தாபித்தும் அகிலா உடன்படவில்லை.

"என் லட்சுமிக்கு இனப்பெருக்க ஊசி வேண்டாம். சென்ற முறை செய்த மாதிரி காளைக்கு விட்டு வாருங்கள்" என்பதையே அகிலா திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

புரிபடாத காரணம் எனக்கு வெகுவாய் வருத்தம் தந்தது. வருத்தம் கோபமாய்ப் பரிணமித்தது.

"எதற்காக முட்டாள்தனமாகச் சொன்னதையே திரும்பத் திரும்பக் கதைக்கிறாய்? காரண காரியமில்லாமல் பேசாதே அகிலா'' என்று இரைந்து கத்தினேன். அவளும் கோபித்துக் கொண்டு உள்ளே சென்றுவிட்டாள். நான் கலவரமானேன்.

"நாளை பார்த்துக் கொள்ளலாம்" என்று டாக்டரிடம் சொல்லிவிட்டு, அகிலாவைக் குளிர்விக்க உள்ளே சென்றேன்.

குப்புறப்படுத்த நிலையிலிருந்த அகிலா முகத்தைத் தலையணைக்குள் புதைத்துக் கொண்டிருந்தாள்.

நான் அமைதியாய் அவளை அணுகினேன். அவள் குழல் கோதி முதுகு நீவி விட்டேன். என் கரம் பட்டதும் தலையணைக்குள்ளிருந்து மெலிதாய் விசும்பல் ஒலி கேட்டது. "என்ன... அகிலா இது? சின்னக் குழந்தையாட்டமா நடந்துக்கறே... ஏன் தேவையில்லாம பயப்படறே...? இந்த ஊசி எத்தனையோ காலமா நடைமுறைல இருக்கே அகிலா. கொஞ்சமாவது அர்த்தத்தோட பேசணும்."

அகிலா பொறுமையிழந்து கத்தினாள். "ஐயோ அதெல்லாம் இல்லீங்க. எனக்கு ஊசினால பயமெல்லாம் கிடையாது. அந்த மாதிரி பத்தாம்பசலி இல்லை நான். வேண்டாம்னா வேண்டாம். விட்ருங்களேன்."

"அதுதான் ஏன்...?" என் குரல் கொஞ்சமாய் உயர்ந்து ஒலித்தது.

''கட்டாயம் சொல்லித்தான் ஆகணுமா...?"

அகிலா எதற்கோ தயங்கினாள். அவளின் தயக்கம் எனக்கு ஆச்சரியம் தந்தது.

''சொல்லுடா...'' என்று வற்புறுத்தி அவளின் கைகளைப் பிடித்துக் கொண்டேன்.

"ஏங்க... மாடு பருவம் வந்தோன்ன வரும் ஒரு உணர்வுனால ஓங்கிக் கத்துதே, அது ஏன்னு நினைக்கிறீங்க?"

"இது என்ன கேள்வி அகிலா... இனப்பெருக்க ஆசை. கருவுக்கான எரு வயித்துல தங்கின மறு விநாடியே அது கத்தலை நிறுத்திடுதே."

"இல்லீங்க. இது தப்புன்னு எனக்குத் தோணுது. அதுக்கு இன்பம் துய்க்க ஆசை

வருது. ஒரு காளையோட சேந்து சல்லா பிக்க அதுக்கு ஏக்கம் வருது. அதுக்கு என்ன பண்றோம்... உயிர்த் திரவத்தை அதனோட கருப்பைக்குள்ள செலுத்தி அதை சினைப் பட வச்சிடறோம். ஆனா அது உண்மையா விழைஞ்ச இன்பம் அதுக்குக் கிடைச்சுதா? அதைத்தான் ஊசியால நாம அழிச்சிட றோமே... அந்தப் பசு உள்ளார்ந்து கிளர்ந்து கத்தறதோட முதல் காரணம் இன்பம் துய்க் கற ஆசை. கூடலுக்கு ஏங்கும் உடம்பின் ஒலி அதிர்வு. அதனோட பயனா அது கருத் தரிப்பதாய் இருக்கும். ஆனா கருத்தரிப் பது மட்டுமே அதனோட நோக்கமா இருக் காதுங்க.

"யோசிச்சுப் பாருங்க. ஆணும் பெண் ணும் சேராமலே செயற்கையா கரு உண் டாக்கி வம்ஸ விருத்தி நடந்துக்கிட்டிருந்த துன்னா அது எவ்வோ பெரிய கொடுமை. இந்தக் கொடுமையைத் தாங்க அந்த மாட் டுக்கு நாம செய்ய றோம். அதனோட அடிப்படை உரி மையை, சுதந்திரத்தை, இயற்கை நல்கிய உடல் வேட்கையை கூறு போட்டுடறோம். எனக்கு இது இஷ்ட மில்லீங்க. இந்தப் பாவத்தை செய்ய என் மனசு இடம் தராது. என் வீட்ல இது வேண்டாம். என் லட் சுமிக்கு இது வேண்டாம்."

அகிலா நெடிதாய்ப் பிரேரபித்து முடித் ததும் அகலப் பிளந்த வாயுடன் இறுக்கமாய் ஆகிப் போனேன்.

எனக்கு இது புரியவில்லை. இது நடைமுறை சாத்தியமா என்று தெரிய வில்லை. நாளுக்கு நாள் மக்கள் தொகை பெருகிக் கொண்டு வருகையில், பாலின் தேவை பன்மடங்காய் அதிகரித்துக் கொண்டு போகையில், பெரிய பெரிய பண் ணைகள் தேவை என்றாகி விட்ட நிலையில் செயற்கையன்றி இயற்கைக் கருவூட்டல் மட்டுமே சாத்தியமா என்பது புரிபட வில்லை.

இருந்தும் அகிலாவின் ஏக்கம் எனக்குத் துல்லியமாய்ப் புரிந்தது. அவள் லட்சுமியின் மேல் கொண்ட நேசம் உணர்ந்து விக்கி விதிர்த்துப் போனேன். அவள் ஆசையி லிருந்த உண்மைக்கு மண்டியிட்டுத் தலை வணங்கினேன். அவள் எண்ணத்தையே இனி செயலாற்றுவதாய்ச் சத்தியம் செய் தேன்.

இவள் என் மனைவி என்பதில் உச்ச மாய்ப் பெருமிதம் கொண்டேன். ஒரு ஐந்தறிவுப் பிராணியிடம் இத்தனை தூரம் அதன் உணர்வு கிரஹித்து யாரும் நேசம் கொண்டிருக்க முடியுமா? உள்ளம் மட்டுமே உணரும் அடுத்தவரின் தேகத்து அபிலா ஷையை இன்னொருவர் புரிந்து கொள்வது சாத்தியமா? அது சாத்தியப்பட வேண்டு மென்றால் எத்தகைய நேசம் மனசுள் முகிழ்த்துக் கிடக்க வேண்டும்...! எத்தகைய தொரு ஆத்மார்த்த சிநேகம் அந்த இரு ஜீவன்களுக்குள் கருக்கொண்டிருக்க வேண் டும்!

இப்பொழுது சொல்லுங்கள். இப்படி யாய் நேசம் வைத்துச் சீராட்டிய லட்சுமி இறந்து விட்டாள் என்பது என் அகிலாவை இரண்டு நாட்கள் ஊணுறக்க மின்றிக் கிடத்தி விட்டது ஆச்சரியமான ஒன்றா...?

## கண்டுபிடிக்க முடிகிறதா?



திராட்சை விழிகளை உடைய இந்தப் பெண் குழந்தை பிற்காலத்தில் அமெரிக்க அரசியலில் பெரும்பாதிப்பை ஏற்படுத்தி ஒரு யுத்தத்துக்கும் காரணமானதாகக் கருதப்படுகிறாள். யார் இவள்? தெரிகிறதா?

விடை தெரியாவிட்டால் 64 ம் பக்கம் பார்க்கவும்.

— செ. ரமேஸ்நாயுடு

# பொன்னியின் செல்வன்

நாற்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## ''அதோ பாருங்கள்!

சேனாதிபதி பூதி விக்கிரம கேசரி கூறிய செய்தியைக் கேட்டதும் இளவரசரின் முகத்தில் புன்னகை அரும்பியது.

''கடைசியாக என் உள்ளத்தின் போராட்டத்துக்கு ஒரு முடிவு வந்துவிட்டது போல் காண்கிறது'' என்று மெல்லிய குரலில் தமக்குத் தாமே பேசிக் கொள்கிறவர் போலச் சொல்லிக் கொண்டார்.

பார்த்திபேந்திரன் கொதித்தெழுந்தான். ''சேநாதிபதி! என்ன சொன்னீர்? இது உண்மைதானா? என்னிடம் ஏன் இதுவரையில் சொல்லவில்லை? இந்தப் பித்துக்குளிப் பெண்ணை நீர் நம்முடன் கட்டி இழுத்து வந்ததற்குக் காரணம் இப்போதல்லவா தெரிகிறது. மறுபடியும் கேட்கிறேன்; பழுவேட்டரையர்கள் இளவரசரைச் சிறைப்படுத்தி வரக் கப்பல்களை அனுப்பியிருப்பது உண்மையா?'' என்று கேட்டான்.

''ஆம் ஐயா! இந்தப் பெண் கண்ணால் பார்த்ததாகவும் காதால் கேட்டதாகவும் கூறுவதை நம்புவதாயிருந்தால் அது உண்மைதான்!''

''ஆகா! அந்தக் கிழவர், திருக்கோவிலூர் மிலாடுடையார், கூறியது உண்மையாயிற்று. பழுவேட்டரையர்களை உள்ளபடி உணர்ந்தவர் அவர்தான்! சேநாதிபதி! இத்தகைய செய்தியை அறிந்த பிறகும் ஏன் சும்மா இருக்கிறீர்? பராந்தக சக்கரவர்த்தியின் குலத் தோன்

அமரர் கல்கி



றவை, சுந்தர சோழரின் செல்வப் புதல்வரை, நாடு நகரமெல்லாம் போற்றும் இளவரசரை, தமிழகத்து மக்களெல்லாம் தங்கள் கண்ணினுள் மணியாகக் கருதும் செல்வரை, ஆதித்த கரிகாலருடன் பிறந்த அருள்மொழிவர்மரை, - இந்த அற்பர்களாகிய பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்தி வர ஆட்களை அனுப்பும் படி ஆகிவிட்டதா? இனியும் என்ன யோசனை? உடனே படைகளுடன் புறப்பட்டுச் சென்று இளவரசரைச் சிறைப்படுத்த வந்தவர்களை அழித்து இந்த இலங்கைத் தீவிலேயே அவர்களுக்குச் சமாதியை எழுப்புவோம்..! பிறகு நாம் போட்ட திட்டத்தின்படி காரியத்தை நடத்துவோம்! கிளம்புங்கள்! இன்னும் ஏன் தயக்கம்?" என்று பார்த்திபேந்திரன் பொரி பொரித்துக் கொட்டினான்.

சேநாதிபதி பூதிவிக்கிரமகேசரி அவனைப் பார்த்து, "பார்த்



திபேந்திரா! நீ இப்படித் துடிதுடிப்பாய் என்று எண்ணித்தான் நான் முன்னமே இந்தப் பெண் கொண்டு வந்த செய்தியை உன்னிடம் சொல்லவில்லை. நன்றாக யோசித்துச் செய்ய வேண்டிய காரியம். அவசரப் படுவதில் பயனில்லை!" என்றார்.

"யோசனை செய்ய வேண்டுமா? என்ன யோசனை? எதற்காக யோசனை? இளவரசே! நீங்கள் சொல்லுங்கள். இனி யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? இதற்கு முன் ஏதேனும் தங்களுக்குத் தயக்கமிருந்தாலும் இனித் தயங்குவதற்கு இடமில்லையே? பழுவேட்டரையர்களைப் பூண்டோடு அழித்து விட வேண்டியதுதானே?"

அப்போது இளவரசர், "சேநாதிபதியின் மனத்தில் உள்ளதையும் தெரிந்து கொள்ளலாமே? ஐயா! தாங்கள் எதைப் பற்றி யோசிக்க வேண்டும் என்கிறீர்கள்?" என்று எவ்விதப் படபடப்புமின்றி நிதானமாய்க் கேட்டார்.

"தங்களைச் சிறைப் படுத்துவதற்கு... இந்த வார்த்தைகளைச் சொல்லவும் என் வாய் கூசுகிறது... ஆனாலும் சொல்ல



வேண்டியிருக்கிறது. தங்களைச் சிறைப் படுத்த வந்திருப்பவர்கள் சக்கரவர்த்தியின் கட்டளையோடு வந்திருந்தால் நாம் என்ன செய்வது? அப்போதும் அவர்களை எதிர்த்துப் போரிடுவதா?"

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன் கடகடவென்று சிரித்துவிட்டு, "அழகாயிருக்கிறது, தங்கள், வார்த்தை! சக்கரவர்த்தி சொந்தமாகக் கட்டளை போடும் நிலையில் இருக்கிறாரா? அவரையேதான் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்களே!" என்றான்.

இச்சமயத்தில் வந்தியத்தேவன், குறுக்கிட்டு, "பல்லவ தளபதி கூறுவது முற்றும் உண்மை. நானே என் கண்களால் பார்த்தேன். சக்கரவர்த்தியைச் சிறையில் வைத்திருப்பது போலத்தான் பழுவேட்டரையர்கள் வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய விருப்பமின்றி யாரும் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது; பேச முடியாது. நான் ஒரு வார்த்தை சொல்லத் துணிந்ததற்காக என்னை அவர்கள் படுத்திய பாட்டை நினைத்தால்... அப்பா! சின்னப்பழுவேட்டரையரின் இரும்புக் கை பற்றிய இடத்தில் இன்னும் எனக்கு வலிக்கிறது!" என்று கூறி, தன் மணிக்கட்டைத் தடவிக் கொண்டான்.

"அப்படிச் சொல், வல்லவரையா! உன்னை என்னமோவென்று நினைத்தேன். இளவரசருக்கும் சேநாதிபதிக்கும் இன்னொருமுறை நன்றாக எடுத்துச் சொல்!" என்றான் பார்த்திபேந்திரன்.

இளவரசர், "வேண்டாம்; அவர் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி விட்டார்!" என்று கூறி, வந்தியத்தேவனைப் பார்த்து, "ஐயா! நீர் அந்தப் பெண்ணைப் போய் அழைத்து வருவதாகச் சொன்னீரே! ஏன் இங்கேயே நின்று கொண்டிருக்கிறீர்? அவள் கொண்டு வந்த செய்தியை அவள் வாய்மொழியாகவே விவரமாகக் கேட்கலாம்! கொஞ்சம் இறுக்குப் பிடித்த பெண் போலத் தோன்றுகிறது. எப்படியாவது நல்ல வார்த்தை சொல்லி அவளை இங்கே அழைத்து வாருங்கள்!"

என்றார்.

"போகிறேன், இளவரசே! போய் அழைத்து வருகிறேன். ஆனால், பழுவேட்டரையர்களிடம் தாங்கள் சிறைப் படுவது என்பதை மட்டும் என்னால் சகிக்க முடியாது. என் உடம்பில் உயிர் இருக்கும் வரையில் அது நடவாத காரியம்!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் சென்றான்.

"சேநாதிபதி! தங்களுடைய கருத்து என்னவென்று சொல்லவில்லையே?" என்று அருள்மொழிவர்மர் கேட்டார்.

"என்னுடைய கருத்து இதுதான். பழுவேட்டரையர்கள் அனுப்பியிருக்கும் ஆட்களைத் தாங்கள் சந்திக்கக் கூடாது. பார்த்திபேந்திரர் கொண்டு வந்திருக்கும் கப்பலில் ஏறித் தாங்கள் உடனே காஞ்சிக்குப் போய் விடுங்கள். நான் தஞ்சாவூருக்குப் போகிறேன். அங்கே சக்கரவர்த்தியை நேரில் பார்த்து உண்மை நிலைமையைத் தெரிந்து கொள்கிறேன்..."

"தஞ்சாவூருக்குத் தாங்கள் போவது சிங்கத்தின் வாயில் தலையைக் கொடுப்பது போலத்தான். போனால் திரும்பி வர மாட்டீர்கள். அப்படியே அங்குள்ள பாதாளச் சிறையில் போய் விடுவீர்கள். சக்கரவர்த்தியைப் பார்க்கவும் தங்களால் முடியாது..."

"என்ன வார்த்தை சொல்கிறாய்? என்னைச் சிறையில் அடைக்கக் கூடிய வல்லமையுள்ளவன் சோழ நாட்டில் எவன் இருக்கிறான்? சக்கரவர்த்தியை நான் சந்திக்கக் கூடாது என்று தடுக்கக்



கூடிய ஆண்மை உள்ளவன் எவன் இருக்கிறான்? மேலும் அங்கே முதன்மந்திரி அநிருத்த பிரம்மராயர் இருக்கிறார்.

"பிரம்மராயர் இருக்கிறார். இருந்து என்ன பயன்? அவருக்கே சக்கரவர்த்தியைப் பார்க்க முடிவதில்லை. இதோ அவருடைய சிஷ்யன் நிற்கிறானே, அவன் என்ன சொல்கிறான் என்று கேட்டுப் பார்க்கலாமே?"

சேநாதிபதி ஆழ்வார்க்கடியான் பக்கம் திரும்பி, "ஆம்; இந்த வைஷ்ணவன் இங்கு நிற்பதையே மறந்து விட்டேன். திருமலை! ஏன் இப்படி மௌனமாக நிற்கிறாய்? சற்று முன் இளவரசர் சொன்னதுபோல் நீயும் ஊமையாகி விட்டாயா?" என்றார்.

"சேநாதிபதி! 'கடவுள் நமக்கு இரண்டு காதுகளைக் கொடுத்திருக்கிறார்; வாய் ஒன்றைத்தான் கொடுத்திருக்கிறார். ஆகையால் செவிகளை நன்றாக உபயோகப்படுத்து; பேசுவதைக் கொஞ்சமாக வைத்துக் கொள்' என்று என் குருநாதர் எனக்குச் சொல்லியிருக்கிறார். முக்கியமாக, பெரிய ராஜாங்க விஷயங்களைப் பற்றிப் பேச்சுகள் நடக்கும் இடத்தில் அந்த விரதத்தைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து வரச் சொல்லியிருக்கிறார்..."

"குருவின் வாக்கை நன்றாக நிறைவேற்றுகிறாய். நாங்களே இப்போது கேட்பதனால் சொல். உன்னுடைய யோசனை என்ன?"

"எதைப் பற்றி என் யோசனையைக் கேட்கிறீர்கள், சேநாதிபதி!"

"இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்த விஷயமாகத்தான். இளவரசர் இப்போது என்ன செய்வது உசிதம்? இலங்கையிலேயே இருக்கலாமா? அல்லது காஞ்சிக்குப் போகலாமா?"

"என்னுடைய உண்மையான கருத்தைச் சொல்லட்டுமா? இளவரசர் அனுமதித்தால் சொல்லுகிறேன்."

ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த அருள்மொழிவர்மர், ஆழ்வார்க்கடியானை ஏறிட்டுப் பார்த்து, "சொல் திருமலை! தாராளமாய் மனத்தை விட்டுச் சொல்!" என்று தைரியப்படுத்தினார்.

"இந்த இலங்கைத் தீவிலேயே மிகக் கடுமையான கட்டுக்காவல் உள்ள சிறைச்சாலை எது உண்டோ, அதைக் கண்டு பிடித்து, அதற்குள்ளே இளவரசரை அடைத்துப் போட வேண்டும்! வெளியில் பலமான காவலும் போட வேண்டும்!"

"இது என்ன உளறல்?" என்றார் சேநாதிபதி.

"விளையாட இதுதானா சமயம்?" என்றான் பார்த்திபேந்திரன்.

"நான் உளறவும் இல்லை; விளையாடவும் இல்லை. மனத்தில் உள்ளதைச் சொன்னேன். நேற்று இரவு இளவரசர் அநுராதபுரத்து வீதிகளின் வழியாக வந்து கொண்டிருந்தார். அவர் தலை மீது ஒரு வீட்டின் முன் முகப்பு இடிந்து விழுந்தது. பிறகு ஒரு வீட்டில் நாங்கள் படுத்திருந்தோம். நல்லவேளையாக ஒரு காரியத்தின் பொருட்டு எழுந்து போய் விட்டோம். சற்று நேரத்துக்கெல்லாம் அந்த வீடு தீப் பற்றி எரிந்தது. இவையெல்லாம் உண்மையா, இல்லையா என்று இளவரசரையே கேளுங்கள்!"

இருவரும் இளவரசரை நோக்கினார்கள். அவருடைய முகபாவம் ஆழ்வார்க்கடியானுடைய கூற்றை உறுதிப்படுத்தியது.

"இந்த அபாயங்கள் எல்லாம் யாருக்காக நேர்ந்தவையென்று கேளுங்கள். என்னையோ அல்லது வந்தியத் தேவனையோ கொல்லுவதற்காக யாராவது வீட்டைக் கொளுத்துவார்களா?"

பார்த்திபேந்திரன் உடனே துள்ளிக் குதித்து, "இளவரசரைக் கொல்லுவதற்குத்தான் யாரோ முயற்சி செய்கிறார்கள். இதனால் இளவரசர் என்னுடன் காஞ்சிக்கு வர வேண்டிய அவசியம் உறுதிப்படுகிறது!" என்றான்.

"கூடவே கூடாது! தங்களுடன் இளவரசரை அனுப்புவதைக் காட்டிலும் பழுவேட்டரையனிடமே பிடித்துக் கொடுத்து விடலாம்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"வைஷ்ணவனே! என்ன சொன்னாய்!" என்று பார்த்திபேந்திரன் கத்தியை

உருவினான்.

சேநாதிபதி அவனைக் கையமர்த்தி, "திருமலை! ஏன் அவ்விதம் சொல்லு கிறாய்? பார்த்திபேந்திர பல்லவர் சோழ குலத்தின் அருந்துணைவர் என்று உனக்குத் தெரியாதா?" என்று கேட்டார்.

"தெரியும் சேநாதிபதி, தெரியும்! சிநேகம் இருந்துவிட்டால் மட்டும் போதுமா?"

"பார்த்திபேந்திரர் சிநேகத்துக்காகவே உயிரையும் கொடுக்கக் கூடியவர் என்பதை அறிவேன், திருமலை!"

"அதுவும் இருக்கலாம். ஆனால் நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு மறுமொழிக் கூறச் சொல்லுங்கள். நாங்கள் முந்தாநாள் மாலை தம்பள்ளைக்கு அருகில் போய்க் கொண்டிருந்தபோது இவருடன் இரண்டு பேர் வருவதைப் பார்த்தோம்! அந்த மனிதர்கள் யார், இப்பொழுது அவர்கள் எங்கே என்று இவரைக் கேட்டுச் சொல்லுங்கள்."

பார்த்திபேந்திரப் பல்லவன் சிறிது திடுக்கிட்டுப் போனான். கொஞ்சம் தயக்கத்துடனே கூறினான்: - "திரிகோண மலையில் அவர்களை நான் சந்தித்தேன். இளவரசர் இருக்குமிடத்தை எனக்குக் காட்டுவதாக அவர்கள் அழைத்து வந்தார்கள். அநுராதபுரத்தில் திடீரென்று மறைந்து விட்டார்கள். எதற்காகக் கேட்கிறாய், வைஷ்ணவனே! அவர்களைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?"

"தெரியும்! சோழ குலத்தை அடியோடு ஒழித்து விடச் சபதம் செய்திருப்பவர்களில் அவர்கள் இருவர் என்று எனக்குத் தெரியும். நேற்று அநுராதபுரத்தில் அவர்கள்தான் இளவரசரைக் கொல்லப் பார்த்தார்கள் என்று ஊகிக்கிறேன்... ஆகா! அதோ பாருங்கள்!" என்று ஆழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டினான்.

அவன் சுட்டிக் காட்டிய இடம் அம்மண்டபத்திலிருந்து சற்றுத் தூரத்திலிருந்தது. நெருங்கிப் படர்ந்திருந்த மரங்களுக்கு இடையில் ஓர் அழகிய யுவதியும் யௌவன வாலிபனும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வந்தியத்தேவனும் பூங்குழலியும்தான் என்பதும் ஊகிக்கக் கூடியதாயிருந்தது. பேசிக் கொண்டேயிருந்த வந்தியத்தேவன் சட்டென்று ஒரு சிறிய கத்தியைச் சுழற்றி வீசி எறிந்தான். கத்தி ஒரு புதரில் போய் விழுந்தது. 'வீல்' என்று ஒரு குரல் கேட்டது.

### நாற்பத்து இரண்டாம் அத்தியாயம்

# பூங்குழலியின் கத்தி

பாழடைந்த மண்டபத்திலிருந்து பூங்குழலியைத் தேடிக் கொண்டு சென்ற வந்தியத்தேவன் அவள் ஒரு மரத்தின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருப்பதைக் கண்டான். இலேசான விம்மல் அவனிடமிருந்து வந்து கொண்டிருந்தது.

குரலை மிகவும் நயப்படுத்திக் கொண்டு "பூங்குழலி!" என்றான்.

சத்தம் கேட்ட பூங்குழலி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"நீதானா?" என்று சொல்லி மறுபடியும் திரும்பிக்கொண்டாள்.

"நான்தான்! என் பேரில் உனக்கு என்ன கோபம்?"

"உன் பேரில் எனக்கு எந்தவிதக் கோபமும் இல்லை."

"பின்னே ஏன் உனக்கு இவ்வளவு சிடுசிடுப்பு?"

"எனக்கு ஆண் பிள்ளைகளைக் கண்டாலே பிடிக்கவில்லை."

"இளவரசரைக் கூடவா?"

பூங்குழலி திரும்பிக் கண்களில் கனல் எழும்படி வந்தியத்தேவனைப் பார்த்தாள்.

"ஆமாம்; அவரைத்தான் முக்கியமாகப் பிடிக்கவில்லை!" என்றாள்.

"அப்படி அவர் என்ன குற்றத்தைச் செய்து விட்டார்?"

"என்னை அவருக்கு ஞாபகமேயில்லை. என்னை அவர் முகமெடுத்துக்கூடப் பார்க்கவில்லை."

"உன்னை அவருக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. நான் உன்னைப் பற்றிக் கூறியதும், 'ஓ! சமுத்திர குமாரியை எனக்குத் தெரியாதா?" என்றார்.

"பொய் சொல்லுகிறாய்."

"நீயே நேரில் வந்து கேட்டுக் கொள்."

"என்னை நினைவிருந்தால், ஏன் என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை?"

"அவர் பேசினார்; நீதான் மறுமொழி சொல்லாமல் ஓடி வந்து விட்டாய்."

"அந்த மாதிரி பேச்சை நான் சொல்லவில்லை. தெரிந்தவர்களைப் பார்த்தால் 'என்ன? ஏது?' என்று விசாரிப்பது கிடையாதா? – நீ சொல்லுவது பொய்! அவர் என்னை முகமெடுத்தே பார்க்கவில்லை."

"பூங்குழலி! அதற்கு ஒரு காரணம் இருக்கிறது."

"என்ன காரணம்?"

"இளவரசருக்கு இப்போது ரொம்பக் கஷ்ட காலம்."

"யார் சொன்னது?"

"எல்லா ஜோசியர்களும் சொல்லியிருக்கிறார்கள். குடந்தை சோதிடர்



என்னிடமே சொன்னார்."

"உன்னிடம் என்ன சொன்னார்?"

"இளவரசருக்குக் கொஞ்ச நாள் வரையில் கஷ்டத்துக்கு மேல் கஷ்டமாக வந்து கொண்டிருக்கும் என்று சொன்னார். அவரைச் சேர்ந்தவர்களுக்கும் கஷ்டங்கள் வரும் என்று சொன்னார். இது இளவரசருக்கும் தெரியும். ஆகையினால் அவர் யாரும் தன்னோடு சிநேகிதமாக இருப்பதை விரும்பவில்லை. தனக்கு வரும் கஷ்டம் தன்னோடு போகட்டும் என்று நினைக்கிறார்."

"நீ மட்டும் ஏன் அவரோடு சிநேகமாயிருக்கிறாய்?"

"நீ சற்று முன் பார்க்கவில்லையா? என்னையும் சண்டை பிடித்துத் துரத்த அவர் பிரயத்தனப்படுகிறார். நடுச்சாலையில் ஒரு காரணமும் இல்லாமல் அவர் என்னோடு கத்திச் சண்டை போட்டார். நீங்கள் வந்ததினால் சண்டை நின்றது."

"அவர் துரத்தினாலும் நீ அவரை விட்டுப் போக மாட்டாயா?"

"மாட்டவே மாட்டேன். அவருக்கு வரும் கஷ்டங்களையெல்லாம் நானும் பகிர்ந்து அனுபவிப்பேன்."

"அவரை உனக்கு அவ்வளவு பிடித்திருக்கிறதா?"

"ஆமாம்; ரொம்ப ரொம்பப் பிடித்திருக்கிறது."

"எதனால் பிடித்திருக்கிறது?"

"காரணம் சொல்லத் தெரியாது. அவரைப் பார்த்தவுடனே அவர் பேரில் பிரியம் ஏற்பட்டு விட்டது."

"எனக்கும் அப்படித்தான்!" என்றாள் பூங்குழலி. உடனே தான் அவ்விதம் திறந்து சொல்லிவிட்டதைப் பற்றி வருந்தி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"உனக்கு இளவரசரிடம் பிரியம் என்று எனக்குத் தெரியும். ஆகையினால் உன்னை அழைத்துப் போக வந்தேன். என்னுடன் வா!"

"வர மாட்டேன்!" என்று பூங்குழலி அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள்.

"வராவிட்டால் பலவந்தமாக உன்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு போவேன்."

"அருகில் நெருங்கினால் இதோ கத்தி இருக்கிறது; ஜாக்கிரதை!" என்று பூங்குழலி தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

"பாவிப் பெண்ணே! எதற்காக என்னைக் குத்திக் கொல்ல வருகிறாய்? இளவரசரிடம் உன்னைப் பற்றி ஞாபகப்படுத்தினேனே, அதற்காகவா?"

"நீ பொய் சொல்லுகிறாய்; அவரிடம் என்னைப் பற்றி நீ ஒன்றுமே சொல்லவில்லை!"

"போனால் போகட்டும்; இளவரசரைப் பிடித்துக் கொண்டு போக இரண்டு கப்பல்கள் வந்திருப்பதாகச் சொன்னாய் அல்லவா? அதை அவரிடம் வந்து சொல்லி விட்டு அப்புறம் எப்படியாவது தொலைந்து போ!"

"எல்லா விவரங்களும் சேநாதிபதியிடம் சொல்லி விட்டேன்."

"இளவரசர் உன்னிடம் நேரில் கேட்டு அறிய விரும்புகிறார்."

"அவர் முன்னால் வந்தால் நான் ஊமையாகி விடுவேன்."

"ஊமைச்சிகளிடத்தில் இளவரசருக்கு ரொம்பப் பிரியம்!"

"சிச்சி! நீ பரிகாசம் செய்கிறாய்!" என்று சொல்லி பூங்குழலி கத்தியை ஓங்கினாள்.

"அப்படியானால், நீ என்னுடன் வரப் போவதில்லையா?"

"இல்லை!"

"சரி; நான் போகிறேன்!" என்று கூறி விட்டு வந்தியத்தேவன் இரண்டு அடி எடுத்து வைத்தான். மறுபடியும் சட்டென்று திரும்பிப் பூங்குழலியின் கையிலிருந்து அவளுடைய கத்தியைப் பிடுங்கி வீசி எறிந்தான்!

வீசி எறிந்த கத்தி வெகுதூரம் சுழன்று சுழன்று ஓர் அடர்ந்த புதரில் விழுந்தது.

கத்தி விழுந்த இடத்திலிருந்து 'வீல்' என்று ஒரு குரல் கேட்டது.

அது மனிதக் குரலா, ஏதேனும் ஒரு விலங்கு அல்லது பட்சியின் குரலா என்று தெரிந்து கொள்ள முடியவில்லை.

கத்தியைப் பிடுங்கியதும் வந்தியத்தேவனைக் கடுங்கோபத்துடன் பார்த்த பூங்குழலி மேற்கூறிய சத்தத்தைக் கேட்டதும் கத்தி விழுந்த இடத்தை ஆர்வத்துடன் நோக்கினாள். பிறகு, இருவரும் வியப்

புடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

மெள்ள மெள்ள நடந்து கத்தி விழுந்த இடத்துக்கருகிலிருந்த புதரை நெருங்கிப் பார்த்தார்கள்.

செடிகளிலும் தரையிலும் புது இரத்தம் சிந்தியிருந்தது.

மற்றபடி அங்கு மனிதரும் இல்லை; விலங்கும் இல்லை. பூங்குழலியின் கத்தியையும் காணவில்லை!

"பார்த்தாயா? பூங்குழலி! நான் கூறியதன் உண்மை இப்போதாவது தெரிகிறதா? இளவரசரை நாலா பக்கமும் அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன. எந்த நேரத்தில் எந்த இடத்திலிருந்து எப்படிப்பட்ட அபாயம் வருமென்று சொல்ல முடியாது. தற்செயலாக உன்னுடைய கத்தியைப் பிடுங்கி நான் விட்டெறிந்தேன். அதிலிருந்து இங்கே யாரோ பதுங்கிக் கொண்டிருந்தது தெரிய வந்தது. எதற்காகப் பதுங்கியிருக்க வேண்டும் என்று நீயே யோசித்துப் பார்! இளவரசரைச் சமயம் பார்த்துத் தீர்த்துக் கட்டுவதற்காகத்தான்! கோடிக்கரைக்கு நான் வந்ததற்கு முதல் நாள் இரண்டு பேரை உன் அண்ணன் படகேற்றி அழைத்துப் போனதாகவும் அவர்களைப் பற்றி உனக்குச் சந்தேகம் தோன்றியதாகவும் சொல்லவில்லையா? அதை ஞாபகப்படுத்திக் கொள்! இப்படிப் பட்ட சமயத்தில் இளவரசரிடம் பிரியம் உள்ளவர்கள் அவரை விட்டுப் போகலாமா?" என்று வந்தியத்தேவன் மூச்சு விடாமல் பேசி நிறுத்தினான்.

"அவர் என்னைப் போகச் சொன்னால் என்ன செய்வது?" என்று பூங்குழலி கேட்டாள்.

"அவர் போகச் சொன்னாலும் நாம் போகக் கூடாது!"

பூங்குழலி சற்று யோசித்து விட்டு, "இங்கே பதுங்கியிருந்தது யார் என்று கண்டுபிடிக்க வேண்டாமா?" என்றாள்.

"அது நம்மால் முடியாத காரியம். இந்த அடர்ந்த காட்டில் எங்கேயென்று தேடிக் கண்டுபிடிப்பது? அதிக நேரம் தாமதித்தால் இளவரசருக்கு உண்மையாகக் கோபம் வந்து விடும். நம்மை விட்டுவிட்டு எல்லாரும் போய் விடுவார்கள்! பேசாமல் என்னுடன் வா!"

"சரி வருகிறேன்!" என்று பூங்குழலி கூறினாள்.

மண்டபத்திலிருந்தவர்கள் வந்தியத்தேவனும் பூங்குழலியும் அருகில் வந்ததும் முதலில் மேற்படி சம்பவத்தைப் பற்றியே கேட்டார்கள். "எதற்காகக் கத்தியை எறிந்தாய்? 'வீல்' என்ற சத்தம் கேட்டதே, அது என்ன சப்தம்?" என்று வினவினார்கள்.

"புதரில் ஏதோ ஒரு மிருகம், சிறுத்தையோ அல்லது நரியோ, பதுங்கியிருந்தது போல் தோன்றியது. அதனால் இவளுடைய கத்தியைப் பிடுங்கி வீசி எறிந்தேன். கிட்டப் போய்ப் பார்த்தோம். ஒன்றும் இல்லை" என்றான் வந்தியத்தேவன்.

"அது போனால் போகட்டும்; இந்தப் பெண்ணிடம் கேட்க வேண்டியதைக் கேளுங்கள்!" என்றார் சேநாதிபதி.

பூங்குழலி வந்ததிலிருந்து இளவரசரையே பார்த்துக் கொண்டிருந்தாள். இளவரசர் அப்போது அவளை ஏறிட்டுப் பார்த்தார்.

சிச்சி! இந்த நெஞ்சு எதற்காக இப்படி அடித்துக் கொள்கிறது? தொண்டையில் வந்து ஏதோ அடைக்கிறதே, அது என்ன? கண்ணில் எதற்காகக் கண்ணீர் ததும்புகிறது! அசட்டுப் பெண்ணே! உன் தைரியம் எல்லாம் எங்கே போயிற்று? அலைகடலையும் பெரும்புயலையும் கண்டு கலங்காத உன் உள்ளம் ஏன் இப்போது இப்படித் தத்தளிக்கிறது? கொடிய பயங்கர வேங்கைப் புலியின் கொள்ளிக் கண்களை ஏறிட்டுப் பார்க்கும் துணிவு படைத்த உன் கண்கள் ஏன் இப்போது மங்கல் அடைகிறது! பெண்ணே! மறுபடியும் பைத்தியக்காரி என்ற பட்டம் சூட்டிக் கொள்ளாதே! இளவரசரை நிமிர்ந்து பார்! அவர் கேட்கும் கேள்விகளுக்குக் கணீர் என்று மறுமொழி சொல்லு! உன்னை என்ன செய்து விடுவார்? அவர் கருணை மிகுந்தவர், தயாளு என்று உலகமெல்லாம் சொல்கிறதே! பேதைப் பெண்ணாகிய உன்னை இளவரசர் என்ன செய்து விடுவார்...!

"சமுத்திர குமாரி! என்னை உனக்கு நினைவிருக்கிறதா?" என்று அவர் கேட்டது ஆழ்கடலின் அடியிலிருந்து வரும் குரல் போல் அவள் காதில் தொனித்தது.

(தொடரும்)

"தமிழ் நாட்டிலுள்ள பாகவதர்கள், பாடகர்கள் ஆகியவர்களில் ஒரே ஒருவருடைய பாட்டைத்தான் நீர் கேட்கலாம். அப்படியானால் யாரைத் தேர்ந்தெடுப்பீர்?'' என்று என்னைக் கேட்டால், அதற்குப் பதில் சொல்வது மிகவும் கஷ்டமாய்த் தானிருக்கும். ஒவ்வொரு பாடகராகச் சிந்தித்து வரும்போது, அவரவர்களிடம் சில அபூர்வ சரக்குகள் இருப்பதால் தள்ளிக் கொண்டு மேலே செல்வது மிகவும் சிரமம். உதாரணமாக, செம்மங்குடி சீனிவாசய்யரிடம் வந்தால், ஒரு பெரிய முட்டுக்கட்டைதான். அவருடைய பாட்டு வேண்டாமென்று தள்ளிவிட்டு எப்படிப் போவது? ஆனாலும் மேற்படி கேள்விக்குப் பதில் சொல்லித்தான் ஆக வேண்டுமென்று வற்புறுத்தினால், திணறித் திண்டாடி விட்டு, முடிவாக மாங்குடி சிதம்பர பாகவதரைத்தான் தேர்ந்தெடுப்பேன். ஏனென்றால், ஏறக்குறைய பரிபூரண சங்கீதத்துக்குரிய அம்சங்கள் எல்லாம் அவருடைய பாட்டில் பொருந்தியிருக்கின்றன என்பது என் அபிப்பிராயம்.

அத்தகைய சரீரத்தில் பகவான் எப்படிப்பட்ட சாரீரத்தைத்தான் அமைத்திருக்கிறார்! இவ்வளவு வருஷ காலமாய்ப் பாடிய பிறகு அந்தச் சாரீரத்தில் துளி கம்மல் வேண்டுமே, கிடையாது. எவ்வளவு தூரம் சாரீரத்தை அடக்கிக் கட்டுக்குள் வைத்திருக்கிறார்? இடி முழக்கம் போன்ற தொனியைக் கிளப்பும் அதே தொண்டை அடுத்த நிமிஷத்தில் வீணாகானம் போன்ற நாதத்தைத் தருகிறது!

பாகவதருடைய சங்கீதத்தில் சுருதி, லயம் இவைகளைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. அவை பாகவதருக்கு அடிமை பூண்டு தொண்டு புரிகின்றன.

மற்றும், கேட்பவர்களுக்குச் சலிப்பு என்பது சிறிதும் தோன்றாவண்ணம், எவ்வளவு விதவிதமான மாறுதல்களை அவர் கையாளுகிறார்?

**அமரர் கல்கி**

சுலோகங்கள், விருத்தங்கள், கீர்த்தனங்கள், துக்கடாக்கள், சிந்துகள், கண்ணிகள், மகாராஷ்டிர தாட்டிகள், ஹிந்துஸ்தானி பாணிகள், விதவிதமான கன ராகங்கள், அபூர்வ ராகங்கள், தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம், மகாராஷ்டிரம், ஹிந்துஸ்தானி பாஷைகளில் உருப்படிகள்! இவை ஒன்றன்பின் ஒன்றாய்ப் புதிது புதிதான இனிமையுடன் வந்து கொண்டிருக்கின்றன.

பாகவதருடைய பாட்டுக்களில் அக்ஷரப் பிழை ஒன்று கண்டுபிடிப்பவர்களுக்கு "ஆயிரம் ரூபாய் இனாம்" என்று விளம்பரம் செய்யலாம். அக்ஷரப் பிழை ஏன் விழுகிறது? அர்த்தம் தெரியாமல் உருப்போட்டு ஒப்புவித்தால் அல்லவா அக்ஷரப் பிழைகள் ஏற்படும்? பாகவதரோ, தாம் பாடும் பாட்டுக்களைப் பொருள் தெரிந்து பாடுவதோடு திருப்தியடைவதில்லை; கேட்பவர்களுக்கும் பொருளை விளங்கச் செய்து விடுகிறார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, அவருடைய சங்கீதம் ஹிருதயபாவம் பூரணமாகப் பொருந்தியதாயிருக்கிறது. வேறு பாஷையில் பாட்டுப் பாடினால் கூட, சபையோருக்குப் பொருள் சொல்லிவிட்டு உணர்ச்சியுடன் பாடுவதால், பாட்டின் இனிமையிலும் பொருளிலும் சபையோர் முழுதும் ஈடுபட்டு மெய்மறக்கிறார்கள்.

நம் நாட்டில் முன் நாளில் சங்கீதம் என்பது இலட்சியம் ஒன்றுமில்லாத வெறும் சுகானுபவமாகக் கருதப்படவில்லை. பஜனைகள், காலட்சேபங்கள், நாடகங்கள், நாட்டியங்கள் ஆகியவைகளுடன் கலந்தே அனுபவிக்கப்பட்டு வந்தது. தனிப்பட்ட சங்கீதக் கச்சேரி என்பது இடையில் வந்ததேயாகும்.

மகா வைத்தியநாதய்யர் முதலானவர்கள் எல்லாம், பெரும்பாலும் புராணப் பிரசங்கங்களுக்கு அனுசரணையாகவே சங்கீத இன்பத்தை ஊட்டி வந்தார்கள் என்று அறிகிறோம்.

பரிபூரண சங்கீதத்தை அனுபவிப்பதற்குக் காலட்சேபமே சிறந்த சாதன

மாகும். அதிலும், சிதம்பர பாகவதரைப் போல் சங்கீத வித்தையின் ஆத்மாவை அறிந்தவர்கள் காலட்சேபம் செய்தால், அதைவிடச் சிறந்த அனுபவம் சங்கீத உலகிலே வேறொன்றும் கிடையாது என்று சொல்லுவார்.

திட்டத் தொடங்கினான். பகவானுக்கு முன்னால் வெற்றிலைத் தாம்பாளமும் பாக்குக் கூடையும் இருந்தன. சிசுபாலன் வைய வைய, பகவான் ஒவ்வொரு பாக்காகப் போட்டு வசவுகளை எண்ணிக்

# சிதம்பர பாகவதர்



**க**தை சொல்வதில் பாகவதருடைய திறமை பிரசித்தியானது.

பொதுவாக நாடகங்கள், டாக்கிகள், காலட்சேபங்கள் எல்லாவற்றையும் பின்வரும் நான்கு பிரிவுகளாக வகுக்கலாம்:-

1) ரஸிகர்களுக்கு இன்பமளிப்பவை;

2) பாமரர்களுக்கு இன்பமளிப்பவை;

3) ரஸிகர்களுக்கும் பாமரர்களுக்கும் இன்பமளிப்பவை;

4) ரஸிகர்களுக்காவது பாமரர்களுக்காவது இன்பமளிக்காதவை.

பிரம்மஸ்ரீ சிதம்பர பாகவதரின் காலட்சேபம் மூன்றாவது பிரிவைச் சேர்ந்தது. ரஸிகத்தன்மையில் தலைசிறந்த கல்விமான்களும் அதை அனுபவிக்கலாம். கல்வியறிவில்லாத சாதாரண ஜனங்களுக்கும் அது ருசியாயிருக்கும்.

"கிருஷ்ண பரமாத்மாவைச் சிசுபாலன்

கொண்டே வந்தார். நூறு வசவுகள் ஆனதும், 'அடே! உனக்குத் தானேடா முதல் தாம்பூலம் கொடுக்க வேண்டுமென்கிறாய்? இந்தா, எடுத்துக் கொள்!' என்று எதிரிலிருந்த வெற்றிலைத் தட்டை எடுத்து வீசி எறிந்தார். அதுவே சக்கராயுத

மாகிக் கரகரவென்று சுழன்று சென்று சிசு பாலனை சம்ஹரித்தது'' என்று அவர் கூறும்போது, ரஸிகர்கள் நாவைச் சப்புக் கொட்டிக் கொண்டு அதனுடைய நயத்தை அனுபவிக்கிறார்கள்.

அடுத்தாற்போல், அவர் உணவு வகைகளை அடுக்கும் பாட்டுப் பாடி வருகையில், "கொழுக்கட்டை'' என்பதையும், "பொரிச்ச குழம்பு" என்பதையும் பாவத்துடன் (!) கூறும் போது சர்வ ஜனங்களும் சிரிக்கிறார்கள். இவ்வாறு உயர்தர நகைச்சுவையும், சாதாரண விகடமும் அவர் கதையில் காணலாமாயினும், ஆபாச அருவருப்பு ரஸங்களை மட்டும் காணவே முடியாது.

அவர் கதை சொல்லும் முறையில் குறைகள் கண்டுபிடிப்பதாயிருந்தால், இரண்டு குறைகள் சொல்லலாம். ஒன்று தான், முதலில் நான் குறிப்பிட்டிருக்கிற படி, "வாயு புத்திரனாகப் பட்டவனான பீமசேனனென்று சொல்லப்படுகிறவனாய் இருந்து கொண்டிருக்கப்பட்டவனானவன்" என்றெல்லாம் பேசுவது. ஆனால் இதை ஒரு பெரிய குறை என்று சொல்வதற்கில்லை. நம்மில் அநேகர் கூடத்தான் பேசுவதில் பல வேடிக்கை முறைகளைக் கையாளுகிறோம்.

ஒருமுறை ரயில்வே ஸ்டேஷனில் நண்பர் ஒருவரை ரயிலேற்றிவிட்டு வெளியே வந்தேன். அதே காரியத்துக்காக வந்த மற்றொரு பிரமுகரும் (ரிடயர் ஆன ஜட்ஜ்) வெளியே வந்தார். அப்போது எதிரில் அவருக்குத் தெரிந்த மனிதன் ஒருவன் வந்தான். அவனைப் பார்த்ததும்,



"ஏண்டா! இதை அவன் கொடுத்தாச்சா?'' என்றார். பிறகு திருத்திக் கொண்டு,

"இல்லேடா! இவன்கிட்ட அதைக் கொடுத்தாச்சா?" என்றார். மறுபடியும்,

"அதுதாண்டா! அவனை இதுகிட்ட கொடுத்தாச்சா?" என்றார். அதை யாரிடம் கொடுத்தாச்சா என்று மட்டும் அவர் சொல்லவேயில்லை.

இவரைப் போலவே, சமயத்தில் வார்த்தைகள் அகப்படாத காரணத்தினாலும், பழக்கத்தின் தோஷத்தினாலும், "அதை இது பண்ணியாச்சா?" என்றும், "இதுக்கு அதைப் பண்ணிவிட்டால் என்ன?" என்றும் நம்மில் சிலர் பேசுகிறோம். அப்படியிருக்கும்போது, இதுக்காக அவரை இது சொல்றதாக எனக்கு இது இல்லை! (அதாவது "ஆகப்பட்ட" "இருந்து கொண்டிருக்கப்பட்ட" ஆகியவைகளுக்காகப் பாகவதரைக் குறை சொல்வதாக எனக்கு உத்சேமில்லை.)

இன்னும் ஒரு சிறு குறை என்னவென்றால், கதையின் நடுவில் இங்கிலீஷ்

வார்த்தைகளை அபரிதமாய்க் கலப்பதே யாகும். சமயமறிந்து ஒவ்வொரு இங்கிலீஷ் வார்த்தையை நடுவில் கலப்பதில் ரஸம் உண்டு என்று நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் "Woman's Franchiseக்காக Fight பண்ணின First Lady துரோபதிதான்" என்றெல்லாம் மணிப்பிரவாளமாக வரும் வாக்கியங்கள், காலட்சேபத்தின் நடுவில் காதில் கடூரமாய்த்தான் விழுகின்றன.

தற்கால அரசியல், சமூகப் பிரச்னைகளைக் கதையின் நடுவில் புகுத்துவதில், பாகவதர் கைதேர்ந்த புள்ளியாவர். வெகு பொருத்தமாகவும், பளிச்சென்று மனதில் பதியும் படியாகவும் அத்தகைய விஷயங்களைக் கொண்டு வருவார். உதாரணமாக, அன்றைய தினம், பாகவதர் "க்ஷத்திரியர்கள் எல்லாம் வில்லை வளைத்துக் குறியை எய்ய முடியாமல் தோற்று விட்டனர். பஞ்ச பாண்டவர்கள் பிராமணர் வேஷத்தில் பிராமணர் மத்தியில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் எழுந்து 'இதிலே க்ஷத்திரியர்களுக்கு மட்டுந்தான் இடம் உண்டா? பிராமணர்களுக்கும் சான்ஸ் கிடைக்குமா?' என்று கேட்டார்கள்..." என்று கூறியபோது, இந்நாளில் பிராமணர்களின் உத்தியோகத் திண்டாட்டத்தை அறிந்திருக்கும் யார்தான் சிரிக்காமலிருக்க முடியும்? அதே மாதிரி, சகுனி தன்னுடைய வாழ்க்கைத் தத்துவத்தை எடுத்துக் கூறும் சந்தர்ப்பத்தில், "உலகத்திலே பணக்காரன் ஏழையை வருத்துகிறான்; பலசாலி பலஹீனனை விரட்டுகிறான்; அஸ்திர பலமுள்ளவன் அஸ்திரமில்லாதவன் மீது பாய்கிறான்; இதாலி . அபிஹீனியாவை முழுங்கி விடுகிறேன் என்கிறது!" என்று பாகவதர் கூறியது வெகு ரஸமாயும், பொருத்தமாயும் அமைந்திருந்தது.




இன்னும் ஒரு வார்த்தை. பாகவதரைப் பற்றிச் சித்திரத்துடன் இன்னொரு கட்டுரை வெளியாகுமென்று நான் கூறி அதிக காலம் ஆயிற்று. இத்தனை தாமதம் ஏனென்றால், பாகவதரைப் போன்ற பெரிய மனிதர் படத்தைப் போடுவதற்கு ஆனந்த விகடனுடைய 'ஸைஸ்' அவ்வளவு பொருத்தமில்லாமலிருந்தது தான். ஆனாலும் இதற்காக விகடனுடைய ஸைஸைப் பெரிதாக்குவது சாத்தியமில்லையென்று தெரிந்து விடவே, பாகவதருடைய மன்னிப்பை எதிர்பார்த்து, ஏதோ இருக்கிற இடத்தில் படத்தைப் போட்டு விடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.



நன்றி: **ஆனந்த விகடன் (1935)**

## அமரர் கல்கி

# பூதம் விழுங்கியது!

அப்படி ஒன்றும் பிரமாதம் இல்லை. ஒரு கோடி ரூபாய்தான்!

பூதம் விழுங்கியது ஒரு கோடி ரூபாய் தான்!

எந்த பூதம் தெரியுமா?

இந்திய சர்க்கார் காரியாலயங்களில் குடிகொண்டிருக்கும் ஊழல் பூதம்!

''நாட்டில் எல்லாரும் விவசாய அபிவிருத்தி செய்கிறார்களே, நாம் மட்டும் சும்மா இருக்கலாமா?" என்று அந்த ஊழல் பூதம் நினைத்தது.

வெளிநாட்டிலிருந்து பல கோடி ரூபாய்க்கு இரசாயன எரு வரவழைக்க ஆர்டர் கொடுத்தது.

இரசாயன எரு நம் நாட்டின் நில இயல்புக்கு நல்லதா என்பதே சந்தேகமான விஷயம். அதனால் கெடுதல்தான் விளையும் என்று சொல்லும் விவசாய நிபுணர்களும் உண்டு.

ஆகையால் இரசாயன எருவுக்காக வெளிநாட்டுக்கு அனுப்பிய பதினேழு கோடி ரூபாயும் நஷ்டம் என்றே சொல்லலாம்.

ஆனால் தேவைக்கு அதிகமாகவும், அநுமதியும் அங்கீகாரமும் இன்றியும் ஆர்டர் கொடுத்த வகையில் நஷ்டம் ஒரு கோடி ரூபாய்தானாம்!

இவ்விதம் விவசாய மந்திரி கனம் முன்ஷி இந்தியப் பார்லிமெண்டில் கூறியிருக்கிறார்!

"சரி, ஒரு கோடி ரூபாய்தான் நஷ்டம் என்று வைத்துக் கொள்வோம். அதற்குப் பரிகாரம் என்ன செய்தீர்கள்?" என்று கேட்டதற்கு, "சம்பந்தப்பட்ட ஓர் உத்தியோகஸ்தரை டிஸ்மிஸ் செய்திருக்கிறோம்" என்று பதில் கூறியிருக்கிறார்.

கனம் முன்ஷியின் வாக்குமூலங்களிலிருந்தே சர்க்காரின் மூன்று இலாகாக்களைச் சேர்ந்த பல பெரிய உத்தியோகஸ்தர்களுக்கு இந்த ஊழலில் உடந்தைப் பொறுப்பு ஏற்படுவதாகத் தெரிகிறது.

அப்படியிருக்க, ''ஒரு உத்தியோகஸ்தரை டிஸ்மிஸ் செய்து விட்டோம்'' என்பது யார் கண்ணைத் துடைப்பதற்காக? மற்றவர்களின் பெயர்களைச் சொல்வதற்குக் கூடச் சங்கோசப்படுவது எதற்காக?

பிரிட்டிஷ் ஆட்சியைக் காட்டிலும் சுயராஜ்ய அரசியலில் ஊழல்கள் மலிந்து விட்டன என்ற புகார் ஏற்கெனவே அதிகமாயிருக்கிறது.

இம்மாதிரி சம்பவங்கள் அத்தகைய புகார்கள் பெருகுவதற்கு உதவி செய்யும்.

பரிபூரணமான நாணயப் பொறுப்பை இந்நாட்டின் பெரிய உத்தியோகஸ்தர்களிடம் நாம் எதிர்பார்க்கிறோம். அதற்குப் பங்கம் விளைவிப்பவர்கள் நாட்டின் சுதந்திரத்துக்கும் ஜனநாயக ஆட்சிக்கும் பெரும் துரோகம் செய்தவர்களாகிறார்கள்.

அப்படிப்பட்டவர்களின் குற்றத்தைச் சப்பைக் கட்டுக் கட்டி மழுப்பி விட்டு விடுவது சுயராஜ்யத்தின் அடிப்படைக்குப் பெருந் தீங்கு செய்வதாகும்.

ஆகையால் பல கோடி ரூபாய்க்கு அவசியமின்றி இரசாயன எரு வாங்கிய ஊழலைப் பற்றி இந்திய சர்க்கார் மேலும் சரியான விசாரணை நடத்தியே தீர வேண்டும்.

சம்பந்தப்பட்டவர்கள் அத்தனை பேருக்கும் தகுந்த தண்டனை விதிக்க வேண்டும்.

கோடிக்கணக்கில் ரூபாய் விழுங்கும் ஊழல் பூதத்தையும் அடியோடு விரட்டி அடிக்க வேண்டும்.

மழுப்ப வேண்டாம்; தட்டிக் கழிக்க வேண்டாம். அப்படிச் செய்வது விபரீதமான பலனையே தரும்.

ஜனநாயக ஆட்சி முறைக்கே பெரிய ஆபத்தை உண்டாக்கும்.

**(கல்கி, பிப்ரவரி 18, 1951)**



• நிலச்சரிவில் புதைந்த வீடுகள்...



• பாதிக்கப்பட்ட மக்கள் அகதிகளைப் போல் பள்ளியில்...

# நெருந்த பூமியில் புதைந்த கிராமம்!

**— நேரடி ரிப்போர்ட்**

முதல் நாள் மூன்று வீடுகள்; அடுத்த நாள் பதினொரு வீடுகள்; அதற்கடுத்த நாள் மறுபடியும் மூன்று! நாம் போன போது இன்னும் 40-50 வீடுகள் நிலச்சரிவில் மூழ்கும் சூழலில்... மைனாலா எல்ல நன்னி கிராமம் வரைக்கும் கூட நிலம் சரிந்து, பெரும் பாதிப்பை நிகழ்த்துமோ என்கிற பீதியுடன் மக்கள்.

மழைக் காலங்களில் உதகையில் சிறு சிறு நிலச்சரிவு கள் சகஜம்தான். மிகப் பெரும் நிலச் சரிவுகள் கூட திடீரென நிகழ்ந்து இரண்டு பஸ் - லாரிகளை விழுங்கின கதையெல்லாம் (சமீபத்தில் மரப்பாலம் நிலச்சரிவு) உண்டு.



என்றாலும் மைல் கணக்கில் பூமி பிளவு பட்டுக் கீழிறங்கி பல வீடு களையும் விழுங்கிய – இன்னும் விழுங்கக் காத்திருக்கும் 'அல்லஞ்சி' (அவலஞ்சி அல்ல!) நிலச்சரிவில் உயிர்ச்சேதம் இல்லை என்பதுதான் தெய்வாதீனம்



• தேயிலைத் தோட்டத்தின் நடுவே நிலச்சரிவு...

என்கிறார்கள் உதகை வாசிகள்.

எப்படி?

சாவகாசமாய் 13.12.98 அன்று காலைக் கடன் கழிக்க தேயிலை எஸ்டேட் தொழிலாளி ஒருவர், தேயிலை எஸ்டேட் ஓரமாய்ப் போன போது 'புஸ்'ஸென்று நாலைந்து நல்ல பாம்புகள் மூச்சு விட்ட மாதிரி ஒலி. காகிதம் கிழிபடுகிற ஓசை. காலுக்கடியில் பார்த்தால் பூமியில் லேசாய்ப் பிளவு. அதைச் சாதாரணமாய் நினைத்துக் கொண்டு போனவர் ஐந்து நிமிடம் கழித்துத் திரும்பி வரும் போது பார்த்தால் பூமிப் பிளவு அரையடி கூடுதலாகி, ஒரு பகுதி பூமியே ஒன்றரை அடிக்கு மேல் இறங்கி, பீறிட்ட நீரூற்று. விநோத சப்தங்கள். மனசுக்குள் அலறின எச்சரிக்கை ஒலியை கிராமம் முழுக்கப் பரவ விட்ட அந்த இளைஞர் பெயர் எம். புட்ராஜ். சபரி மலைக்கு மாலை போட்டிருந்த அந்த இளைஞரைத்தான் அல்லஞ்சி கிராம மக்கள் தெய்வமாகக் கும்பிட்டுக் கொண்டிருந்தனர்.

"நான் போய் முதல்ல சொன்னது சந்திர ஏட்டனிடம். அவர்தான் இதை என்னமோ ஏதோன்னு நினைச்சுட்டு எல்லநள்ளிக்குத் தகவல் கொடுத்தார். அதுக்குள்ள பூமிப் பிளவு இரண்டடி நகர்ந்து ஐந்தடி இறங்கிடுச்சு. என்ன செய்யறதுன்னு புரியாம கைக்குக் கிடைச்சதை எடுத்துட்டு நாங்க ஓடின ஓட்டம்!"

– நம்மிடம் பேசின போது கூட புட்ராஜ் கண்களில் நிறைய அச்சம். எல்லநள்ளி கிராமத்துப் பள்ளிக்கூடத்தில் அகதிகள் போல் அல்லஞ்சி கிராம மக்கள். பலர் சொந்த பந்தங்களின் வீடுகளுக்குப் போய் விட்டதாகத் தகவல். வீட்டில் எல்லாம் போட்டது போட்டபடி வந்து விட்ட வருத்தம் அனைவரிடமும்.

குன்னூர் – ஊட்டி போகிற மெயின் சாலையில் உள்ள அந்த எல்லநள்ளி ஸ்டாப்பில் இறங்கி, வலது பக்கமாய் மேல் நோக்கி ஒரு கி.மீ. நடந்தால் எதிர்ப்படுவது அல்லஞ்சி கிராமம். சுருக்கமாகச் சொல்வதானால் தொட்டபெட்டா சிகரத்திற்கு மறு பக்கம். நூறு மீட்டர் உயரப் பாறையின் மீது சுமார் 10 – 20 ஏக்கர் பரப்பளவு உள்ள மண் பகுதி. நிறைய நீர்க் கசிவு. அதன் மீது 60 – 70 வீடுகள். வழியில் ஒரு நீடில் ஃபாக்டரி. இன்னும் கூடப் புதிது புதிதாகக் கட்டப்படும் கட்டடங்கள்.

கிராமத்து வீடுகளுக்கு நேர் மேலே



இருநூறு மீட்டர் உயரத்தில் பூமி பிளவுபட்ட நிலையில், தேயிலை எஸ்டேட். பக்கத்திலேயே மண்மூடிக் கிடக்கும் முட்டைக் கோஸ் தோட்டம். பூமியின் பிளவுபட்ட பாகம் எங்கே தொடங்கி எங்கே முடிகிறது என்றே புரிபடாமல் நீளமாய் நான்கைந்து அடி அகலத்தில். (ஆழம் எவ்வளவு என்று தெரியவில்லை) உள்ளுக்குள் சலசலக்கும் நீர் ஊற்று. நாம் நின்று கொண்டிருக்கிற பகுதி கீழிறங்குமா, எதிர்ப்பகுதி சரியுமா? என்று எதையும் ஊகம் செய்ய முடியாத அச்ச நிலை.

"நிலம் பிளவுபட்ட அன்னைக்கு விட்டுட்டுப் போன பொருளை எடுத்துட்டு வந்திடலாம்ன்னு போனேன். போகும் போது கண் முன்னாடியே மண் சரிஞ்சு என் வீடு முழுகுது! அப்படியே திரும்பி ஓடி வந்துட்டேன். கொஞ்சம் முந்திப் போய் என் வீட்டுக்கு உள்ளே போன பின் மண் சரிஞ்சிருந்தால் நான் உயிரோடு சமாதிதான்!"

– அழ மாட்டாத குறையாகச் சொல்லும் ராமகிருஷ்ணன் என்னும் இளைஞர். அவர் மாதிரியே நிறையப் பேர் வருவதும் கவலையுடன் பார்ப்பதும், திரும்பிப் போவதுமாய். பூட்டப்பட்ட சில வீடுகளில் சுற்றி வரும் நாய்கள் மட்டும், பரிதாபமாய்!

நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர் சோணை இரண்டு நாட்களாக நேரில் வந்து பார்த்து, புவியியல் துறை நிபுணர்களின் ஆலோசனையின் பேரில் அல்லஞ்சி பகுதி எந்த நேரமும் முழுக்க நிலச்சரிவால் மூடப்படலாம் என்பதனால் – அங்கு யாரும் போகக் கூடாது என்று தடை விதித்துள்ளாராம். பாதிக்கப்பட்டவர்களுக்குப் பாதுகாப்பான இடத்தில் இடம் தேர்வு செய்து தலா மூன்று சென்ட் நிலம் ஒதுக்கித் தர இருப்பதாக கலெக்டர் வட்டாரத் தகவல்கள். பள்ளிக்கூடத்தில் தங்க வைக்கப்பட்டிருப்பவர்களுக்குத் தேவையான உணவு வசதிகள் ஏற்பாடு செய்து தர வட்டார அதிகாரிகளுக்கு அவர் உத்தரவு பிறப்பித்திருந்தாலும் ஊர்க்காரர்களே அவர்களுக்கு நிறைய உதவி புரிந்து வருவதாக முகாம்வாசிகளின் பேச்சு. அதற்கெனவே உள்ளூர் கிராமத் தலைவர் மூர்த்தியின் தலைமையில் பதினொரு பேர் கொண்ட குழு.

"எங்களுக்குன்னு ஊர்க் கமிட்டி இருக்கு. நிதி இருக்கு. இந்த மாதிரி சமயங்கள்ல நாங்களே எல்லாம் பார்த்துக்கறோம். பஞ்சாயத்துல கொடுத்த 5000 ரூபாயை பாதிக்கப்பட்டவர்களுக்கே பகிர்ந்து கொடுத்துட்டோம். அரசு கொறடா முபாரக் ஒரு மூட்டை அரிசி கொடுத்தார். ஊர்க்காரர்களும் நிறைய கொடுக்கறாங்க. கலெக்டர் ஆளுக்கு மூன்று சென்ட் நிலம் கொடுக்கிறதா சொல்லியிருக்கார். இந்தப் பகுதியில் முட்டைக்கோஸ், காய்கறி விவசாய பாதிப்பு மட்டும் ஒரு லட்சம் ரூபா இருக்கும். டீ மட்டும் மூன்று ஏக்கர் பாதிப்பு. இந்தப் பகுதியில இது மாதிரி நிலச்சரிவை வாழ்நாள்ல நாங்க பார்த்ததேயில்லை...!"

நிலச்சரிவு, இன்னும் எப்போது எப்படி ஏற்படும் என்றே விவரிக்க முடியாத அச்சம் சுற்றுப்புறவாசிகளிடம். பத்து ஏக்கர் நிலப் பரப்பில் வெடிப்பு, சில வீடுகள் மண்ணுக்குள் போயிருந்தன என்றாலும் இந்த வெடிப்பு பத்து கிலோ மீட்டர் தூரம் பரவியுள்ளதாகவும், ஏறத்தாழ பல மைல் தூர கிராமங்கள் காணாமல் போகும் என்றும் மக்களிடம் பீதி!

இதுபற்றின விவரத்திற்காக இந்தப் பூமி வெடிப்பை ஆய்வு செய்த புவியியல் நிபுணர் ஒருவரை அணுகினோம்.

"எங்கள் ஆய்வுப்படி முந்நூறு மீட்டர் தூரம் மட்டுமே பூமி வெடிப்பு உள்ளது. வெயில் அடித்து மண் இறுகும் போது – மழை அடிக்கும் பொழுது எப்படியானாலும் இன்னும் சரிவு ஏற்படவே வாய்ப்புகள் அதிகம். அதனால் அது மக்கள் குடியிருக்க லாயக்கற்ற பகுதியாக அறிவிக்கப்பட்டுள்ளது. கிராமம் இருக்கும் பாறைகளுக்கு மேல் 2 – 3 மீட்டர் கனமுள்ள களிமண் பகுதி முப்பது அல்லது முப்பத்தைந்து டிகிரி கோணத்தில் சரிவாயிருந்ததால்தான் இப்போது இந்த மண் சரிவு நிகழ்ந்திருக்கிறது. ஆனாலும் பத்து கி.மீ. தூரத்துக்கு இது பரவியுள்ளதாகச் சொல்லப்படுவதெல்லாம் வீண் வதந்தி!" என்றார் அவர்.

*உதகையிலிருந்து:*

**கா. சு. வேலாயுதன்**

ரிஷபன்

# நிலா

கார் அவனை ஒட்டி நின்றது. திரும்பினால் காருக்குள் பாலகிருஷ்ணன் சிரித்தார்.

"அவசரமா?"

சிவராம் சல்யூட் செய்தான்.

"அப்படி ஒன்றும் இல்லை."

"என்னோடு வாயேன். என் கையால் ஒரு கப் டீ தயாரித்துத் தருகிறேன்."

ஒரு வினாடி தயங்கி பிறகு ஏறிக் கொண்டான்.

"கார் நம்பர் கூட நியூமராலஜிப்படி தானா?"

புரபசர் திரும்பி அவனைப் பார்த்தார். வலது கை சாமர்த்தியமாய் ஸ்டியரிங்கை வளைத்துக் கொண்டிருந்தது.

"நீ இங்கேயே தங்கி விடப் போகிறாய் இல்லையா?"

புரிந்தது. 'நான் சொன்னபடிதானே நடந்தது' என்று வருகிறார்.

சிவராம் விவாதிக்க விரும்பவில்லை.

"நியூமராலஜியும் ஒரு சைன்ஸ். உனக்கு நம்பிக்கை இல்லையென்றால் விட்டுவிடு."

கார் குமரன் நகரில் நுழைந்து பெரிய பங்களா வாசலில் நின்றது.

சிவராம் இறங்கி சுற்று முற்றும் பார்த்தான்.

குரோட்டன்ஸ் செடிகளின் அரவணைப்பில் பசுமைச் சூழல்.

"உள்ளே வா...."

ஏதோ உறுத்தியது. இத்தனை பெரிய வீட்டில் வேறு நடமாட்டமே தெரியவில்லையே.

"நான் மட்டும்தான்" என்றார் அவன் மன ஓட்டம் புரிந்த மாதிரி.

"வேலைக்கு ஆள் வைத்திருக்கிறேன். சமைத்து வைத்து விட்டுப் போய்விடுவான். இரவில் பழம்... பால்தான் எனக்கு..."

"உணவுக் கட்டுப்பாடா?"

"மனசுக் கட்டுப்பாடும்."

ஹாலில் அமரச் சொன்னார். விலகி அறைக்குள் போனார்.

பத்து நிமிடங்களுக்கு மேலிருக்கும்.

சிவராமுக்கு அலுத்தது. எழுந்து ஹாலைச் சுற்றி வந்தான். வேறொரு அறைக் கதவை லேசாய்த் திறந்து பார்த்தான். கட்டில் தெரிந்தது. கதவுடன் மர பீரோ. நிறைய புத்தகங்கள்.

பின்னால் மூச்சு உரசியது.

"என்ன பார்க்கிறாய்?"

புரபசர்தான்.

"போரடித்தது. சும்மா சுற்றி வந்தேன்... நிறைய புக்ஸ் இருக்கிறதே. அவ்வளவும் உங்களதா."

"ஆமாம்." பெருமையாய்த் தலையசைத்தார்.

"உங்களுக்கு வேண்டாம் என்று... எதுவும்."

"இவை உனக்குப் பிடிக்காத சப்ஜெக்ட்."

"அப்படி எதுவும்" இடை மறித்தான்.

"ஸாரி. கொடுப்பதற்கில்லை. வா... டீ சாப்பிடலாம். உனக்கும் நேரமாகிறது."

மறைமுகமாய் இளம்பச் சொல்வது புரிய சிவராம் அவரைப் பின் தொடர்ந்தான்.

டீயின் கசப்பு தூக்கலாய்த் தெரிந்தது.

"சர்க்கரை வேண்டுமா?"

"கொஞ்சம் 'திக்'காகத்தான் இருக்கிறது" என்று ஒப்புக் கொண்டான்.

"டீயின் சுவை அப்போதுதான் தெரியும். எனக்கு இப்படி இருப்பதுதான் பிடிக்கும்."

சிவராமுக்கு ஒன்று புரிந்தது. மனிதர் மிக மிக அழுத்தமானவர். எளிதில் விட்டுக் கொடுப்பதில்லை. எதிலும் தீர்மானமான முடிவு.

கப்பை கீழே வைத்தான். எழுந்தான்.

"வரட்டுமா."

வாசல் வரை வந்து அவன் வெளியேறியதும் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டார்.

'சி' பிளாக்கிற்கு என்ன காரணத்தைச் சொல்லிக் கொண்டு போவது என்ற தயக்கம் இல்லை இப்போது சிவராமிடம்.

செகரட்டரி என்ற முறையில் சர்வ சகஜமாய் படியேறினான். ராஜப்பா வீட்டுக் கதவு மூடியிருந்தது. மனிதர் எங்கே போனாரோ. அதுவும் நல்லதுதான்.

33-ம் எண் அறைக் கதவும் மூடப்பட்டிருந்தது.

மனசு படபடக்க ஆரம்பித்தது. இதோ... இதற்குள்தான்... ஸ்...வே...தா...

எதிர் ஃப்ளாட் கதவு படீரெனத் திறந்தது. ஒருவர் வெளிப்பட்டார். மூர்த்தி என்று பெயர்.

"ஹலோ... வாங்க."

சிவராம் திடுக்கிட்டு விழித்தான்.

மொத்த ஃப்ளாட்களில் இந்த ஒரே ஒரு மனிதரைக் கண்டுதான் அஞ்சினான்.

மாட்டினால் போதும். தான் சொல்கிற விஷயங்கள் எல்லாம் 'படு சீரியஸ்' என்கிற தோரணையிலேயே பேச்சிருக்கும். துளி இடைவெளி தராமல் பேசிக் கொண்டே இருப்பார்.

"ஹலோ..." என்றான் வேறு வழியின்றி.

"உள்ளே வாங்க."

கையைப் பிடித்து இழுத்தார். உள்ளே போனான். கதவு திறந்திருந்ததால் எதிர் அறைக் கதவு புலனானது. இதுவும் வசதி தான்.

முதன் முறையாய் அவர் அறுவையை அரை மணி நேரம் கேட்டுக் கொண்டிருந்தான்.

இனியும் பொறுக்க

# வட்டம் 3



இயலாது என்ற நிலை வந்தபோது எழுந்தே விட்டான்.

"என்ன, கிளம்பிட்டீங்களா? நான் சொன்னதை மறக்க வேண்டாம். அப்புறம் ஒரு முக்கியமான விஷயம். (குரலைக் குறைத்து) இதை வேற யார்கிட்டேயும் நான் சொன்னேன்னு சொல்ல வேண்டாம். நீங்களா ஏற்பாடு செஞ்ச மாதிரி.. என்ன.. நான் சொல்றது. நமக்குக் காரியம் நடந்தால் போதும். பேர் எதுக்கு.... சரிதானே..."

சிவராம் வெளியே வர எதிர்க் கதவு திறந்து ஒரு வாண்டு ஓடி வந்தான்.

"ப்ளீஸ். வேணாம். திருப்பிக் கொடு."

பின்னாலேயே வீணை மீட்டல் கேட்டது. சுரிதாரில் ஓடி வந்தாள் ஸ்வேதா. இவனைப் பார்த்த மாதிரியே காட்டிக் கொள்ளவில்லை.

பொடியன் மூர்த்தியையும் சிவராமையும் சுற்றி ஓடினான். டக்கென்று சிவராம் அவனைப் பிடித்து ஸ்வேதாவிடம் ஒப்படைக்க முயற்சித்தான்.

ஜிலுங்கென்று ஒரு சத்தம் கேட்டது.

"என்னது..."

கைப்பிடிக்குள் இருந்த சிறுவனைத் திகைப்புடன் பார்த்தான்.

தெர்மாமீட்டர் நாலாய் உடைந்திருந்தது. உருண்ட பாதரசத்துளி.

"போச்சு."

ஸ்வேதா முகம் இறுகினாள்.

"ஸாரி. நான் ஏதோ..."

சிவராம் பேச முற்பட்டான்.

"வாடா உள்ளே."

சிறுவனைக் கையைப் பிடித்து உள்ளே இழுத்துப் போனாள். கதவு வேகமாய் மூடிக் கொண்டது.

சிவராம் கையைப் பிசைந்தான். மூர்த்தியாவது ஏதாவது சொல்லக் கூடும் என்று திரும்பினால் 'அறுவை மன்னன்' எப்போதோ உள்ளே போய் விட்டிருந்தார்.

ம்ஹூம். நானொன்று நினைக்க...

சிவராம் பெருமூச்செறிந்தான். கீழே கிடந்த கண்ணாடித் துண்டுகளை ஒரு காகிதத்தில் திரட்டிக் கொண்டான். குனிந்த தலையுடன் கீழிறங்கிப் போனான்.

**வே**லு இரவு பத்து மணிக்குத்தான் வந்தான். நெடி எதுவும் தெரியவில்லை.

சிவராம் எழுந்து வந்து கதவைத் திறந்தான். வழக்கத்திற்கு மாறாக இன்று ஒன்பதரை மணிக்கே படுத்துக் கொண்டு விட்டான்.

"கதவைப் பூட்டிரு."

ஹாலில் பாய், தலையணை. வேலுவுக்காக வைக்கப்படிருந்தது.

மீண்டும் கட்டிலில் போய் விழுந்தவன் திடுக்கிட்டு விழித்தபோது மணி பன்னிரெண்டு.

"வேலு..."

யாரோ நடமாடும் சத்தம். எழுந்து வந்து விளக்கைப் போட்டால் வேலுதான்.

"என்ன?"

வேலுவிடம் அசட்டுச் சிரிப்பு.

"குடிக்க.... தண்ணி..."

ஜக் காலியாக இருந்தது. பிடிக்கவில்லை. ஏதோ நெருட வேலுவைப் பார்த்தான்.

"சாப்பிட்டாயா?"

'இல்லை'யென்று தலையசைத்தவனைப் பார்க்க பரிதாபம் வந்தது.

"ஏன்?"

சட்டைப் பையை வெளியே துருத்திக் காட்டினான்.

"என்னிடம் கேட்க வேண்டியதுதானே..."

இரைச்சலிட்டபோது உள்ளூர அவமானமாக இருந்தது. வேலையற்றவன். ஏது பணத்திற்கு வழி?

"வா... கிளம்பு என்னோடு."

"இப்ப எதுக்கு."

மறுத்த வேலுவை அலட்சியம் செய்து கதவைப் பூட்டிக் கொண்டான். ஸ்கூட்டரில் பின்னால் அமர்த்திக் கொண்டு கிளம்பினான்.

தெருவோரக் கடைகள் இயங்கிக் கொண்டிருந்தன. பெரிய தோசைக் கல்லில் ஊறிக் கொண்டிருந்த புரோட்டாக்கள். டங்டங்கென்ற சப்த ஜாலங்கள்.

"உட்கார். என்ன வேண்டுமோ... சாப்பிடு..."

வேலு நிச்சயமாய் இந்த அளவு உபசரிப்பை எதிர்பார்த்திருக்கவில்லை.

"நான் என்ன சொல்றேன்னா..."

"பேசாதே. சாப்பிடு."

கை கழுவி விட்டு வந்தபோது, வேலுவின் கண்கள் பனித்திருந்தன. தெருவென்றும் பார்க்காமல் சிவராமின் காலில் விழப் போனான்.

"ச்ச்" பதறிப் போய் தூக்கி விட்டான்.

"என்ன இது, முட்டாள்தனம்."

"ரெண்டு நாளாச்சு. பசியே தெரியாது வழக்கமா... 'அது' வேற இல்லியா. குடலை என்னவோ செஞ்சிருச்சு."

"இந்தா..."

சில ரூபாய் நோட்டுகளை நீட்டினான்.

''வைத்துக் கொள். இனி பட்டினி கிடக்காதே.''

ஸ்கூட்டர் மறுபடி புறப்பட்டது. கத வைப் பூட்டிக் கொண்டு அறைக்குள் நுழையப் போனான்.

"தம்பி..." வேலுதான் அழைத்தான்.

''என் தம்பி வயசுதான் உங்களுக்கு. சின்ன வயசுல போயிட்டான். என் கதையை ஒரு நாள் உங்களுக்குச் சொல்லணும். நீங்க நல்லா இருப்பீங்க.''

இத்தனை நள்ளிரவில் கதை கேட்க பொறுமை இல்லை சிவராமுக்கு. போதும். கண்கள் பாதித் தூக்கத்தில் எழுந்ததில் எரிந் தன.

"படுத்துக்க வேலு."

அடித்துப் போட்ட மாதிரி மீண்டும் உறக் கம் அவனைத் தழுவிக் கொண்டது.

ராஜப்பா வேறு பக்கம் பார்த்து அமர்ந்தார்.

"என்ன ஸார் கோபம்?"

சிவராமின் குரலில் சிண்டல் தெரிந்தது.

"பேசாதே. நானும் பேச மாட்டேன்."

"சரி. பேச வேண்டாம்."

பட்டென்று திரும்பினார்.

"நேற்று நீ என்னோட பிளாக்கில் ஒரு மணி நேரமாய் இருந்திருக்கிறாய். ஆனால் என்னை மட்டும் பார்க்கவில்லை."

சிவராம் சமாதானம் சொல்ல முயன் றான்.

"இல்லை. நான் வந்தபோது உங்கள் வீட்டுக் கதவு மூடி...."

"காலிங் பெல் என்று ஒன்று இருக்கிறது" என்றார் இன்னும் தணியாமல்.

''தப்புத்தான்.'' சிவராம் கன்னத்தில் போட்டுக் கொண்டான்.

"என்ன தண்டனை? சொல்லுங்கள்...."

ராஜப்பா முகம் இளகி விட்டது.

"சேச்சே... என்னப்பா இது."

அருகில் நெருங்கி அமர்ந்தார்.

"என் வருத்தம் எல்லாம்..."

சிவராமின் பார்வையில் ஓடி வந்த சிறுவன் தென்பட்டான்.

"ஏய். இங்கே வா."

தயங்கி நின்றான். வரலாமா, வேண்டாமா என்று யோசிப்பது புரிந்தது.

"இங்கே வாயேன்'' என்றான் குரலில் கனிவைக் குழைத்து.

அருகில் வந்த சிறுவனிடம் ஷர்ட் பையில் இருந்த அட்டைப் பெட்டியை நீட்டினான்.




"இந்தா... வீட்டில் கொண்டு போய்க் கொடு..."

"என்ன இது?"

ஒரே நேரத்தில் ராஜப்பாவும் சிறுவனும் கேட்டார்கள்.

''நேற்று தவறுதலாய் ஒரு தெர்மா மீட்டரை உடைக்கக் காரணமாகி விட்டேன். பிராயச்சித்தம்'' என்றான் சிவராம் குரலில் தடுமாற்றத்துடன்.

உண்மை அதுவல்ல என்று அவன் மன சாட்சியே உறுத்தியது. ஸ்வேதாவை எப்படி யாவது கவர நினைக்கிறாய்.

"போ... உன் அக்காவிடம் கொடு."

சிறுவன் அரை மனதாய் வாங்கிக் கொண்டு ஓடினான். சிவராம் திரும்பிய போது, ராஜப்பா வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன ஸார்... மேலே பார்க்கறீங்க."

"ம்ஹூம். காணோமே" என்றார் தீவிர மாய்.

"என்ன.... காணோம்" என்றான் புரி யாமல்.

"பட்சி சாஸ்திரம் என்ற ஒன்றைப் பற்றி நீ கேள்விப்பட்டு இருக்கிறாயா?"

"இல்லை." தலையசைத்தான்.

"கருடன் வலமாய்ப் பறந்தால் இன்ன பலன். காக்கை கத்தினால் இன்ன பலன் என்று சொல்லுவார்கள்... ஆனால் இப்படி ஒரு பட்சி இருக்கிறதா என்று தெரிய வில்லை."



**39-ம் பக்க விடை :**

**மோனிகா லெவன்ஸ்கிதான் அந்தக் குழந்தை!**

"என்ன பட்சி..."

"காதல் பட்சிதான்."

ராஜப்பாவின் சீண்டல் புரிய சிவராம் வெட்கப்பட்டான்.

"நீங்க வேற ஸார். சத்தியமாய் அந்த மாதிரி நினைப்பெல்லாம் எனக்குக் கிடையாது."

"நம்புகிறேன்" என்றவரின் குரலில் துளி கூட நம்பிக்கை இல்லை.

சிறுவன் மறுபடி திரும்பி வந்தான்.

"அக்கா உங்ககிட்டேயே திருப்பித்தரச் சொல்லிட்டாங்க. யாராச்சும் இனாமாக் கொடுத்தா... வாங்கக் கூடாதாம்."

மடியில் தூக்கிப் போட்டுவிட்டு ஓடினான்.

சிவராமின் முகம் சூம்பிப் போனது. ராஜப்பா பக்கம் திரும்பக் கூச்சப்பட்டான்.

"கவலைப்படாதே... ந நாரீ ஹ்ருதயஸ் யன்னு ஒரு வசனம் இருக்கு. பெண்ணோட மனசைப் புரிஞ்சுக்கிறது அத்தனை சுலபம் இல்லே."

சிவராமுக்கு நம்பிக்கை இற்றுப் போகிற மாதிரி இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது.

இரவு வீடு திரும்ப பத்தரை மணி ஆகிவிட்டது. ஸ்கூட்டரை ஷெட்டில் விட்டு விட்டு வந்தவன் பளீரென எரிந்த எல்லா ப்ளாட் விளக்குகளையும் ஆச்சர்யமாய்ப் பார்த்தான்.

ஏன் இன்னும் ஒருவரும் தூங்கவில்லை?

ஏ பிளாக் வாசலில் ஒரு கூட்டம் காத்திருந்தது. கூடவே தொங்கிய முகத்துடன் ராஜப்பாவும்.

"என்ன ஸார். என்ன நடந்தது?"

கவலையுடன் கேட்டான்.

"இன்னும் என்ன நடக்கணும்."

"ச்சே... ஸேஃப்டியே இல்லே."

"வாட்ச்மேன் இருந்தே... கண்ட்ரோல் பண்ண முடியலே."

"லேடீஸுக்கு என்ன ஸார் பாதுகாப்பு?"

"இது என்ன டீசன்ட்டான மனுஷாளுக்கா... இல்லே.. ரோக்ஸுக்கா."

"ஸார்... வேற யாராச்சும் தப்புப் பண்ணா செகரட்டரி கிட்டே சொல்லலாம். செகரட்டரியே தப்புப் பண்ணா."

தலைக்குத் தலை பேசினார்கள்.

சிவராமிற்கு ஒரே குழப்பம். என்ன சொல்கிறார்கள்.

"ஸார். எனக்குக் கொஞ்சங்கூட புரியலே. தெளிவாச் சொல்லுங்க. என்ன பிரச்னை இங்கே..."

"பிரச்னையே நீங்கதான்."

துணிச்சலாய் ஒருவர் முன்னேறி வந்து அவன் மீது கையைக் காட்டினார்.

"என்ன?"

"நீங்க உங்க ப்ளாட்ல கொண்டு வந்து குடிப்பாட்டி வச்சிருக்கீங்களே... அவன் இன்னைக்கு என்ன செஞ்சான் தெரியுமா?"

வேலு. சிவராமிற்கு உடல் தீப்பற்றிய பிரமை.

"இதோ, பாவம்... இவள் வந்துக் கிட்டிருக்கா. கிட்ட வந்து கையைப் பிடிச்சு.. குடிபோதை வேற... ராஸ்கல்... இவ மிரண்டு போய் அலறி..."

ஸ்வேதா ஆவேசமாய் நின்றிருந்தாள்.

"நான் என்ன செஞ்சும் கண்ட்ரோலே பண்ண முடியலே.... ஸார்... குடிச்சிருக்கான். அடிக்கப் போய்... ஏதாவது ஆச்சுன்னா..."

வாட்ச்மேன் தன் பங்கிற்குக் கூறினான்.

"எல்லாரும் ஓடி வரவும் விட்டுட்டான்... நல்ல வேளையா.. இப்ப எங்களுக்கு ஒண்ணு தெரிஞ்சாகணும். இங்கே யாரு குடியிருக்கப் போறாங்க. அவனா... நாங்களா..."

சிவராம் கூனிக்குறுகிப் போனான் அந்த நிமிடம்.

(தொடரும்)

# கற்பனையில் மூழ்காத யதார்த்தம்!




✉ சினிமாத்தனம் இல்லாத சினிமாக்காரரின் பேட்டியாக அமைந்து விட்டது, நடிகை ஷாலினியின் பேட்டி. கற்பனையில் மூழ்காமல், யதார்த்தத்தை நன்கு உணர்ந்து பேசுகிறார்.
திருச்சி – 21, கிஷோர்.

✉ இன்றைய சினிமா நடிகைகள், புகழ் உச்சிக்குச் சென்று தடுமாறி, மார்க்கெட் இழந்து நிற்கும் நிலையில், 'புகழ் போதை தேவையில்லை' எனக் கூறும் 'ஷாலினி' கொஞ்சம் வித்தியாசமானவர்தான்!
மயிலாடுதுறை,
ஜெ. முத்துக்குமரன்.

✉ 'பூ வேலி' விமர்சனம் கன கச்சிதம். அதிலும் வைரமுத்துவின் தவறைச் சுட்டிக் காட்டியது அவசியமான ஒன்று.
மதுரை, வி. பி. மகராசி.

✉ அர்த்தம் புரியாமல் இதுவரை பாடி வந்த கராங்கனி பாட்டுக்கு 'திரை கடலோடி'(!) அர்த்தம் அறிந்து வந்த சந்திரமௌலிக்கும், வாசகர் தேவையே தன் சேவை எனத் தொண்டாற்றி வரும் எங்கள் 'தலைவி சுமி'க்கும் தேங்க்ஸோ தேங்க்ஸ்!
பொன்மலை,
ஆர். பிரகாஷ்.

✉ தாஜ்மஹாலைப் பற்றிய ராம் ஜெத்மலானியின் கருத்துக்கு வேதா நிலையத்தைக் குறிப்பிட்டு தராசு அளித்த பதில் குபீர் சிரிப்பை வரவழைத்தது.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ தலையங்கம் கண்டேன். எதிர்காலத் தமிழகம் மட்டுமல்ல; எதிர்கால இந்தியாவும் தலை நிமிர்ந்து நிற்க வேண்டுமானால் அ.தி.மு.க. போன்ற ஜனநாயகத்துக்கு ஊறு தேடும் கட்சிகள் அரசியலிலிருந்து ஒதுக்கப்பட்டே ஆக வேண்டும்.
குடந்தை,
சு. தியாகராசன்.

✉ தாயின் நினைவாக தினமும் ஒரு சவாரி இலவசமாக ஓட்டும் செல்வராஜின் நல்ல மனசு பாராட்டுக்குரியது.
திருச்சி – 14, ராஜிராதா.

✉ 'வாவ்! நோ தாஜ்மெஹல் டூ!' கட்டுரை பிரமாதம்! அவ்வளவு பெரிய ஜாகிர் உசைன் வண்ணப் படத்தைப் பக்கம் பூரா போட்டீங்களே, தம் மாத்தூண்டாவது 'விக்கு'வின் புகைப்படத்தையும் போட்டிருக்கலாமே! மனசு ரொம்ப சங்கடப்பட்டது!
சென்னை – 33,
டி. சௌந்தரராஜன்.

✉ இவ்வாரம் பிரசுரமான மூன்று கார்ட்டூன்களும் முத்தானவை. மூன்றும் மேலெழுந்தவாரியாகச் சிரிப்பை வரவழைத்தாலும் ஆழ்ந்து சிந்தித்தால், 'ஐயோ அரசியலே!' என அங்கலாய்க்க வைக்கும்.
திருவரங்கம், அ. சம்பத்.

✉ "நாடகங்களும், நடிப்பவர்களும்" நல்ல கதை. எல்லோர் வீட்டிலும் நடக்கக்கூடிய ஒரு விஷயத்தை யதார்த்தமாகச் சித்திரித்துள்ளார் யோகி.
காரைக்குடி, பாலு.

✉ தும்புருவின் சங்கீத விமர்சனம் பிரமாதமாக இருக்கிறது. எல்லோரையும் புகழ்ந்து வானளவிற்குத் தூக்கி விடும் மற்ற பத்திரிகை விமர்சனங்களின் நடுவே துணிச்சலாக, உண்மையை எழுதுவது ஆறுதலளிக்கிறது.
சென்னை, டி. சந்தானம்.

● கே. எம். சுப்ரமணியன், பூனாம்பாளையம் (தெற்கு).

*? வீரப்பனைப் பிடித்தே தீருவோம் என்று கூறிய அதிரடிப்படையின் சப்தத்தைக் காணோமே...?*

! போலீஸ் நிலையத்துக்குள் புகுந்து வீரப்பன் கோஷ்டி துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் கொள்ளையடித்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் அவர்கள் மீளவில்லை, அதான்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? இந்தியாவுக்குக் கிடைத்த முதல் தங்கம்?*

! மேலும் பல வெற்றிகளுக்கு அது பிள்ளையார் சுழியாக இருந்திருக்கிறது என்பதில் மகிழ்ச்சி. இதற்கு முந்தைய ஆசிய விளையாட்டுப் போட்டியில் பெற்ற மெடல்களை விட இந்தத் தடவை அறுவடை அதிகம். நமது விளையாட்டுத் துறையில் அரசியல் புகாமல், மெய்யான திறமைகள் ஊக்குவிக்கப்படுமானால், இதைவிடவும் உயர்வான இடத்தை அடுத்த முறை நிச்சயம் அடையலாம்.

● வி. பி. மகராசி, மதுரை – 16.

*? பார்லிமெண்ட், சட்டசபை பொறுப்புகளை ஏற்கும் அளவுக்கு இன்னும் பெண்களிடம் பக்குவம் வரவில்லை என்கிறாரே முஸ்லிம் லீக் தலைவர் அப்துல் லத்தீஃப்?*

! ஆண்களுக்கு அந்தப் பக்குவம் வந்து விட்டதாக அப்துல் லத்தீஃப் சத்தியம் பண்ணுவாரா...?

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

*? இப்போதுள்ள அரசியல் கட்சிகளில் கட்டுக்கோப்பான கட்சி என்று எந்தக் கட்சியைச் சொல்லலாம்?*

! கம்யூனிஸ்டுகளைத்தான் ஓரளவுக்காவது சொல்லலாம்.

● சுமாலி, மேலப்பாளையூர்.

*? எட்டு வயதுப் பையனுக்கும் பதினெட்டு வயதுப் பெண்ணுக்கும் பீஹாரில் திருமணம் நடந்துள்ளதாமே?*

! இளம் விதவை என்பதற்காக அரசு நஷ்டஈடு தரப் போக, அந்தப் பணத்துக்கு ஆசைப்பட்டு மாமனார் மாமியார் இழைத்த கொடுமை. குழந்தை முகத்துடன் அந்தச் சிறுவன் அப்பெண்ணுடன் நிற்கிற புகைப்படத்தைப் பார்த்த போது தாங்க முடியாத சோகம் ஏற்பட்டது. பீஹாரில் இதுபோன்ற கொடூரங்கள் ஏராளம்.

● கே. ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

*? இந்தியா முழுவதும் லாட்டரிகளுக்குத் தடைவிதிக்க சட்டம் கொண்டு வரப் போவது உறுதி என மத்திய மந்திரி குரானா அறிவித்திருக்கிறாரே...?*

! நல்ல விஷயம். ஆனால் எந்த அரசும் நல்ல விஷயங்களைச் சொல்லுமே தவிர, செய்யாது.

● எஸ். ரவி வைத்யா, மதுரை – 14.

*? மிகவும் நுணுக்கமாக இசை விமர்சனம் செய்து வந்த கல்கி, முறைப்படி சங்கீதம் கற்றுக் கொண்டாரா...? நன்கு பாடுவாரா...?*

! சரித்திரப் பேராசிரியர்களே வியக்கும்படி சரித்திர நாவல்கள் எழுதியவர் முறையாக சரித்திரம் படித்துப் பட்டம் பெற்றாரா என்று கேட்பீர்கள் போலிருக்கிறதே! ஞானம் பெற வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டால் அதைப் பெற எத்தனையோ வழிகள் உள்ளன. மன உறுதிதான் முக்கியம்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? ஜனநாயகத்தில் நாச வேலைகளுக்கு இடமில்லை என்கிறாரே அத்வானி...?*

! கரெக்ட்! சிறப்பு நீதிமன்றத்துக்குப் போடப்பட்டுள்ள கேள்விக்குறியைப் பார்த்த பிறகு நாச வேலைகளுக்கு இடமில்லை; சர்வநாச வேலைகளுக்குத்தான் இடமுண்டு என்று தோன்றுகிறது.

● ஏ. முத்துலட்சுமி, மதுரை – 16.

*? பொருளாதாரப் பிடிகளிலிருந்து நாட்டை*



• தேடித் தெளிந்து...



• ...செய்யவில்லை!



• நாச வேலை...



• பக்குவம் பற்றி...



• பிள்ளையார் சுழி



• சாமர்த்திய ஹுசேன்!

## நீங்கள் கேட்டவை — தராசு

# இந்தியாவுக்குக் கிடைத்த முதல் தங்கம்...?

விடுவிக்க பிரதமர் துணிச்சலான கொள்கை முடிவுகளை எடுக்க வேண்டும் என்று ஜெயலலிதா கூறியிருக்கிறாரே...?

! 'நாட்டை விடுவிக்க' என்று ஜெ சொன்னதை 'என்னை விடுவிக்க' என்று சொன்னதாகப் பிரதமர் சரியானபடி அர்த்தம் செய்து கொண்டு என் என்பதற்குள் எண்ணெய்யாகச் செயல்பட்டிருக்கிறார் பாருங்கள்!

● எம். எம். ஆனந்தன், வந்தவாசி.

? படையப்பா படத்தின் முன் வசூல் இருபத்திரண்டு கோடியாமே?...

! அடேயப்பா!

● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

? 1998 இன் சாமர்த்தியமான மனிதர் என்று யாரைக் கூறுவீர்கள்?

! சதாம் ஹுசைன். அமெரிக்கா தாக்குதலை நிறுத்தியதும் அதையே தமது வெற்றியாக அறிவித்து விட்டாரே! – இந்த சாமர்த்தியம் வேறு யாருக்கு வரும்!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? இந்து மதத்தைச் சேர்ந்த சங்கராச்சாரிய சுவாமிகளிடம் மூப்பனார் ஆசி பெற்றது சரியா...? மதச்சார்பின்மை அரசுக்கு மட்டுமின்றி கட்சிகளுக்கும் கட்சித் தலைவர்களுக்கும் இருக்க வேண்டும் அல்லவா?

! மதச்சார்பின்மை என்பது மதங்களையும் இறையுணர்வையும் புறக்கணிப்பது அல்ல. தனிப்பட்ட மத நம்பிக்கைகள் அந்தந்தத் தலைவர்களுக்கு இருக்கலாம். அவை கொள்கைகளையும் செயல்பாடுகளையும் பாதிக்க விடக் கூடாது; அவ்வளவுதான்! மூப்பனார், ரம்ஜான் விருந்திலும் பங்கேற்றதுண்டு என்று நினைவூட்டுகிறேன்.

● தி. மகாராசன், கடமலைக்குண்டு.

? 'நடிகை மீனாவுக்கு மகனாக நடிக்க ஆசைப்படுகிறேன்' என்கிறாரே ரஜினிகாந்த்?

! பாவம் மீனா... சூப்பர் ஸ்டாருக்குக் கொள்ளுப் பாட்டியாக வேண்டுமானாலும் நடிக்கத் தயார் என்பது தவிர வேறு என்ன அவர் சொல்ல முடியும்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? தமிழ் இலக்கியங்களை இந்தியில் மொழி பெயர்ப்பதாகக் கூறி பீஹார் கல்வித் துறையில் 36 லட்சம் ரூபாய் மோசடி நடந்துள்ளதாமே...?

! மாட்டுத் தீவன ஊழலிலேயே கோடிக்கணக்கில் சுருட்டியவர்கள் தமிழ் – இந்தி மொழி பெயர்ப்பில் சில லட்சங்கள் கபளீகரம் பண்ணுவதில் என்ன அதிசயம்!

● ஆர். லட்சுமி, மதுரை – 16.



• அடேயப்பா!



• ஐயோ பாவம்!

? ஈராக் மீது அமெரிக்கா போர் தொடுத்திருப்பது சம்பந்தமாக 'கிளின்டனை நீங்கள் தான் சமாதானப்படுத்த வேண்டும்' என்று மோனிகா லூவின்ஸ்கிக்கு ரஷ்யா கோரிக்கை விடுத்துள்ளது பற்றி...?

! உலகில் வேறு யாருமே கிளின்டனை இதை விடச் சிறந்த முறையில் கிண்டலடித்திருக்க முடியாது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? 'இந்து சமயம் இந்நாட்டுச் சமயமே அல்ல; மத்திய ஆசியாவிலிருந்து இங்கே வந்தேறிய சமயம்' என்று பேராயர் எஸ்றா சற்குணம் கூறியிருப்பது பற்றி...?

? 1998-ஆம் ஆண்டின் மிகப் பெரிய ஜோக் எது...?

! உங்கள் முந்தைய கேள்வியே இரண்டாவது கேள்விக்கு பதில்!

● வி. ரெங்கநாதன், திருநெல்வேலி – 7.

? 'காங்கிரஸ் மத்தியில் தனித்து ஆட்சி அமைக்கவே விரும்புகிறது; கூட்டணி ஆட்சிக்குத் தயாராக இல்லை' என்கிறாரே சோனியா...?

! 'ஜெ'விடமிருந்து பா.ஜ.க. அனுபவம் பெற்றதோ இல்லையோ, சோனியா பெற்றுக் கொண்டு விட்டார் என்று கருதலாம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எஸ். ரவி வைத்யா,
3/154, ஜவஹர் தெரு,
இந்தியன் வங்கி காலனி,
நாராயணபுரம்,
மதுரை - 14.

# பிரதமர் மீதான ஆர்.எஸ்.எஸ். பிடி இறுகுகிறதா?



அண்மையில் நடந்து முடிந்த சட்டசபைத் தேர்தலில் மத்தியில் ஆளும் பாரதிய ஜனதாக் கட்சி, படு தோல்வியினைத் தழுவிய இரண்டாவது நாளன்று, டெல்லியின் பாராளுமன்றத்தையடுத்த சாலையில் பிரம்மாண்டமான பேரணியொன்று நடைபெற்றது. பேரணியை நடத்தியது காங்கிரசோ, இதர எதிர்க்கட்சிகளோ அல்ல. மத்தியில் ஆளுகிற பா.ஜ.க.வின் தாய் அமைப்பு ஆர்.எஸ்.எஸ். என்பது ஊரறிந்த ரகசியம். அவ்வமைப்பின் இன்னொரு கிளை அமைப்பான பாரதிய மஸ்தூர் சங்கம் என்ற தொழிலாளர் அமைப்புத்தான் பேரணி நடத்தியது. பேரணிக்குத் தலைமை ஏற்றவர் மூத்த ஆர்.எஸ்.எஸ். தலைவர்களுள் ஒருவரான தத்தோபந்த் தேங்கடி. பேரணியின் முடிவில் உரையாற்றிய அவர் சொன்ன அதிரடியான விஷயம், பா.ஜ.கவினருக்கே அதிர்ச்சி தரும் ஒன்று!

"பிரதமர் வாஜ்பாய், நேரு, முந்தைய அமெரிக்கப் பிரதமர் உட்ரோ வில்ஸன் ஆகியோர் வாழ்க்கைகளைப் பார்த்துப் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும். சுய நலம் கொண்டவர்களை ஆலோசகர்களாகக் கொண்டதன் மூலம் தங்களுக்கு அவப்பெயர் தேடிக் கொண்டார்கள் அவர்கள் என்பதை மறந்து விடக்கூடாது" என்று பேசினார் அவர்!

"இந்த கோபாவேசமான பேச்சினை, ஏதோ தேங்கடி என்ற ஒரு தனி மனிதர், வாஜ்பாய் மீது குற்றஞ்சாட்டுவதாகக் கொள்ளக் கூடாது. மூத்த ஆர்.எஸ்.எஸ். தலைவரான தேங்கடி, ஆர்.எஸ்.எஸ். கொள்கையிலிருந்து திசை மாறிச் சென்று கொண்டிருக்கிற ஆளும் பா.ஜ.க. அரசினை வழி நடத்தும் பிரதமர் பற்றிக் கடுமையான விமர்சனம் செய்திருப்பதாகவே நோக்க வேண்டும்!" என்கிறார்கள் டெல்லி பத்திரிகையாளர் வட்டாரத்தில்.

அது போலவே, ஆர்.எஸ்.எஸின், இன்னொரு கிளை அமைப்பான சுதேசி ஜாக்ரான் மஞ்ச், இன்சூரன்ஸ் துறையில் அன்னிய முதலீட்டை அனுமதிப்பதை எதிர்த்து, டெல்லியில் பேரணி நடத்தியது.

இவை ஒருபுறமிருக்க, அண்மையில் வாஜ்பாய், தமது அமைச்சரவையில் ஜஸ்வந்த் சிங், பிரமோத் மகாஜன் ஆகியோரை சேர்த்துக் கொண்டதை ஆர்.எஸ்.எஸ் விரும்பவில்லையாம். சொல்லப் போனால், கடந்த மார்ச் மாதம் இவர்களை, வாஜ்பாய் தமது அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள முயன்றதாகவும், ஆனால் ஆர்.எஸ்.எஸ் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்ததால்தான் அவர்களுக்கு அமைச்சர் பதவி கைநழுவிப் போனதாகவும் சொல்லப்படுகிறது. ஆனால் இப்போது, ஆர்.எஸ்.எஸ்ஸின் கருத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு, வாஜ்பாய் தம் அதிகாரத்தைப் பயன்படுத்தி, தாம் யார் என்பதைச் சொல்லாமல், சொல்லியிருப்பதாகவும் டெல்லிப் பத்திரிகைகள் எழுதுகின்றன.

"ஆளும் பா.ஜ.க.வுக்கும், ஆர்.எஸ்.எஸ்ஸுக்கும் இடையிலான இடைவெளி நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. காஷ்மீர் மாநிலத்துக்கான தனி அந்தஸ்துக்கு முடிவு, பாபர் மசூதிப் பிரச்னை, பொது சிவில் சட்டம் போன்றவற்றில், ஆர்.எஸ்.எஸ். கொண்டுள்ள கொள்கைதான், பா.ஜ.க. வின் தேர்தல் அறிக்கையிலும் இடம் பெற்றிருந்தது. ஆனால் தேர்தலில் வென்று, கூட்டணிக் கட்சிகளுடன் ஆட்சி செய்யத் தொடங்கிய போதே, இந்தக் கொள்கைகளில் பி.ஜே.பி. காம்ப்ரமைஸ் செய்து கொண்டு விட்டது. இது ஆர்.எஸ். எஸ்ஸுக்குப் பிடிக்கவில்லை. பா.ஜ.க. தேர்



• ஜனா கிருஷ்ணமூர்த்தி



• சுதர்சன்



• ராஜேந்திர சிங்

## புதிய தலைமையில் 'ஈகோ' பிரச்னை வருமா?

இப்போது, ஆர்.எஸ்.எஸ் அமைப்பின் தலைவர் பொறுப்பில் இருப்பவர் 'ராஜு பையா' என்று மரியாதையுடன் குறிப்பிடப்படும் ராஜேந்திர சிங். ஆனால் அவருக்கு உடல்நிலை ரொம்ப பாதிக்கப்பட்டிருப்பதால், இயக்கப் பணிகளில் முன்பு போல ஆக்டிவ்வாக ஈடுபட முடியவில்லை. எனவே, ஆர்.எஸ்.எஸ். விரைவில், இவருக்கு அடுத்த இடத்தில் இருக்கும் ஹெச்.வி. சேஷாத்திரியின் கட்டுப்பாட்டுக்கு வரும் என்று கூறுகிறார்கள்.

ஆனால், இப்போது, ஆர்.எஸ்.எஸ். விவகாரங்களை கவனித்துக் கொண்டிருப்பவர் கே. சுதர்சன். கர்நாடகாவில பிறந்த இவர், மத்தியப் பிரதேசத்தில் வளர்ந்தவர். 53-ல் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் பிரசாரகராகச் சேர்ந்தார். பல பொறுப்புகளையும் வகித்த இவர், இப்போது இணைப் பொதுச் செயலாளர். நல்ல பேச்சாளர். அறிவு ஜீவி. பி.ஜே.பி.யின் நடவடிக்கைகளைக் கண்காணிக்கும் பணியும் இவர் வசமே உள்ளது. அதாவது, வாஜ்பாய், அத்வானி, குஷாபாவ் தாக்கரே போன்ற பி.ஜே.பி. புள்ளிகளுக்குக் கூட இவர்தான் பாஸ். ஆனால் இவர்களது ஆர்.எஸ்.எஸ் சேவை சீனியாரிடிபடி பார்த்தால், இவர்களுக்கெல்லாம் ஜூனியராக இருக்கிறார் சுதர்சன். எனவே, சுதர்சனின் தலைமையை ஆர்.எஸ்.எஸ். ஏற்றால், கொஞ்சம் 'ஈகோ' மோதல் வர வாய்ப்புண்டு என்றும் கிசுகிசுக்கப்படுகிறது.

— ராம்

தலுக்கு முன்வைத்த "சுதேசி" கொள்கையும், இன்சூரன்ஸ் மசோதா மூலமாக நீர்த்துப் போய் விட்டது. சமீபத்திய சட்டசபைத் தேர்தல் தோல்விக்கு என்ன காரணம் என்று அலசும்போது கூட சில முக்கிய தலைவர்கள், ஒருவரையொருவர் குறை கூறி, தம் பொறுப்புகளைத் தட்டிக்கழிக்க முயற்சி செய்தது, ஆர்.எஸ்.எஸ். தலைமைக்கு ஏற்புடையதாக இல்லை. நாக்பூரில் நடைபெற்ற கூட்டம் ஒன்றில், 'எது முக்கியம், பி.ஜே.பி.யா, ஆர்.எஸ்.எஸ்ஸா? பி.ஜே.பி தன்னிச்சையாகச் செயல்பட ஆர்.எஸ்.எஸ். எப்படி அனுமதிக்கலாம்?' என்று கோபாவேசமாகச் சிலர் கேட்டார்களாம்.

ஆக, ஆளும் கட்சியான பி.ஜே.பி. தன் தாய் அமைப்பான ஆர்.எஸ்.எஸ்ஸிடமிருந்து விலகிச் செல்ல முயல்கிறதா? தன் பிடியைத் தளர்த்திக் கொண்டு, எதேச்சாதிகாரமாகச் செல்ல முயற்சிக்கும் பி.ஜே.பி.யை மறுபடியும் தன் முழுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரும் நோக்கத்துடன் தனது பிடியை ஆர்.எஸ்.எஸ். இறுக்குகிறதா? அடுத்து என்ன நிகழும்? என்று பா.ஜ.க.வின் அகில இந்தியப் பொறுப்பில் இருக்கும் ஜனாகிருஷ்ண மூர்த்தியிடம் கேட்டால், "சென்ற முறை தேர்தலுக்கு முன்பு பி.ஜே.பி. தனது சொந்தத் தேர்தல் அறிக்கையை வெளியிட்டது என்றாலும், கூட்டணிக் கட்சிகளுடன் ஆட்சியமைக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டபோது, 'National agenda for governance' என்ற ஒன்றை உருவாக்கி, அதில் அனைத்து கூட்டணிக் கட்சிகளும் கையெழுத்திட்டன. எனவே, பி.ஜே.பி. சொந்தத் தேர்தல் அறிக்கைப்படிதான் செயல்படுகிறது என்று சொல்ல முடியாதே!" என்று பதில் சொல்கிறார்.

"ஆர்.எஸ்.எஸ். ஸின் பிற அமைப்புகளே, இன்சூரன்ஸ் மசோதாவை எதிர்ப்பது ஏன்? அரசியல் ரீதியில் பி.ஜே.பியை எதிர்க்கும் காங்கிரஸ் கட்சி கூட, இந்த மசோதாவுக்கு ஆதரவளித்துள்ள சூழ்நிலையில் ஏன் இந்தக் குழப்பம்?"

"இதற்கு, ஆர்.எஸ்.எஸ்ஸிலிருந்து அன்றைய ஜனசங்கம் உட்பட பல்வேறு அமைப்புகள் எப்படித் தோன்றின என்று சுருக்கமாகச் சொல்கிறேன். அது தெரிந்தால், இது போன்ற எதிர்ப்புகளில் தவறேதும் இல்லை என்று புரிந்து கொள்ளுவீர்கள். காந்திஜி கொலையுண்டதைத் தொடர்ந்து, ஆர்.எஸ். எஸ் இயக்கம் தடை செய்யப்பட்டது. காந்திஜியின் கொலைக்கும், ஆர்.எஸ்.எஸ் ஸுக்கும் எந்த ஒரு தொடர்புமில்லை என்று தெளிவான பின்னரும் தடை நீக்கப்படவில்லை. பெரும் போராட்டத்துக்குப்பின் தடை நீங்கியது. வல்லபபாய் படேல், ஸ்வயம் சேவகர்களை காங்கிரஸில் சேர்ந்து பணியாற்ற அழைத்தார். ஆனால் ஆர்.எஸ். எஸ். தலைமை அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால், நாளடைவில், ஆர்.எஸ். எஸ். மீது அவதூறு கூறப்பட்டபோது, அதன் தரப்பு வாதங்களைச் சொல்ல மக்கள் மன்றங்களில் பிரதிநிதித்துவம் தேவை என உணரப்பட்டது. அதன் விளைவாக, ஒரு சில ஸ்வயம் சேவகர்கள் ஜனசங்கம் என்ற அரசியல் கட்சியைத் தோற்றுவித்தனர். அது போலவே, அவ்வப்போது, மாணவர் இயக்கம், தொழிற்சங்கம், மகளிர் அமைப்பு என ஒவ்வொன்றாய்த் துவக்கப்பட்டன. இவற்றையெல்லாம் துவக்கியவர்கள் ஸ்வயம் சேவகர்கள்தான் என்றாலும், அந்தந்த அமைப்புகளுக்கென்று குறிப்பிட்ட கொள்கைகளும், கோட்பாடுகளும், சமூகப் பணிகளும் உண்டு. எனவே, ஆட்சியில் இருக்கக் கூடிய பாரதிய ஜனதா கூட்டணி அரசினை விமர்சிக்க ஜனநாயக முறைப்படி அவற்றுக்கு உரிமை உண்டு!

"இன்னும் சொல்லப் போனால், விஸ்வ ஹிந்து பரிஷத்தின் அஜெண்டாவில் அயோத்தி, காசி, மதுரா மூன்று இடங்களிலும் மசூதிகளை அகற்றி விட்டு, கோவில்கள் கட்ட திட்டம் உண்டு. ஆனால், பா.ஜ.க. அயோத்தியை மட்டுமே எடுத்துக் கொண்டிருக்கிறது. இதற்காக, நாளை, பி.ஜே.பியை வி.ஹெச்.பி. கூட விமர்சிக்கக் கூடும்!"

"முன்பே கூட எங்களின் முகம் அத்வானி; அதில் மாட்டப்பட்டுள்ள முகமூடி வாஜ்பாய் என்று மூத்த ஆர்.எஸ்.எஸ் தலைவர்களே குறிப்பிட்டதுண்டு. ஆக, முகமூடியைத் தூக்கி எறிந்துவிட்டு, முகத்தையே பிரதமராக்கும் முயற்சி விரைவில் அரங்கேறும் என்று கூறப்படுகிறது. இதற்கு உங்கள் விளக்கம் என்ன?"

"வாஜ்பாயை நீக்கிவிட்டு, அத்வானியைப் பிரதமராக்கும் திட்டம் ஆர்.எஸ்.எஸ்., பி.ஜே.பி இரண்டுக்குமே கிடையாது. உண்மைக்குப் புறம்பான யூகங்கள் அவை. வேறு என்ன சொல்ல?" என்றார் ஜனா. ●

— எஸ். சந்திரமௌலி

# ஓடும் நதியில் ஒரு கை அள்ளி...



அன்று அகடமி பக்கமாகச் சாலையில் போனவர்களுக்குக் கூடப் பெரு வியப்பு இருந்திருக்கும். நடப்பது இசை நிகழ்ச்சியா? ரஜினி பட ரிலீஸா என்று. அப்படியொரு கூட்டம்! உள்ளே பாடிக் கொண்டிருந்தவர் டி.எம். கிருஷ்ணா.

கிருஷ்ணாவுக்குப் பால் வடியும் முகம். தேன் வடியும் குரல். அசுர சாதகம் பண்ணியிருக்கிறார் என்பது ஒவ்வொரு அங்குலத்திலும் தெரிகிறது.

ஒரு ராகத்தை லேசாக இழுக்க அவர் தேர்ந்தெடுக்கிற இடமே பிரமிக்க வைக்கிறது. ஓடும் நதியில் ஒரு கை நீர் அள்ளுவது போல அவர் பிடித்துக் காட்டுகிற ராகங்களின் ஸ்வரூபம் அத்தனை ஜில்; அத்தனை பளிச்!

கற்பனைதானா? நம்பவே முடியாதவண்ணம் புதுப்புதுச் சாலைகளில் கம்பீர வெள்ளோட்டம் போனது அன்று அவர் பிரயோகித்த கல்யாணித் தேர்.

ஆலாபனையின் மிக முக்கியமான சூட்சுமம், ஒரு ஸ்வரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து எட்டுத் திக்கிலும் பட்டம் விடுவது. ஆதார ஸ்வரங்கள் மூன்றில் நின்று அன்று கிருஷ்ணா அந்த ராகத்தில் ஊஞ்சலாடிய தேர்த்தியில், அரங்கு கிரங்கிப் போனது.

தீக்ஷிதரின் 'கமலாம்பாம் பஜரே'வுக்குப் பாடுகிறபடி பாடினால் தூங்கவைக்கும் வசியம் உண்டு. கிருஷ்ணா கையாண்ட விதத்தில் தூக்கமல்ல; ஒரு மயக்க நிலைக்குப் பறந்து போய் அகண்ட வெளியில் மிதக்க வேண்டியதாகி விட்டது! ஒரு பக்கம் ராகத்தின் அழகு ஸ்வரூப தரிசனம். மறுபக்கம் சாகித்யத்தை உடைத்து நொறுக்காமல் தொடுத்துப் பூ கோக்கும் லாகவம். கேட்டது, நிஜமான கிருஷ்ண கானம்.

கல்யாணி கிடக்கட்டும். அந்த யதுகுல காம்போதியை எப்படி வர்ணிப்பது? கவிந்து வந்து மோதியது குளிர்காற்றா? குற்றாலச் சாரலா? மேகம் வந்து கொடுத்த மெத்தென்ற ஒத்தடமா? கண் படாமல் இருக்க வேண்டும்.

கிருஷ்ணாவின் பெரிய பலம், மேடையில் உட்கார்ந்ததும் அவருக்கு உலகமே மறந்து விடுவது. 'நின்னே நெர'வை எடுக்கிறாரா? தியாகபிரும்மத்துடனே கரைந்து விடுகிறார். ஒரு 'புலிதி தாசுடனே'வைத் தொடுகிறாரா? ஸ்ரீரஞ்சனியாக அவரே மாறி விடுகிறார். 'காமாக்ஷி' என்று யதுகுல காம்போதியில் ஆரம்பித்தால், அம்பாள் உபாசகராக ஆகிவிடுகிறார். 'நான் பாடுகிறேன், நீ கேட்கிறாய், வரதராஜன் வயலினில் வெளுத்து வாங்குகிறார், மிருதங்கம் பாலாஜி வாசிப்பில் அழுத்தம் போதவில்லை, வெளியே கேன்டீனில் போண்டா பிரமாதம்' என்று எந்த விஷயமும் அவர் கவனத்தில் இல்லை.

கலையின் உச்சபட்ச அழகு, கலைஞன் அத



• கிருஷ்ணா (படம் ரவிசங்கரன்)

னோடே இரண்டறக் கலந்து, கரைந்து போவது. கிருஷ்ணா அந்த ரகம். அதனால் தான் அவர் ஆர்ப்பாட்ட சேஷ்டைகள் மறந்து சங்கீதம் மட்டும் மனத்தில் நிற்கிறது. நாளைய இசை உலகில் பட்டொளி வீசிப் பறக்கப் போகிறது அவர் கொடி. அவருக்கு அநியாயத்துக்கு மத்தியானக் கச்சேரி கொடுத்து இனியும் அழிச்சாட்டியம் பண்ணினால் அகடமி வாசலில் ரசிகர்கள் 'அறுசுவை' காண்டீனையும் மறந்து உண்ணாவிரதம் இருப்பார்கள்.

**சா**தாரணமாக மத்தியான ஸ்ப்ரீ கச்சேரியோடு கூட்டம் கலைந்து விடும். ஆனால் கிருஷ்ணாவுக்குப் பின்னரும்



• கீதா ராஜா



• சஞ்சய் சுப்ரமண்யம்

அன்று அகடமியில் அலைமோதியது. பொங்கப் பொங்க மனம் நிறைந்திருக்கும் போது இன்னொரு கச்சேரி என்பது ஆன்டி க்ளைமேக்ஸாகிவிடும் வாய்ப்புகளே அதிகம். ஆனால் நெய்வேலி சந்தானகோபாலன் அதை அனுமதிக்கவில்லை.

அடுத்துப் பாடிய சஞ்சய் சுப்ரமண்யம் பாடு இன்னும் கஷ்டம். வயிறு நிறையச் சாப்பிட்ட பிறகு பாயசத்தைப் பரிமாறும் பொறுப்பு. ....ஆனால் திருவனந்தபுரம் பத்மனாபசாமி கோயிலில் மகாராஜா தரிசனத்துக்கு வரும் நேரம், எள் போட இடமில்லாத கூட்டம் கூட பிரிந்து வழிவிடுமாம். அப்படியொரு ராஜ சங்கீதம் வழங்கினார் சஞ்சய்!

ஒரு டீஸ்பூன் அளவுதான்... ஆனால் அது பைரவியின் எஸென்ஸ். நாலு கோடி முத்து ஆர். கே. லக்ஷ்மண் ஒரு குணசித்திரத்தைக் காட்டுகிற மாதிரி...!

கௌளையை ஆலாபனை செய்து கேட்டிருக்கிறீர்களா...? சஞ்சய் செய்தார்! இழையிழையாக அழகுகளைச் சேர்த்துப் பின்னி, முடிவில் குஞ்சலம் கட்டியது தீக்ஷிதர் கீர்த்தனையில் – 'தியாகராஜ பால யாகமாம்' அபூர்வமாகவே கேட்கக்கூடிய கிருதியென்றாலும் ஆண்டுப் பழக்கிய கல்சட்டி என்பார்களே – அந்த காத்திரம், நேர்த்தி!

ஆயுள்காலத்துக்கு காம்போதியை மனசுக்குள் பூட்டி வைத்துத் திறந்து விட்டால் எப்படியிருக்கும்...? அப்படி முட்டி, மோதி வெளிப்பட்ட சஞ்சய்யின் ஆலாபனை வெள்ளத்தில் ரசிகர்கள் முழுகியே போய் விட்டார்கள். கார்வையா, இதோ! கற்பனையா, இந்தா! புதுமையா, தந்தேன்! பழைமையா, உண்டு! ப்ருகாவா... பிடி பிடி! என்று வஞ்சனையில்லாமல் அவர் வழங்க, 'ஆஹா ஆஹா' என்று ரசிகர்கள் தங்களையறியாமல் பரவசப்பட...



• சங்கர் ஸ்ரீநிவாஸ்

வயலின் அனந்த கிருஷ்ணன் பாடு படு திண்டாட்டமாகி விட்டது! கைலாஸ பர்வதத்தை நிழல்பிரதி எடுப்பதென்றால் சும்மாவா.... தைரியசாலி! எப்படியோ சமாளித்து கைதட்டலும் வாங்கி விட்டார்!

ம்ருதங்கம் மூர்த்தியும் கஞ்சிரா வெங்கடேஷும் தனியாவர்த்தனம் வரை காத்திருந்து தங்களை நிரூபித்தார்கள்.

கௌரி மனோகரியில் ராகம் தானம் பல்லவி – தேவ மனோகரியில் ஆரம்பித்து சரஸ்வதி மனோகரி வரையிலான சில மனோகரிகள் தோழிப் பெண்கள்! (இப்போது இப்படிப் பாடுவதுதான் ஃபாஷன்) – அன்று சஞ்சய் கச்சேரிக்கு அநியாயத்துக்குத் தாமதமாக வந்து காம்போதியை இழந்த உயரமான வி.வி.ஐ.பிக்களுக்கும் பல்லவியால் மட்டுமே கூட நிறைவு ஏற்பட்டிருக்கும்.

**நு**ங்கம்பாக்கம் கல்சுரல் அகடமியில் கீதா ராஜா கச்சேரியை ஆரம்பித்தபோது எண்ணி பத்துப் பேர் கூட இல்லை. மேடையில் ஃபான் வசதியில்லை. ஏ.ஸியும் போடாத அரையிருட்டு அரங்கம். என் அனுதாபத்தை தமது ஹம்சத்வனியால் துடைத்தெறிந்து முன்னேறினார் கீதா

## கல்லில் பிறக்கும் இனிமை!

கருங்கல்லில் புல்லாங்குழல் செய்து அதை ஒருவர் இனிமையாக வாசித்து வருகிறார் என்பது ஆச்சரியம்தானே. கேரள மாநிலம், பாலக்காடு மாவட்டத்தில் ஒத்தப் பாலம் தாலுகாவிலுள்ள கண்டப்பற்று கிராமத்தைச் சேர்ந்த சங்கரநாராயணன் தான் இந்தச் சாதனை செய்துள்ளார்.

— ஏரோட்டி ராமநாதன்

ராஜா.

கார்வை அலையின் முடிவில் பூநுரை பிருகாக்களால் அலங்கரிக்கும் ஆலாபனை பாணி. மழுப்பல் இல்லாத பிருகாக்கள், அழுத்தமான குரல். சக்கர வாகத்தை அழகுணர்ச்சியுடன் வடிவமைத் தார் (சுகுண மூலே...) மத்யமாவதியிலும் (பாலிந்த்ஸ காமாக்ஷி) அதே அணுகுமுறை.

வயலினின் ஆதரவு குறைவு (கே. சிவ ராமன்) என்றால், மிருதங்கம் சொல்கட்டு அதிகம் (நெய்வேலி ஸ்கந்தசுப்ரமண்யம்).

இதோ ராஜா கீழ்க் கால நிரவலை அவ சரமாகத் தள்ளிவிட்டு துரித காலத்துக்குப் போய் விடுவது ஒன்றரை மணி நேரமே கச்சேரி என்பதாலா...? நடுவிலே காபியும் (என்ன தவம்...) தனியாவர்த்தனத்துக்குப் பிறகு பைரவியும் (யாரோ இவர் யாரோ) பாடியது வித்தியாசத்துக்காகவெனில் பைரவி அளவு காபி எடுபடவில்லை.

மத்தியான கச்சேரியில் டிகிரி காபி எதிர்பார்க்கக் கூடாது என்ற எனது போன வார 'பொன் மொழியை'ப் பொய்யாக்கவே புறப்பட்டது போல் பாடினார் சங்கர் ஸ்ரீநிவாஸ்.

அசல் கும்பகோணம் டிகிரி காபி! கும்பகோணத்துக்கும் செம்மங்குடிக்கும் எவ்வளவு தூரமிருக்கும்...? அந்த மட்டத் துக்கு அளவான தனித்தன்மை கலந்த செம் மங்குடி பாணி!

கொஞ்சம் 'கச்சேரியுணர்வும்' நிறைய உழைப்பும் இந்த இளைஞரை எங்கேயோ கொண்டு போய் நிறுத்தும்.

நவராகமலிகை வர்ணம் ஆரம்பித்த போதே தர முத்திரை தெரிந்தது. ஆனால் அடுத்து கௌளையில் ஸ்ரீ மகா கணபதி தவிர்த்திருக்கலாம் - கற்பனை ஸ்வரங்கள் வேறு. சின்ன கச்சேரியில் அடுத்தடுத்து இப்படி விறுவிறுப்புக்காக இரண்டு உருப் படிகள் என்பது கட்டுபடியாகாது.

சட்டென்று ஒரு ஆலாபனை, சின்ன தாக ஒரு கிருதியில் நிரவல் என்று முன் னேறி பிரதான ராகத்துக்குப் போய்விட வேண்டாமோ?

ஆனால் பேகடையை (நனவாரி தனமு...)சங்கர் ஸ்ரீநிவாஸ் ஆலாபனை செய்தபோது அவருக்கு வயது இருபத்தி நாலா அல்லது நாற்பத்தெட்டா என்று சந் தேகம் வந்து விட்டது! அத்தனை முதிர்ச்சி. சின்னச் சின்ன சுழித்தோடும் அழகுகளை விவரித்தபோது ராகத்துடன் கைகோத்து நடப்பது போலிருந்தது.

ஐயோ! திரும்பவும் தோடியா என்று சலிக்க வைக்காமல் ஒரு முதல்தர தோடி (கஜவதனா ஸம்மோதித...) பாடினார். ராக பாவத்தை முதலில் ஆணி அடித்த மாதிரி நாட்டிவிட்டு மெள்ள பிரித்துப் பிரித்து அவர் பாடப் பாட... பக்கத்து சீட் சீனியர் சிடிஸனின் முகத்தில் பரவசத்தைப் பார்க்க வேண்டுமே... 'அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே...' என்று எழுந்து ஆட ஆரம் பித்துவிடப் போகிறாரே என்று எனக்கு உதறல்!

அருமையான நிரவல், ஸ்வரம் பாடும் இளைஞருக்கு இன்னும் பலமான வயலின் போட்டிருக்கலாம். நீலா ஜெயகுமார் இரண்டாங்காலத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் கஷ்டப்பட்டார். ஆலாபனை களில் சமாளித்தாலும் கீர்த்தனைகளைத் தொடர்வதில் அனுபவக் குறைவு தெரிந்தது. ஜெயகுமார் ஹிம்சிக்காமல் மிருதங்கம் வாசித்தாலும் வேறுபாடுகள் காட்டிச் சிறப் பிக்கவில்லை.

சங்கர் ஸ்ரீநிவாஸ் இது குறித்தும் சரி, ஷாப்பிங் வந்த வாக்கில் பாரதிய வித்யா பவன் அரங்கில் எட்டி எட்டிப் பார்த்துப் போன மாமிகள் குறித்தும் சரி... கவலையே படவில்லை. ஸ்திதப் பிரக்ஞனாகப் பாடிக் கொண்டே போனார்.

பாடகர் ஒரு மருத்துவரும் கூட. ப்ருகா வைரஸ், கணக்கு ஜுரம் இன்றி சங்கீதத் தையும் சுத்தமாக disinfect செய்து வைத் திருக்கிறார்! ○

### திருத்தம்

**27.12.98 இதழில் வெளியான 'இன்டர் நெட்டில் இசைவிழா' என்ற கட்டுரை யில் உள்ள வெப்ஸைட் முகவரியை www.kutchery.com என்று திருத்திக் கொள்ள வேண்டுகிறோம். சில இசைவிழா கச்சேரிகளை இந்த முகவரியில் கேட்கலாம்.**



# ஆஸ்துமாவா? ஈஸ்னோபீலியாவா? சைனஸா? காசநோயா?

# இனி கவலையே வேண்டாம்



இருமல், மூச்சுத்திணறல், மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், மூக்கடைப்பு, மலச்சிக்கல் போன்ற அறிகுறிகள் இருந்தால் அவர் ஆஸ்துமா, ஈஸ்னோபீலியா, மலேரியா, காய்ச்சல், டைபாய்டு, காசநோய், டான்சில் மற்றும் சைனஸ்போன்ற நோய்களால் பாதிக்கப்படலாம் என்று அறிந்துக் கொள்ளலாம். இக்குறைபாடுகள் நாம் சுவாசிக்கும்போது மூக்கு முதல் மூச்சுக் குழல் வரை சீலியேட்டடு எபிதீலியம் என்று சொல்லக்கூடிய முடிகள் உள்ளது. இது நாம் சுவாசிக்கும் காற்றில் உள்ள தேவையற்ற மாசுக்களை தடுத்து தூய்மையான மற்றும் ஈரப்பதமான காற்றை மட்டும் நுரையீரலுக்கு இரத்தத்தை சுத்தம் செய்ய அனுப்புகின்றது.

இந்த முடிகள் காலப்போக்கில் பொடி போடுதல், (Inhaler) உபயோகித்தல், இரசாயன உரத் தொழிற்சாலை, தோல் பதனிடும் தொழிற்சாலை, தீப்பெட்டி தொழிற்சாலை, அலுமின் தொழிற்சாலை, வெடி மருந்து தொழிற்சாலை, சிமெண்ட் தொழிற்சாலை, வாகனப்புகை, போதை பொருட்கள் தொழிற்சாலை போன்றவைகளில் வேலை செய்பவர்கள் மற்றும் அதன் அருகில் வசிப்பவர்கள் மற்றும் தூய்மையான காற்றோட்டம் இல்லாத இடத்தில் வாழ்பவர்களுக்கும் இந்த காற்றுப்பாதையில் உள்ள முடிகளானது (Air Filter) அளவுக்கு மிஞ்சிய நச்சுக் காற்றினால் அழிந்து விடுகின்றது.

இதனால் காற்றில் உள்ள கிருமிகள், நச்சுக்கள் அப்படியே நுரையீரலுக்கு செல்வதால், நுரையீரல் பாதிக்கப்பட்டு பலஹீனம் அடைந்து செயல்திறன் குறைகின்றது. இதனால் நுரையீரலுக்கு வரும் அசுத்தரத்தமானது சரிவர சுத்தம் செய்யப்படாமல் உடலின் எல்லா பகுதிகளுக்கும் செல்லுகின்றன. இதனால் உடலில் உள்ள எல்லா திசுக்களுக்கும் போதிய சக்திகள் கிடைக்காமல் பலஹீனம் அடைந்து விடுகின்றது. இதனால் உடலில் உள்ள கழிவுகள் முறைப்படி வெளியேறாமல் உடலிலே தங்கி விடுகின்றன. இவைகளே நாளடைவில் அலர்ஜி, இருமல், தும்மல், மூக்கில் நீர் வடிதல், சளி, கோழை, மூச்சு வாங்குதல், மூக்கடைப்பு போன்றவைகளாக மாறுகின்றன.

இத்தகைய குறைபாடுகள் யாவும் நீங்க எமது தெய்வீக மூலிகைகளான வேப்பிலை, வில்வம், துளசி, அத்தி, ஆடாதொடா, முருங்கை, தூதுவளை, தும்பை, கற்பூரவல்லி, கீழாநெல்லி போன்ற மூலிகைகளை பயன்படுத்தி நுரையீரல் நன்றாக செயல்படவும், நோய் கிருமிகளில் இருந்து பாதுகாத்து நோய் எதிர்ப்பு சக்தி பெறலாம். இதுபற்றிய விரிவான விளக்கம் பெற கீழ்க்கண்ட முகவரிக்கு தொடர்பு கொள்ளலாம்.



தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

தலைமை முகவரி ; **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218

## 1999 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விபரம். (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| தேதி | ஊர் | நேரம் / இடம் |
|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | : பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (அங்கா), 16, ஆஃபீசர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | : மாலை 5 to 6 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ✆ : 04112 / 22519. |
| 1,3,5,10,11,27,28,29,30ந்தேதி | -சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.Dt.) | : காலை 9 to 11 ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | : மாலை 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | : காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட், ✆ : 2266374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | : மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22899. |
| 12-ந் தேதி | - சேலம் | : காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | : மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆:0424 / 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | : காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | : காலை 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்டரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | : மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | : காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், (சென்டரல் பஸ் நிலையம் அருகில்), ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | - நாமக்கல் | : பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | : காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | : பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | : மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | : காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் பின்புறம்) ✆:27017. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | : மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327780 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | : காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தரபதி, மதுரை ரோடு, ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம், ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் | : காலை 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ :: 04562 / 45537. |
| 25-ந் தேதி | - கரூர் | : பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ✆ : 63763. |

**Dr.CKM**

**DIVINE HERBAL CENTRE**

தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

18 & 19-ந் தேதி-புது டெல்லி காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Pandam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 5717126, 5723651

# சொல்லித் தந்தால் வருமா சங்கீத ரசனை!




பகல், பிற்பகல், முற்பகல், மாலை, இரவு என்று சீசனில் எந்த வேளை கச்சேரியானாலும் இன்று இளைஞர்களின் ஆக்கிரமிப்புதான். ஆனால் என்னதான் இளமைக் களஞ்சியமாக இசைவிழா மேடைகள் இருந்தாலும் அரங்கில் ரசிகர்களிடையே நரைத்து/டை அடித்த தலையர்கள்தான் அதிகம்! இன்றைய இளைஞர்கள் கச்சேரிகள் கேட்க வராவிட்டால் நாளை கர்நாடக சங்கீதத்தின் நிலை என்னவாகும்...? இந்தக் கவலை பற்றிக்கொண்டதால் பொறுப்பான சில முயற்சிகளில் இறங்கியது ஒய்.ஏ.சி.எம் அமைப்பு (Youth Association for Classical Music). பள்ளி, கல்லூரிகளில் இசை ஆர்வத்தை வளர்க்கப் பாடுபட்டது; ரசிகர்களை உருவாக்க போட்டி நடத்தியது. இந்த முயற்சிகளின் வரிசையில் இப்போது லேட்டஸ்டாக ஒரு காசெட் – இல்லையில்லை இரண்டு காசெட்டுகள் – 'Learning to Appreciate Carnatic Music' என்ற இரட்டை காசெட் பாட நூல்!

ஆனால், ஒரு பாட நூல் போல் இல்லாமல் நட்போடு இசைப் பூஞ்சோலைக்குள் அழைத்துப் போய், நிறங்களையும் மணங்களையும் வனப்புகளையும் அறிமுகப்படுத்தி ஆர்வமும் ஆவலும் உருவாக்க அரும்பாடுபட்டிருக்கிறது தயாரிப்புக் குழு. (டாக்டர் சுந்தர், விஜய் சிவா, டி.எம். கிருஷ்ணாவுடன் சிறப்பு வழி காட்டியாக எச்.எம்.வி. நிறுவனத்தின் அனந்த் வைத்தியநாதன்.)

சுருதி, ஸ்வரம், ராகம், கீர்த்தனை, ஆலாபனை, நிரவல், கற்பனை சுவரம், தாளம் என்று சங்கீத அடிப்படைகளுக்கான தெளிவான விளக்கங்கள் தவிர கச்சேரி அமைப்பு குறித்த விவரங்களும் அடக்கம். இசையுலக மேதைகளின் பாட்டையும் வாசிப்பையும் தெளிவான உதாரணங்களாக வழங்கி, எளிமையான இணைப்பு உரையுடன் தொகுத்திருக்கிறார்கள். கொஞ்சம் ஸ்டைலான குரலில் இணைப்புரை வழங்கியிருப்பவர் பி.ஸி. ராமகிருஷ்ணா.

வெளியீட்டு விழாவில் ஒய்.ஏ.சி. எம்மையும் காசெட்டைப் பதிப்பித்த எச்.எம்.வியையும் வாழ்த்தினார்கள் டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன், ஏஷியாநெட் சசிகுமார், திரைப்பட இயக்குனர், ராஜீவ் மேனன்.

இப்படியொரு காசெட் தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் 1991 இலேயே தோன்றிவிட்டதாம். நீண்ட யோசனைக்கும் பல வடிவ மாற்றங்களுக்கும் பிறகு, இறுதி வடிவத்துக்கு எச்.எம்.வியின் ஓ.கேயும் கிடைத்துவிட ஒரு கனவு நனவான சந்தோஷத்தில் இருந்தார்கள் ஒய். ஏ. சி. எம். உறுப்பினர்கள்.

சொல்லித் தருவதன் மூலம் சங்கீத ரசனையை வரவழைக்க முடியுமா...?

'ரசிக்க ஆசையிருந்தும் அறியாமையாலும் கூச்சத்தாலும் கச்சேரி இன்பத்தை இழந்து கொண்டிருப்பவர்கள் ஏராளம்... அவர்களுக்கு உதவவே இந்த காசெட்' என்பது தயாரிப்பாளர்களின் பதில்.

தமிழிலும் தயாரித்தால் நன்றாயிருக்குமே என்பது நமது ஆதங்கம்!

— மலர்

## மக்கள் குரலே மகேசன் குரல்!

அண்மையில், தாணாவில் வெகுண்டெழுந்த மக்கள் சக்தியைக் கண்டு அரசியல்வாதிகளே மிரண்டுவிட்டனர்! சாலைகளை விஸ்தரித்து, சட்டவிரோதமான கட்டடங்களைப் பாரபட்சமில்லாமல் இடித்துத் தள்ளி, தங்களுக்கு இம்மியளவும் பாக்கி வைக்காமல் எல்லாப் புகழையும் ஹோல்சேலாக அள்ளிக் கொண்ட முனிசிபல் கமிஷனர் டி. சந்திரசேகர் மீது, நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர, கவுன்சிலர்களெல்லாம் கட்சி பேதமின்றி ஒன்று பட்டனர். உடனே டாக்ஸி, ஆட்டோக்காரர்கள் ஸ்ட்ரைக் செய்தனர்; தொழிற்சாலைகளிலிருந்தும், வியாபாரிகளிடமிருந்தும் "சந்திரசேகர் வேண்டும்" என ஃபேக்ஸ்கள் பறந்தன. டாக்டர்கள், வக்கீல்கள், சாதாரணர்கள் எல்லோரும் மெழுகுவர்த்தி ஊர்வலம் நடத்தி, சந்திரசேகருக்குப் பேராதரவைத் தெரிவித்தனர். ஆடிப் போன அரசு, கவுன்சிலர்களைக் கண்டித்து, அவர்கள் முயற்சிகளைக் கைவிடச் சொன்னது. பரவாயில்லை; ஜனநாயகம் இன்னும் மூச்சுவிட்டுக் கொண்டுதானிருக்கிறது!

## நம்பியை நம்பி...

எல்லோரும்தான் சத்திய நாராயணா பூஜை செய்கிறார்கள். ஆனால எங்கே, எப்போது, எப்படிச் செய்ய வேண்டுமென்ற விவரங்களை, காங்கிரஸ் கவுன்சிலர் பிரதாப் ஸர்நாயக் போல் அறிந்தவர்கள் யாருமில்லை. தாணா முனிசிபாலிடிக்காரர்கள் இடிக்க வருகின்ற, ஏவூர் ஹில்ஸ் பகுதிகளிலுள்ள (சட்டவிரோதமான) பங்களாக்கள் லிஸ்டில் தம்முடைய பங்களாவும் இருப்பதை வெள்ளிக்கிழமையன்று மோப்பம் பிடித்தாரோ இல்லையோ, சனியன்று அங்கே சத்ய நாராயணா பூஜைக்கு ஏற்பாடு செய்து விட்டார். காங்கிரஸ் பெருந்தலைவருக்கும் அழைப்பு விடுத்தார். மறுநாள் அவர் வீட்டுக்கு 'இடிப்புக்குழு' வந்தவுடன், 'பூஜை நடக்கிறது; பிறகு வாருங்களேன்' என்றார் பவ்யமாக. அன்று மதியமே அரசு தரப்பிலிருந்து ஸ்டே ஆர்டர் வந்துவிட்டது! (பல அரசியல்வாதிகளின் பங்களாக்கள்- சிவசேனைக்காரர்களுடையதும்-அங்கே இருக்கிறதே?) அப்புறமென்ன? நாராயணா ஹரி நாராயணா... நாராயணா சத்ய நாராயணா...தான்!

## அணையாத நெருப்பு!

சிங்க மராத்தியரின் வீரம் சிலிர்க்க வைக்கிறதே! சிவசேனையின் குண்டாயிசத்தை எதிர்த்து வாய் கிழியப் பேசுபவர்களெல்லாம், சமயத்தில் எங்கேதான் போகிறார்களோ? 'ஃபயர்'



படத்தை காட்டச் சொல்லி, முன்பு நியூ எம்பயர் தியேட்டர் எதிரே கூடிய 'வீரர்'களை விரல் விட்டு எண்ணிவிடலாம். கோஷக் குரல் வேறு கிணற்றுக்குள்ளிருந்து கேட்டது; நடுக்கத்துடன் சில 'ஸ்லோகன்' அட்டைகளை அவர்கள் எட்டி நின்று காட்ட, இவர்களைப் போல் பன் மடங்கிருந்த போலீஸுக்கு வெறுத்தே விட்டது! ''ஆதரவாளர்களெல்லாம் வண்டியில்

## ...கொண்டிருக்கும் ...பயர்!

ஏறுங்க" என்று வேடிக்கை பார்க்க வந்த கூட்டத்தை எல்லாம் விரட்ட, ஆஜாத் மைதான் போலீஸ் ஸ்டேஷன் வரை ஓசி ட்ரிப் அடிக்க நினைத்தவர்களெல்லாம் தொற்றிக் கொண்டனர். கொஞ்ச நேரத்தில் விடுதலையுமாயினர். மறுபடியும் 'சினிமாக்ஸில்' ஃபயர் திரையிடப்படும் என்றொரு கூத்து; நீண்ட க்யூ வரிசைகள்; "தாக்கரே ஆணையிட்டார்..." என்று கூவிக் கொண்டு வந்திறங்கிய சிவசேனைக்காரர்களைக் கண்ட மாத்திரத்தில் 'க்யூ'வே காலி! தியேட்டர்காரர்களும் சட்டுப்புட்டென்று படத்தை டப்பாவுக்குள் அடைத்தனர்! ஹூம்! அதன் போக்கில் விட்டிருந்தால் இரண்டே வாரத்தில் அணைந்திருக்க வேண்டிய நெருப்பு; சிவசேனை புண்ணியத்தில் நீறு பூத்த நெருப்பாய் இன்னும் கனன்று கொண்டிருக்கிறது.

### நீரும் நெருப்பும்!

'Fire' பிரச்னை கிடக்கட்டும்! நீருக்காக நெருப்புப் பற்றி எரிந்த கதை தெரியுமா? நவி மும்பை (சிவசேனை) கவுன்சிலரான மீனா மோரேவுக்கும், சில காங்கிரஸ்காரர்களுக்கும் தண்ணீர்க் குழாய் விஷயமாக கசமுசா. 'உன் தயவில்லாமல் கனெக்ஷன் கொடுக்கிறேன் பார்' என்று காங்கிரஸார் மார்தட்ட, 'நீங்கள் திறப்பு விழா நடத்துவதை நானும் ஒரு கை பார்க்கிறேன்' என்று பெண் புலி சீற... அதென்னவோ இந்த விரோதிகள் வீட்டருகே தொலைபேச(!) வந்த மீனாவை, மூன்று (காங்) குண்டர்கள் கெரசின் ஊற்றிக் கொளுத்தி விட்டார்களாம்! 80% தீக்காயங்களுடன், பைகுல்லா ஆசுபத்திரியில் மயங்குமுன், மீனா வாக்கு மூலம் கொடுத்து அவர்களை உள்ளே தள்ளி விட்டார். இடையே, திறப்பு விழாவைத் தடுக்க, மீனா, தானாகவே தீக்குளித்ததைப் பார்த்ததாக(!) சில தாய்க் குலங்கள் பேட்டியளித்துள்ளன. இதன் நடுவே மீனா மோரே சிவபதம் அடைந்து விட்டதாக அவையில் அறிவித்து எல்லோரும் அஞ்சலி செலுத்தினர்; இல்லை, அவர் இன்னும் உயிருடன் போராடிக் கொண்டிருக்கிறார் என்று தகவல் வர, எல்லோரும் வழிந்து கொண்டே, 'இப்படிப் புரளி ஏற்பட்டால் அவர் நீடூழி வாழ்வார்' என்று சமாளிக்க... அதைப் பொய்யாக்கும்படி மீனா மோரே கதை முடிந்த செய்திகள் வந்தன. ஹப்பப்பா... குழாயடிச் சண்டை தோற்றது போங்கள்; இந்தக் குழாய்ச் சண்டையில் அவ்வளவு குழப்பம்; இன்னும் தீர்ந்தபாடில்லை!

### அ(க)ஷ்டாவதானம்!

இந்தியாவில் மீதமிருக்கும் மிகச் சொற்ப அஷ்டாவதானிகளில் ஒருவரான கணேஷ் (டெபுடி டைரக்டர், பாரதிய வித்யா பவன், பெங்களூர்) மும்பை வருகிறார். அவர் ஒரே சமயத்தில் எட்டுப் பேரை சமாளிக்கும் அதிசயத்தை காணத் தவறாதீர்' என்ற அறிவிப்புகள் ஆர்வத்தைக் கிளற, SIES ஹாலை நோக்கி ஓடியவர்கள் ஏராளம்; வந்தவரும் கொடுக்கப்பட்ட சொல்லை வைத்துக் கவிதை இயற்றல், ராகத்தைக் கொண்டு பாடலியற்றல், 25 கட்டங்களில், எந்தப் பக்கத்திலிருந்து கூட்டினாலும் ஒரே விடை வருமாறு எண் அமைத்தல் என்று என்னென்னவோ சாகசங்கள் செய்தார். ஆனால் பெரும்பான்மை கூட்டம் 'பே' என விழித்தது. நிகழ்ச்சித் தொகுப்பாளர் கைதட்டினால் தட்டியது; சிரித்தால் சிரித்தது; காரணம்? எல்லாம் ஸம்ஸ்க்ருத மயம்! புரிந்து கொண்டு ரசித்த கையளவு ரசிகர்களை ஏனையோர் பொறாமையுடன் பார்க்க, நடு நடுவே ஆங்கில மொழிபெயர்ப்பில் சிக்கிய அபூர்வ ரசங்களை ஆடியன்ஸ் தாகத்துடன் பருகினர். உதாரணத்துக்கு காபி மேல் ஒரு கவிதை– "யமுனையை ஒத்த கருநிற டிகாக்ஷன்; கங்கையை ஒத்த வெண்ணிற பால்; சரஸ்வதி போல் கண்ணுக்குத் தெரியாத சர்க்கரை; காபி ஒரு திரிவேணி சங்கமம் தானோ?" மொத்தத்தில், மொழி தெரிந்தவர்களுக்கு அஷ்டாவதானம், புரியாதவர்களுக்கு கஷ்டாவதானம்! ⚫

— ஜெயஸ்ரீ ராஜ்

# குறையொன்றுமில்லை 91

'ஸ்ரீ' ஆகிற லக்ஷ்மி எப்போதும் பகவானுடைய திருவடியை ஆச்ரயித்தே இருக்கிறாள். எப்போதும் அந்தத் திருவடியை விட மாட்டாள். அது மாத்திரமல்ல... நாம் ஆச்ரயிப்பதற்குத் தகுந்தவளாயிருப்பாள் அவள்.

ஸ்ரீரங்கத்திலே போனால் பார்க்கலாம். ரங்கநாதரை சேவிக்க வேண்டுமானால் ஏகப் பட்ட தூரம் உள்ளே போக வேண்டும். தாயாரை சேவிக்க வேண்டுமானால் ஒரு க்ஷணத்திலே சேவித்து விட்டு வந்து விட லாம். - பக்கத்திலேயே இருக்கிறாள் அல்லவா! மஹாலக்ஷ்மி உடனே கிடைக்கிறாள் நமக்கு!

திருவேங்கடமுடையான் சந்நிதிக்குத் தான் போங்களேன்... தாயாரை சீக்கிரமாகப் பார்த்து விடலாம். **அவன்** சேவை சுலப மாகக் கிடைக்குமா! தாயாருக்கு எவ்வளவு காருண்யம் நம்மீது. நாம் சுலபமாகச் சேவிக் கும்படியாக ரொம்பக்கிட்டே நெருங்கி நிற் கிறாள்; அவனை எப்போதும் ஆச்ரயித்தே இருக்கிறாள்.

ஸ்ரீ என்ற பதத்துக்கு இப்படி நெருங்கி இருப்பவள் என்று பொருள்.

'ஸ்ரீ' என்றால் அடுத்து வரும் பொருள் பார்ப்போம். நாம் ஏதாவது குறைகளைச் சொல்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங் களேன். ஒரே குற்றங்களாகச் சொல்கிறோம்... என்ன ஆச்சர்யம் பாருங்கள். பொறுமை யாக உட்கார்ந்து கொண்டு கேட்டுக் கொண்டே இருப்பாளாம்!

நம்மிடம் யாராவது கஷ்டத்தையே சொன்னால் கேட்க முடிகிறதா? குறை யையே சொல்லிக் கொண்டிருந்தால் யார் கேட்பது! விதுர நீதியிலே சொல்லியிருப் பதைப் பாருங்கள் - விதுரர் யார் மனதும் புண்படாமல் பேசக்கூடியவர். அவரே இந்த இடத்திலே 'சுருக்'கென்று தைக்கும்படி சொல்கிறார்! என்ன சொல்கிறார்...? ''இரண்டு வகையானவர் களைப் பிடித்து இழுத்து வந்து கழுத்திலே பெரும் பாறாங்கல்லைக் கட்டுங்கள்...'' என்கிறார். சின்னக் கல்லாக இருந்தால் போதாதாம்...! ''பெரிய கல்லாகக் கட்டி... நடு சமுத்திரத்துக்கு அழைத்துப் போய் அப் படியே இறக்கி விட்டுவிட வேண்டும்'' என்கிறார்!

'யார் அந்த இரண்டு வகையானவர்கள்?' என்று கேட்டால் - மிக்க பொருள் படைத் திருந்தும் தானம் செய்யாதவர்கள் ஒருவகை. தாரித்திரியத்தோடு கஷ்டப்படுகிறபோது, பகவன் நாமாவைச் சொல்லாமல், எம் பெரு மான் திருநாமத்தை மறந்து, 'கஷ்டம் கஷ்டம்' என்று எப்போதும் சொல்லிக் கொண்டிருப்பவர் இன்னொரு வகை!

தாரித்ரியம் விலக வேண்டுமானால் அவன் திருநாமத்தை அல்லவா சொல்ல வேண்டும்! அதற்குப் பதில் புலம்பிக் கொண் டிருந்தால்...?! 'அத்தகையவர்களைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து கல்லைக் கட்டி சமுத்திரத்திலே இறக்குங்கள்!'' என்கிறார் விதுரர்!

ஏக சக்ராதிபத்யத்தின்கீழ் பரிபாலனம் பண்ணும்படியானவர் ஒருவர் இருக்கிறார். அவரை இருக்கிற இடம் தெரியாமல் பண்ணி விட்டார்கள் யுத்தத்திலே. பிழைத் தால் போதும் என்று அவர் ஊரை விட்டே ஓடிப் போய் விட்டார். காட்டிலே போய் உட்கார்ந்துகொண்டார். ரொம்பக் கஷ்ட மாகப் போய்விட்டது அவருக்கு. தனித்து விடப்பட்டார். ராஜ்யம் போய்விட்டது. ஏகமாக பசிக்கிறது அவருக்கு!

கை தட்டினால் ஆயிரம் சிப்பந்திகள் காத்துக் கொண்டிருந்தார்கள்... இப்போது ஒருவரும் இல்லை; வெண்கொற்றக் குடை யின் கீழே பரிபாலனம் பண்ணியவர் நிரா தரவாக இருக்கிறார்!

வேறு வழியில்லாமல், ராத்திரி பிச்சைக் குப் போவது என்று முடிவு பண்ணினார். பகலில் போனால் அவரை அடையாளம் தெரிந்து போய்விடுமில்லையா...! அதனால் இரவிலே பிச்சையெடுக்க வேண்டும் என்று தோன்றி யிருக்கிறது.

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

## அருள்வாக்கு

உண்மையில் ஆத்மாநுபவம் பெற்று விட்டால் சடங்கே தேவையில்லைதான். ஆனால் உண்மையான ஆத்மாநுபவம் நமக்கு வந்து விட்டதா, அதற்கு நாம் பக்குவப்பட்டு விட்டோமா என்று அந்தரங்க சுத்தமாகப் பார்த்துக் கொண்டால் நாம் அதற்கு எவ்வளவோ தூரத்தில் நிற்கிறோம் என்று தெரியும். எத்தனையோ ஜன்மாக்கள் எடுத்து, எத்தனையோ கர்மாக்களைச் செய்து, அத்தனை பூர்வ வாசனைகளாலும் நம் உண்மை ஸ்வரூபமான ஆத்மானந்தத்தை மூடிக் கொண்டிருக்கிறோம். சத்கருமம் செய்தும், சத்வாஸனைகளைப் பெருக்கிக் கொண்டும் பழைய துஷ்கர்மங்களையும், துர்வாஸனைகளையும் போக்கிக் கொள்ள வேண்டும். பிறகு கர்மா தானே நின்று போகும். ஆத்ம விசாரத்தில் இறங்கலாம். அது வரையில் 'வெறும்' சடங்கு என்று சொல்கிற கர்மங்கள், பூஜை எல்லாம் நமக்கு அவசியம் பிரயோஜனமானவையே.

எனவே, சாமானிய மக்கள் சாஸ்திரப் பிரகாரம் விதிக்கப்பட்ட எல்லாச் சடங்குகளையும் வழுவற அநுஷ்டிப்பதே முறை. இவற்றால் என்ன பயன் என்பவர்களுக்கு நிதர்சனமாகச் சில பலன்களைக் காட்டலாம். இன்னின்ன கர்மங்களை இப்படியிப்படித் தவறின்றிச் செய்ய வேண்டும் என்று

தைத்ரீயோபநிஷத் சொல்கிறது...: 'ராத்திரி வேளையிலே பிச்சை எடுக்காதே! மிகுந்த பாவம் செய்திருந்தால்தான் ராத்திரியிலே பிச்சை எடுக்க வேண்டும் என்கிற எண்ணமே வரும். அந்த எண்ணம் வரவே கூடாது!' என்கிறது.

இதே சாஸ்திரம் என்ன சொல்கிறது...?

'ராத்திரி பிச்சை கேட்க யாராவது வந்தால் போடாமல் இராதே' என்கிறது. ஏனென்றால் பிச்சை கேட்க வருகிறவன் உன்னை சிட்சிக்க வருகிறான் - திருத்த வருகிறான்! என்ன உணர்த்துகிறான் நமக்கு... ''போன ஜன்மாவிலே இப்படித்தான் ராத்திரியில் பிச்சை கேட்டவருக்கு நான் போடாமல் இருந்தேன். ஆதலால் இந்த ஜன்மாவிலே பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறேன்...'' என்று உணர்த்துகிறான்.

வேதத்தினுடைய கருத்து என்ன...? ராத்திரியிலே பிச்சை எடுப்பது மஹா பாவம்! பிச்சை போடாமல் இருப்பதும் மஹா பாவம்!

ஒருத்தர் கேட்கிறார்...: 'வேதம் பாவத்தைச் சொல்வதற்காகத்தான் ஏற்பட்டதா?' ஏன் இப்படிப் 'பாவம் பாவம்' என்று சொல்லி பயமுறுத்துகிறது வேதம்...? என்று கோபம் வருகிறது அவருக்கு!

அந்த வேதத்துடைய உள்ளன்பை நாம் நினைக்க வேண்டும். வேதம் நம்மைக் கெட்டுப் போகச் சொல்லவில்லை... 'நம்முடைய சமூகத்திலே, நாம் வாழும்படியான இந்த பூமியிலே நம்மைப் போன்ற மற்றொரு மனிதனை இரவிலே பிச்சையெடுக்க வைத்து நீ பார்க்காதே...!' - இதுதான் வேதத்தினுடைய அர்த்தம்!

வேதத்தினுடைய உண்மையான கருத்து என்னவென்றால் 'அவன்தான் பிச்சை எடுக்கிறான், நமக்கென்ன' என்று நினைத்து ஒதுங்கக் கூடாது. ராத்திரி பிச்சை எடுக்கா வண்ணம் நம்மைச் சேர்ந்த மற்றவர்களைப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொருத்தருக்கும் இந்தப் பொறுப்பு இருக்கிறது. அவன் தானே 'தப்புப் பண்ணுகிறான்; அவன் தானே பாவம் பண்ணுகிறான்,' என்று யாரையும் விட்டுவிடக் கூடாது. அந்தப் பாவத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

ஆகையினால்தான் மகான்களாகி ஆசார்ய புருஷர்கள் எல்லாம் பகவானால் பிரேரேபிக்கப்பட்டு அவதரித்து, அந்தந்த காலத்திலே தர்மத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

சரி, ராஜாவிடம் மீண்டும் வருவோம்... ராத்திரியிலே பிச்சை எடுக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது ஏன்...? பசி! பசி வந்திட பத்தும் பறந்து போகும். வேதம் சொல்வதற்கும் உபன்யாஸம் பண்ணுவதற்கும்கூட பசியோடு இருந்தால் முடியாது! ஆதலால் சக்ரவர்த்தியானாலும் பசி என்று வந்தபிறகு, இழுத்து தலையோடு கால் போர்த்திக் கொண்டு அர்த்த ராத்திரியிலே யார் யார் வீட்டிலோ போய் நிற்கிறான். விட்டெறியப்பட்ட உடைந்த மண்பாண்டத்தை எடுத்துக் கொண்டு வீதி வீதியாக அலைகிறான். மிச்சம் மீதியையெல்லாம் அதிலே போடுகிறார்கள். முகத்தை அவர்களுக்குக் காண்பிக்காமல் திருப்பிக் கொண்டு போகிறான்.

அப்படிப் போய்க் கொண்டிருக்கிறபோது இருட்டிலே கண் தெரியவில்லை. கருநாய் படுத்துக் கொண்டிருக்கிறது வழியில். அதன் வயிற்றிலே காலை வைத்து விடுகிறான்! அது எகிறி மகா கோபத்தோடு அவன் காலைக் கவ்வியது!

அந்தத் திருவடி சேவை ஆகுமா என்று கப்பம் கட்ட வந்த ராஜாக்களெல்லாம்



ஒருவன் கூர்ந்த கவனத்துடன் செய்கிறபோது அவன் மனசில் ஐகாக்கிரியம் (ஒருமுகப்படுதல்) ஏற்படுகிறது. பிறகு ஆத்ம தியானம் செய்வதற்கு இவ்வாறு மனம் ஒருமைப்படுவது அத்தியா வசியமாகும். அதோடு சாஸ்திரம் கூறுவது போல்தான் இருக்க வேண்டும் என்று அவன் உறுதியாக இருப்பதால் ஓர் ஒழுங்குக் கட்டுப்பாட்டுக்கு (Discipline) உட்படுகிறான். இதைச் சாப்பிடக் கூடாது, இந்தப் போக்கிய வஸ்துக்களை அநுபவிக்கக் கூடாது என்றெல் சாஸ்திரப் பிரகாரம் நடப்பது வைராக்கியத்துக்குப் பெருத்த சகாயம் செய்கிறது. எத்தனை சிரமங்கள் இருந்தாலும் குற்றம் குறை இன்றிச் சாஸ்திரப் படி சடங்குகளைச் செய்யும் போது சங்கல்ப பலமும் (Will power) உண்டாகிறது. சொந்த அபிப் பிராயமில்லாமல் சாஸ்திரம் சொல்வதே வழி என்று இருப்பதால் அடக்கம், எளிமை எல்லாம் உண்டாகின் றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

ஏங்கிய காலமொன்று உண்டு. அந்தத் திரு வடி இன்று நாற்சந்தியிலே, நாய் கவ்வக் கிடக்கின்றதே! அதனால், ஒருத்தருடைய ஐச்வர்யம் போய்விட்டது என்னும்போது அதைத் திரும்பப் பெற வேண்டுமானாலும் சரி, தாரித்ரியத்தைப் போக்க வேண்டு மானாலும் சரி... திருநாரணன் தாள் பற்ற வேண்டும்.

– நம்மாழ்வார் இதைச் சொல்லும்போது வெறும் நாரணன் தாள் என்று சொல்ல வில்லை... லக்ஷ்மியோடு கூடிய நாராயணின் தாள் பற்றினால்தான் முடியும் என்கிறார்.

தாரித்ரியம் அகல, ஐச்வர்யம் நிலைக்க, அவன் திருவடியைப் பிடித்தால்தான் உண்டு. அப்படிப் பிடித்தவர்கள் அப்புறம் கஷ்டப்படுவார்களா! அந்த ஐச்வர்யம் அவர்களை விட்டுப் போகுமா! எப்போதும் என்றென்றும் நிலைத்து நிற்கும். இந்த லக்ஷ்மி என்ன பண்ணுகிறாள் பாருங்கள்... நாம் சொல்கிற கஷ்டத்தையெல்லாம் கேட்டுக் கொள்கிறாள். எத்தனை நேரமானாலும் பொறுமையாகக் கேட்டுக் கொள்கிறாள். அதனால் ச்ருயோதி என்று பெயர் அவளுக்கு...

அதற்கப்புறம் என்ன பண்ணுகிறாள்...? எம்பெருமானிடத்திலே ஏகாந்தத்திலே, அவன் ரொம்ப பவ்யப்பட்டுக் கேட்கிற சந்தர்ப்பத்திலே அவன் செவியிலே நம் குறைகளை எடுத்துச் சொல்கிறாள். ரொம்ப அழகாகச் சொல்கிறாள்.

முக்கூர் ஸ்ரீமத் அழகிய சிங்கர் சொல்லு வார்... 'மஹாலக்ஷ்மி கொஞ்சம் கருகு திரு மாறுவள்' என்று! கொஞ்சம் அதிகப்படுத்திச் சொல்லுவாளாம் நம் குறைகளை... இன்னும் பகவானுக்கு நம் மீது விசேஷ காருண்யம் ஏற்படுவதற்கு தானே இரண்டு – மூன்று சேர்த்துக் கொள்வாளாம். அதிலே நாம் சொன்னதைக் காட்டிலும் ரொம்ப அழகாக, அதையே பகவான் திருவுள்ளம் உகக்கும் படியாக, அவன் உடனே ஓடி வந்து உதவி விடும்படியாக அதை மாற்றி, பக்குவமாகச் சொல்லுவாளாம்.

நம் குறைகளைக் கேட்கும் குணம் – ச்ருணோதி

அடுத்து ச்ராவயதி – ச்ராவயதி என்றால் நாம் சொன்னதை மட்டுமில்லை, அவன் சொன்னதையே திருப்பி அவனிடத்திலே சொல்லுவாளாம். 'சுவாமி! அன்றைக்கு அப் படிச் சொன்னீர்களே... இன்றைக்கு முரண் பாடாக இப்படிச் சொல்கிறீர்களே... நீங்களே இப்படிச் சொல்லலாமா...?' என்று அவன் வார்த்தையையே அவனுக்குத் திருப்பு வாளாம்!

ச்ருணோதி – கேட்டவள்; ச்ராவயதி – கேட்கச் செய்பவள். அதற்கும் மேலே பாருங்கள்... தோஷங்களையெல்லாம் போக்குபவள் அவள். லக்ஷ்மியினுடைய திரு வடியை ஆச்ரயித்தோமானால் நம்மிட மிருக்கிற தோஷமெல்லாம் போய் விடுகிறது! தோஷத்தைப் போக்கி, எம் பெருமானின் அனுக்கிரஹம் நமக்குக் கிடைக்கப் பண்ணுகிறாள்.

ஸ்ரீ: என்கிற பதத்துக்கு ஆறுவிதமான பொருள் என்றேன் அல்லவா... நம் தோஷங்கள் நிவ்ருத்தி பண்ணுபவள்; **அவன்** அனுக்கிரஹத்தை நமக்குக் கிடைக்கப் பண்ணுகிறவள்; நாம் சொல்வதைக் கேட் பவள்; **அவனைக்** கேட்கப் பண்ணுகிறவள்; பகவானுடைய சரணாரவிந்தத்தை எப் போதும் ஆச்ரயிப்பவள்; நாம் ஆச்ரயிக் கத்தகுந்தவளாக, ரொம்ப நெருக்கமாக நம்மிடத்திலே தாயாராக இருந்து ரக்ஷிக் கிறவள். – இந்த ஆறும் எதிலிருந்து கிடைக் கிறது என்றால் ஸ்ரீ: என்கிற பதத்தின் அர்த்தமாகக் கிடைக்கிறது.

(தொடரும்)



# தமயந்தி

**ப**க்கத்து வீட்டில் புது மனிதர்கள் தெரிந்தார்கள். பூட்டிய கதவு திறந்தது மாதுவுக்கு சந்தோஷம் தந்தது. நெடுநாள் பூட்டிய வீடு, மண்டிய புற்கள் அகற்றப்பட்டன. மாதுவுக்கு அவற்றை வேடிக்கைப் பார்ப்பதில் அன்றைய பொழுது கழிந்தது. விடுமுறை நாட்களில் பொழுது கழிவது சிரத்தையான, சிரமமான விஷயமாயிற்று.

சாயந்தரமே கூடாரங்கள் புல்வெளியில் முளைத்தன. 'சர்க்கஸ்காரங்க' என்று அம்மா முனங்கினாள். அப்பா ஒரு கேவலமான பார்வை அணிந்து கொண்டார். எனவே, மாதுவால் அவனது சந்தோஷத்தை வெளிக்காட்ட முடியவில்லை. இனி யானை, சிங்கம், புலி, கரடி இவற்றையெல்லாம் கிட்டத்தில் பார்க்கலாம். 'பபூன்' மாமா, இவர்களில் யார்?

"சும்மா சும்மா அங்கென்ன பார்வை? ஏதாச்சும் படி."

அம்மாவுக்கு, படித்துக் கொண்டே இருந்தவர்கள், முட்டாளாகி விடுவார்கள் என்று தெரியாது. வாழ்க்கைக்கு உதவாத கல்வியை படித்துக் கொண்டே இருப்பதில் என்ன மகிழ்ச்சி? அன்றி, வாழ்க்கையைக் கற்றுக் கொள்வது கல்வியில்லையா?

பக்கத்து வீட்டு மாமாக்களில் ஒருவர் இவனைப் பார்த்து கையசைத்துக் கூப்பிட்டார். "வா" என்றார். இவன் சுற்று முற்றும் பார்த்தான். அம்மா அரிசி களைந்து கொண்டிருந்தாள். அப்பா ஈஸிசேரில். நெஞ்சில் செய்தித்தாள் சரிந்து கிடந்தபடி தூங்கிக் கொண்டிருந்தார். இப்போதைக்குக் கண்டு கொள்ள மாட்டார்கள் என்கிற தைரியத்தில், இவன் படியிறங்கினான்.

காம்பவுண்ட் கிட்டத்தில் போய் நின்றான். சர்க்கஸ் மாமா இவனைப் பார்த்து அழகாகச் சிரித்தார்.

"உன் பேர் என்ன?" என்றார்.

"மாது. மாதவன்."

"படிக்கறியா?"

"ம்." வகுப்பையும், செக்ஷனையும் கர்வமாகச் சொன்னான். "ரொம்ப நாள் இருப்பீங்களா" என்றான் சந்தேகத்துடன்.

"இந்த ஊர்ல சர்க்கஸ் முடியற வரை."

"சிங்கமெல்லாம் எங்க இருக்கு?"

"அது களத்துல கூடாரத்துக்குள்ள இருக்கும். இங்க கொண்டு வர முடியுமா? அது

# சர்க்கஸ்



சரி, உனக்குப் பார்க்கணுமா?''

அவன் ஆர்வத்துடன் தலையசைக்கப் போனவன், ''மாதூ....ா...'' என்கிற சத்தத்தில் திரும்பினான். அப்பா "உள்ள வா.." என்றார். ஸ்நேகமற்று சர்க்கஸ் மாமாவைப் பார்த்தார்.

''மாதூ... பிட்டா'' என்றார் சர்க்கஸ் மாமா. இவன் பதிலுக்குக் கையசைக்க வில்லை. பயம் மனசெங்கும் பரவியிருந்தது. கினை விட்டுப் பரவியது.

"மாது என்ன சொன்னான் அந்தாள்?''

"ஒண்ணுமில்லைப்பா."

உள்ளே போனதும் அம்மாவும் சேர்ந்து கொண்டாள். "பேசாதனு சொன்னேனில்ல! அவங்கல்லாம் மோசமானவங்க."

"ஏன்?'' அவன் குரல் தேய்ந்தது.

"அப்படித்தான். மோசம்னா மோசம். ஏன் எதுக்குனுட்டு." அரிசி கழுவின நீர் சர்ரென்று புழக்கடை நோக்கிப் பாய்ந்தது.

''அப்படி மிரட்டாத புஷ்பம். பிள்ளைங்கள எப்படி வளர்க்கணும்னு தெரியணும் உனக்கு. பிள்ளங்க அப்படித் தான். ஏன் எதுக்குனு கேப்பாங்க. சொல் லணும் நீ. அதுதான் உனக்கு அழகு. நான் சொல்றேன். மாது வா. அப்பா கூட கடைக்குக் கிளம்பு. பேசிட்டே போகலாம்."

மாதவன் பூப்போட்ட அழகான சட்டை அணிந்து கொண்டான். அப்பாவும் தூக்கம் போக, முகம் கழுவி பௌடர் பூசிக் கொண் டார். இவர்களுக்காகவே காத்திருந்தது தெரு. இறங்கி வந்தார்கள்.

"சர்க்கஸ்காரங்க மிருகங்களை வளர்ப் பாங்க, இல்லே மாது? அந்த மிருகங்கள்தான் அவங்க மூலதனம். அவை எல்லாமே டான்ஸ் ஆடும், சைக்கிள் ஓட்டும், தீயில பாயும். நம்ம 'டாமி' அப்படிச் செய்யுமா?''

"இல்லப்பா. செய்யாது" என்றான் மாது.

''செய்ய வைக்கலாம். ஒருவாரம் பட் டினி போடணும். நல்லா அடிக்கணும். அப் படினா வித்தையெல்லாம் செய்யும். வித்தை செய்ய வைக்க, மிரு கங்களைக் கொடுமைப் படுத்துறவங்கதான் மாது, சர்க்கஸ்காரங்க. சிரிக்கறா னேனு அந்தாளை நல்லவன்னு நீ எடுத் துக்கக் கூடாது. எங்க மாது நல்லவங்க கிட்டேதான் பழகணும். அதான் அம்மா ஆசை. அப்பா ஆசையும் கூட... சரியா மாது?''

அப்பா அவன் தோளை வருடிக் கொடுத் தார். அவனுக்கு மிகவும் சந்தோஷமாக இருந் தது. கடை வீதியில் நுழைந்தார்கள் அவர் கள். அதில் ஒரு கடையில் நின்ற அப்பா, கடைக்காரனைப் பார்த்து,

''அரைக் கிலோ மட்டன் போடுப்பா. தனிக்கறியா, எலும்பில்லாம" என்றார்.

**(லோபோவின் ஒரு பாடலைத் தழுவியது.)**

# நடக்குமென்பார்,

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



புது வருஷம் நல்லா, ஜோராவே ஆரம்பிச்சிருக்குங்க. உங்க மனசை உறுத்திட்டிருந்த பிரச்னைகள் எல்லாம் ஒண்ணொண்ணா பணாலாயிடும். நீண்ட நாள் ஆசைகள் சிலது உடனடியா நிறைவேற சந்தர்ப்பம் கூடி வரலாம். பாருங்க, இந்த வாரம் நீங்க தொடங்கற காரியங்கள் எல்லாம் ஏதாவது ஒரு சிக்கல்ல மாட்டிக்கும். ஆனா, நீங்க மட்டும் பொறுமை காட்டினீங்கன்னா, சுலபமா மீண்டு வந்துடலாம். பெண்களுக்கு உடல் நலன் கொஞ்சம் கெடலாம். வெளியூர் பிரயாணங்கள், உபயோகமா இருக்காது. சிலருக்கு வெளிநாட்டுலேருந்து ஏதாவது நல்ல செய்தி வரும்.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*



கிரகங்க சாதகமா இல்லை. நீங்க ரொம்பப் பொறுமையா இருக்க வேண்டியது அவசியம். முக்கியமா, ஆபீஸ்ல யாரோடவும் வீண் சண்டை போடாதீங்க. புதிய முயற்சிகள் எதுவும் இப்ப வேண்டாம். வீட்டுல சம்சாரம்/புருஷனோட அடிக்கடி சண்டை வரும். பொறுமை! பொறுமை! கலைத்துறையினருக்குப் போட்டிகள் அதிகம் இருக்கும். நண்பர்கள் விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. யார் எப்ப கவுப்பாங்கன்னு சொல்ல முடியாது. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராகலாம்.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



முக்கியமான முடிவுகள் எடுக்கச் சரியான நேரங்க! புது தொழில் தொடங்கறதோ, வீடு, மனை வாங்கறதோ எதுவானாலும் இப்ப ஆரம்பிச்சீங்கன்னா வெற்றிதான். அண்ணன், தம்பிங்க ரொம்ப உதவியா இருப்பாங்க. பெண்களுக்குத் தாய் வீட்டுலேருந்து ஏதாவது பரிசுப் பொருள் வரலாம்! அரசுப் பணியாளர்களுக்கு ஊதிய உயர்வு, விருப்பமான டிரான்ஸ்பர் இப்படி ஏதும் நடக்கலாம். சிலருக்குக் கோயில் குளம்னு சுத்தற யோகம் வரும். வீட்டுல நல்ல காரியம் ஏதாவது நடக்கலாம். அல்லது ஏதாவது குடும்ப விசேஷத்துல கலந்துக்க நீங்க வெளியூர் போக வேண்டி வரும்.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



பணம் சேரும் வாரம்னு இதைச் சொல்லலாம். வராதுன்னு நீங்க தண்ணி தெளிச்சி விட்ட பழைய் கடன்கள் இப்ப வசூலாகும். ஷேர்ல ஈடுபாடு உள்ளவங்களுக்குக் கணிசமான லாபம் கிடைக்க வாய்ப்பு இருக்கு. உத்தியோக ரீதில பிரமாதமான அபிவிருத்தி இருக்கும்னு சொல்ல முடியாது. ஆனா, பெரிய பிரச்னைகள் ஏதும் வராது. வீட்டுல, யாருக்காவது உடம்பு சரியா இல்லாமல் போகலாம். உங்களுக்கே கூட சிறு விபத்து ஏதும் வரலாம். கவனமா இருங்க. இரவுப் பயணம், தெரு நாய், பிக்பாக்கெட்காரங்ககிட்ட கவனமா இருங்க. வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு ஆதாயமான தகவல் ஏதாவது வரும்.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



பொருளாதார ரீதில பிரச்னை ஏதும் இருக்காதுங்க. ஆனா உங்க முயற்சிகளுக்குச் சில தடைகள் வரலாம். உதாரணமா நீங்க ஒரு புது பிஸினெஸ் தொடங்கினா, சரக்கு கொள்முதல் செய்யறதுல சில பிரச்னைகள் வரலாம். லைசென்ஸ்ல பிரச்னை வரலாம். அங்கங்க கொஞ்சம் 'தள்ள' வேண்டிவரும். அரசு ஊழியர்கள் ரொம்ப எச்சரிக்கையா இருக்கணும். சின்ன தப்புகள் செஞ்சி, நிறைய டோஸ் வாங்க வேண்டி வரலாம்! பெண்களுக்கு உடல் நலன் கொஞ்சம் பிரச்னை தரும். முதலாளிகளுக்குத் தொழிலாளிகளால் தர்மசங்கடமான சூழ்நிலை ஏதும் வரலாம். விளையாட்டு வீரர்களுக்கு மட்டும் புகழும் பரிசும் கிடைக்கற வாரம் இது!

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



கிரகங்கள் சாதகமா இல்லை. அதனால எந்தப் புது முயற்சியையும் இப்ப தொடங்க வேண்டாம். ரொம்ப முக்கியமான காரியங்களை ஆரம்பிக்கும் முன்னால பெரியவங்க கிட்ட அபிப்பிராயம் கேட்டு செய்ங்க. ஆபீஸ்ல வாயைக் கொடுத்து மாட்டிக்காதீங்க. வீட்டுல கூட ஏதாவது சண்டை சச்சரவு வரலாம். மாமியார் - மருமகள் உறவு சுமுகமா இருக்காது. எந்த சந்தர்ப்பத்திலும் விட்டுக்குடுத்து நடந்துக்கிட்டீங்கன்னா சண்டைகளைத் தவிர்க்கலாம். இளைஞர்களுக்குக் காதல் கைகூடும் வாய்ப்பு இருக்கு. பெண்கள், அக்கம் பக்கத்துக்காரங்க கிட்ட எச்சரிக்கையா இருக்கணும். வீண் வம்புகள் வேண்டவே வேண்டாம்!

**துலாம்** : *(சித*

**அக்னிசர்மா பக்கம்**

திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)



உங்க பேச்சாற்றல் இந்த வாரம் பல நன்மைகள் செய்யப் போகுதுங்க. புது ஒப்பந்தங்கள் க்ளிக் ஆகும். எதிரிங்க பணா லாயிடுவாங்க. அந்தஸ்து கூடும். ஆபீஸ்லயும் சரி; வீட்டுலயும் சரி. நீங்க வெச்சதுதான் சட்டம்! நண்பர்கள் ரொம்ப உதவிகரமா இருப்பாங்க. உங்களோட முக்கியமான திட்டங்களுக்கு இந்த வாரம் செயல் வடிவம் குடுக்க ஆரம்பிச்சிங் கன்னா நல்லபடியா நடக்கும். வீட்டுல ஏதோ நல்ல காரியம் நடக்கப் போவுது. நீங்க கண வனாவோ, அப்பாவாகவோ, தாத்தாவாகவோ ஆகப் போறீங்க.

**விருச்சிகம்** : (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)



சொகுசு பஸ் மாதிரி சுகமான ஓட்டம் உங்களுக்கு. என்னங்க கவலை? தவிர நீங்க பல துறைகள்ல ஆர்வம் உள்ளவரா இருந் தீங்கன்னா, பிடிக்க முடியாத உயரத்துக்குப் போவீங்க. புது வருஷம் உங்களுக்கு ஜோரா பிறந் திருக்கு. நம்பிக்கை - உற்சாகத்தோட காரியத்துல இறங்குங்க. இந்த வாரம் நீங்க எதிர்பாராத இடத்துலேருந்து பண வரவு இருக்கும். மனை விக்கு ஏதாவது நகை வாங்கிப் போட்டு அழகு பார்க்க வேண்டியதுதானே? சில பார்ட்டி, விழாக்கள்ல கலந்துக்க வேண்டி வரலாம். உடல் நலன் கவனம்! கால்ல ஏதாவது கல்லு கில்லு பட்டு லேசா பிரச்னை ஆகலாம்! கவனமா இருங்க.

**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)



எந்தப் பிரச்னையானாலும் சமாளிக்கிற துணிவு, சாதுர்யம் உங்களுக்கு இருக்கு. இந்த வாரம் உங்களுக்குச் சவாலா இருக்கும். ஆபீஸ்ல கழுத்தை நெரிக்கும் வேலை! ஆனா கலபமா ஊதித் தள்ளிடுவீங்க. சிலருக்கு அடிக்கடி வெளியூர்ப் பயணம் இருக்கலாம். ஆனா, வேளைக்கு சாப்பிடறது மட்டும் கஷ் டமா இருக்கும்! வயசுப் பசங்களுக்குக் கல்யாண யோகம் கூடி வருது. காதல் அனுபவங்கள் சூப்ப ராவே இருக்கும். கலைத்துறையினருக்கு ஏதாவது விருது கிடைக்கலாம். பெண்களுக்கு இது புதுப் புடைவை வாரம்!

**மகரம்** : (உத் திராடம் 2-ம் பாதம் முதல், திரு வோணம், அவிட் டம் 2-ம் பாதம் வரை)



உற்சாகமான நேரம். உங்க ஆசைகள், கனவுகள் எல்லாம் நனவாகப் போகுது. வீட்டுல ஒரு கல்யாணம் நடக்கப் போகுது. பெற்றோர் மனசு சந்தோஷப்பட றாப்பல பிள்ளைங்க ஏதாவது நல்ல காரியம் செய்வாங்க. பெண்களுக்கு ப்ரமோஷன் உறுதி. (ஆபீஸ்லேயும் சரி; வீட்டுலேயும் சரி!) உல்லாசப் பயணங்கள் சிலருக்கு இருக்கும். வராத பணம் வந்து சேரும். சொற்பொழிவாளர்கள், கலை ஞர்கள், பத்திரிகையாளர்களுக்கு இது புகழ் சேரும் வாரம். பயணத்துல மட்டும் எச்சரிக் கையா இருங்க. முடிஞ்சா, தூர தேசப் பயணங் களைத் தவிர்க்கப் பாருங்க.

டிசம்பர் 30 முதல் ஜனவரி 5 வரை

**கடக ராசிக்காரரான விநாயகராமுக்கு பழைய கடன்களெல்லாம் வசூலாகுமாம்!**



**கும்பம்** : (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)



உங்க பிளான் எல்லாமே சூப்பரா நிறைவேறுங்க. கிரகங்கள் உங்களுக்கு ரொம்ப சாதகமா அமைஞ்சிருக்கறதுதான் காரணம். வீடு வாங்கற எண்ணம் இருந்தால் உடனே செயல் படுத்துங்க. கேட்ட இடத்துல லோன் கூடத் தாமதமில்லாம கிடைக்கும். குடும்பத்துல மகிழ்ச் சிக்குக் குறைவு இருக்காது. ஆனா, சின்னச் சின்ன விஷயங்கள்ல லேசா உரசல் வரலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க. இந்த வாரம் உங்க மூத்த மகன் அல்லது மகள் மூலம் ஏதோ ஒரு முக்கியமான காரியம் - நீங்க நீண்ட நாளா கனவு கண்டுட்டிருக்கற காரியம் நடக்கும். அது உங்களுக்கு யானை பலம் தரும்!

**மீனம்** : (பூரட் டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)



பிரமாதமான பலன்கள் ஒண்ணும் எதிர்பார்க்க முடியாது. ஆனா லைஃப் ஸ்மூத்தாவே போகும். நண்பர்கள், புது மனிதர் கள் விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. முதலீடுகளோ, கொடுக் கல் வாங்கலோ வேணாம். லாட் டரி, ரேஸ்னு போனீங்கன்னா என்னுதான்! வெளியூர்ப் பயணங் களைத் தள்ளிப் போடுங்க. வேளைக்கு கரெக்டா சாப்பிடுங்க. ஆனா கண்ட இடத்துல சாப்பிடா தீங்க. வயிறு சம்பந்தமான நோய் ஏதாவது வரலாம். கவனமா இருங்க.

ந L க் கு ம்!

இத்தாலியர்கள் உணவுப் பிரியர்கள்; விஸ்தாரமான, 'ஆறு' கோர்ஸ் மீல்ஸ் சாப்பிட்டுப் பழக்கப்பட்டவர்கள். இத்தாலிய உணவு வகைகள் உலகெங்கிலும் பிரசித்தம்தான். நம்மூரில் மூலைக்கு மூலை சக்கை போடு போடும் 'பி(ட்)ஸா'வை அறிமுகப்படுத்தியவர்களே இவர்கள்தானே!

இத்தாலிய பாரம்பரியப்படி, 'wine, dine and serenade' செய்ய, நாங்கள் அழைத்துச் செல்லப்பட்ட உணவகத்திற்கு "Mangrovia" என்ற அழகான பெயர். முதலிரண்டும் புரிந்திருக்கும்; 'serenade' என்றால் 'இசையைச் செவியுற்ற வாறே' என்று பொருள்; அதாவது, 'மது'ரமான 'இசை'சும் 'விருந்து'.

ஹோட்டல்கள் அனைத்துமே, நம்மூர் உடுப்பி ரகங்களுக்குக் கூட சவால்விட முடியாத அளவு, சின்னச் சின்ன அறைகள் கொண்ட நெரிசலான கட்டடங்களில் அமைந்திருந்தன. சிறிய மேஜை நாற்காலிகள்; ஒவ்வொன்றிலும் ஒரு ஜோடி மர உலக்கைகள் போன்ற ஒரு பொருள். மேலேயுள்ள குமிழைச் சுற்றினால் ஃப்ரெஷ்ஷாக மிளகுப் பொடி தயார், 'ஸூப்'புக்காக! உப்புக்கொன்று, மிளகுக்கொன்று. பார்க்க 'ராய'லாக இருந்தன.

எங்களை இருக்கைகளில் அமர்த்திவிட்டு, மரியா, "chef"ஐயும், அவரது உதவியாளரையும் அறிமுகப்படுத்தி வைத்தார். சின்ன "போ" வைத்த வெள்ளை ஷர்ட்டையும், கறுப்புப் பாண்ட்டையும் போட்டுக் கொண்டு, சிரித்த முகத்துடனிருந்த இளைஞன் தான் "சீஃப் ஷெஃப்." ஒரு குண்டர் அவரது தொண்டர்.

உலகில் மிக அதிகமாக ஒயின் உற்பத்தி செய்யும் நாடு இத்தாலி! எனவே முதல் கோர்ஸில், இத்தாலியின் பிரசித்த பெற்ற "ரெட் ஒயின்" எல்லோருக்கும் வழங்கப்பட்டது; ஒயிட் ஒயினும் டேபிளில் இருந்தது. 'ரெட் ஒயின் உடம்புக்கு ரொம்ப நல்லது; சுவைத்துப் பார்' என்ற தொண தொணப்புத் தாங்காமல் உதட்டருகே எடுத்துச் செல்கையில், சின்ன வயதில், ஜுரமென்று சென்றால், டாக்டர் கொடுக்கும் ஒரு சிவப்பு கலர் மிக்சர்தான் நினைவுக்கு வந்தது. அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் எல்லோரும் அதில் நீந்தித் திளைத்துக் கொண்டிருந்தனர். ஓசியில் கிடைத்தால் விஷத்தைக் கூடக் குடிப்பார்கள் என்று நினைக்கத் தோன்றியது.

அடுத்து, ஒரு ம்யூசிக் ட்ரையோ-ஒரு கிடார் வாத்தியக்காரர்; ஒரு ட்ரம்பட் இளைஞர்; இசையுடன் 'அகார்டியனை'யும் வாசிக்கும் பாடகர்- அறிமுகப்படுத்தப்பட்டனர். ஒரு பத்துப் பதினைந்து நிமிடத்திற்கு முதல் பாட்டையே பாடித் தீர்த்தார்கள்.

ஒவ்வொரு கோர்ஸின் போதும், என்னென்ன



• ஆங்காங்கே இசைத்துக் கொண்டேயிருக்கும் இத்தாலியர்கள்...

உணவு பரிமாறப்படும் என்று முன்னமேயே அறிவித்தார்கள்; ஒரே நான்-வெஜ் ஐட்டங்கள்தான்! கூட்டம் கோரஸாய் ஆர

ஜெயஸ்ரீ ராஜ்





• ரோமாபுரி ஒரு பார்வை...

# மதுரமான இசை விருந்து!

அழகு இருக்கிறதே, ஸூப்பர்!

"பாஸ்தா சாப்பிடுகிறீர்களா?" என்று ஏதோ கஞ்சியில் வெள்ளைத் தேன் குழல் பிழிந்தது போன்ற ஒரு கொழ கொழப்புப் பதார்த்தம்; 'ஸ்பாகெட்டி' ரொம்ப நன்றாயிருக்கும் என்று, நூடுல்ஸில் ஒரு வகை போன்ற நீண்ட கலர்க் குழல்கள்; 'ஸ்பினச், லெட்யூஸ், காரட்'என்று தோட்டத்திலிருந்து நேராக ப்ளேட்டுக்கு வந்த, பச்சையான 'ஸாலட்' வகைகள்! 'பி(ட்)ஸா கூட பிடிக்காதவர்கள் இருப்பார்களா என்று, உலகளாவிய ஒரு சைஸில் என்னென்னவோ வாரிக்கும்!

இரண்டிலிருந்து ஐந்தாவது கோர்ஸ் வரை, 'சுத்த சைவமான' எங்கள் நால்வருக்கும், எதை எதையோ விதவிதமான கலர்களில், டிசைன்களில், பதங்களில், தட்டுகள் நிறைய குவித்து எடுத்து வந்து உபசரித்த திணித்த பயங்கரம்! நாம் ஒவ்வொன்றாக நிராகரிக்க, கொஞ்சமும் முகம் சுளிக்காமல், புதிது புதிதாக அறிமுகப்படுத்திய நேர்த்தி இருக்கிறதே..! (பாவம்; எத்தனை மெனக்கெடறான்; எதையாவது சாப்பிட்டுத் தொலையேன்...) அற்புதமான விருந்தோம்பல்!

நடுநடுவே இசைக் குழு, ஒவ்வொரு அறையாகச் சென்று பாடி விட்டு, மீண்டும் தலைகாட்டும். புத்தம் புது மண ஜோடிகளுக்கென்று காதல் டூயட்டுகளை அவிழ்த்து விட்டு, அவர்களுக்கருகில் சென்று, ஸ்பெஷலாகப் பாடி, செவிப்

## நெ.1. நூடுல்ஸ்தான்!

அண்மையில் நடந்து முடிந்த ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்ட விளையாட்டு வீரர்களுக்கு முந்நூறு விதமான உணவு ஐட்டங்கள் தயாரித்து வழங்கப்பட்டன. அவற்றில் மிக அதிகமானோர் விரும்பிச் சாப்பிட்ட ஐட்டம் என்ன தெரியுமா? நூடுல்ஸ்தான்! மிக அதிகமானோர் சாப்பிட்ட பழம் வாழைப்பழம்.

– சி.எம்.

---

பறையைக் கிழிக்கும்!

கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் இதே முறையில் பொறுமையைச் சோதித்த பின், கடைசி கோர்ஸான 'டெஸர்ட்' - நல்ல வேளை இம்முறை ஐஸ்க்ரீம், ஐஸ்க்ரீம் போல் இருந்தது. பழ வகைகள்தான் சுமார்! நம்மூர் ஃப்ரூட்ஸாலட்டில் இதைவிட ருசிகரமான பழங்களைச் சாப்பிட முடியும். பொதுவாகவே அங்கெல்லாம் பழங்கள் பார்ப்பதற்குத்தான் நன்றாக, செழிப்பாக இருந்தனவேயன்றி சுவையில் என்னவோ இந்திய ரகங்களே உசத்தி போல்தான் தோன்றியது. மிச்சப்படுத்தாமல் நாங்கள் இதையாவது சாப்பிட்டதில், அவர்களுக்கு ஏக சந்தோஷம்!

முடிவில் சிறந்த ஜோடிக்கு ஒன்றும், எல்லாப் பெண்களுக்குமாகவும் சிறப்புப் பரிசுகள் என அறிவித்தார்கள். ரெட் ஒயினை கண்களிலேயே ஊற்றிக் கொண்டு விட்டார்களோ என்று நினைக்குமளவுக்குச் சிவந்த கண்களுடனிருந்த, ஒரு அமெரிக்க இளம் ஜோடிக்கு (ஜெர்ரி-ஜூன்) சிறந்த ஜோடிக்கான பரிசு; பாடகர்களுடன் சேர்ந்து, பாடி, கொஞ்சிக் குலவிய அந்த ஜோடிக்கு கிடைத்த பரிசு என்ன தெரியுமா? ஒரு ஒயின் பாட்டில்!

அடுத்து, பெண்கள் முறை; நாங்கள் முரானோ கண்ணாடியில் நெக்லெஸோ, ப்ரேஸ்லெட்டோ, அட ஒரு ஹாண்ட் பாகோ, பர்ஃப்யூமோ எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில்.... ஒரு பூச்சாடி நிறைய சிவப்பு ரோஜாக்கள் – ஸில்வர் பேப்பர் சுற்றப்பட்டு கொண்டு வரப்பட்டன! ப்பூ! 'பூ'தானா என்று எண்ணிக் கொண்டிருக்கையில்...

'சீஃப் ஷெஃப்'பை அழைத்து, மரியா, "இதுதான் என் 'பாய் ஃப்ரெண்ட்'! உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு மலரை அளித்து விட்டு, மலர் போன்ற உங்கள் கன்னங்களில் தன் இதழ்களைப் பதிப்பான்" என்று அந்த "சிறப்புப் பரிசை" அறிவித்தாளோ இல்லையோ, 'ஹாய்... ஹாய்' என்று ஒரே கூக்குரல்கள்! எழுப்பியது ஆண்கள்தான்!

இதென்னடா புதுத்தலைவலி என்று நாங்கள் அவஸ்தைப்படுகையில், அவன் ஒவ்வொரு பெண்ணையும், முத்தமிட்டு, மலர் கொடுத்து, 'தாங்க்யூ' சொல்லிக் கொண்டு வந்தான். அமெரிக்கப் பெண்கள், ஆஸ்த்திரேலிய அழகிகள், இந்தோனேஷிய மங்கையர், ஜப்பான் மூதாட்டி, கல்கத்தா மனைவி, புனா டாக்டரினி... எல்லோரும் முடிந்து எங்கள் முறை வந்தது.

சாப்பாட்டு விஷயத்தில் நாங்கள் படுத்திய பாட்டை நினைத்துக் கொண்டானோ... அல்லது நாங்கள் சுத்தபத்தமானவர்கள் என்பது எங்கள் முகத்திலேயே எழுதி ஒட்டியிருந்ததோ... முதலில் லலிதா கையில் ஒரு மலரைக் கொடுத்துவிட்டு, தயங்கியவாறே அருகே வந்து ஏறிட்டான்... அவள் கண்ணை மூடிக் கொண்டு விட, நடுக்கத்துடன் லேசாக கன்னத்தில் முத்தமிட்ட பின் என்னிடம் மலரை நீட்டினான்; கொடுக்கும் போதே கைநடுங்கியது; பிறகு, உதடுகளெல்லாம் டைப்படிக்க, 'கேன் ஐ கிஸ்' என்று பேயறைந்தது போல் உதறலெடுக்கக் கேட்ட போது எனக்குச் சிரிப்பே வந்துவிட்டது! வாயெல்லாம் கோணிக் கொள்ள, கன்னத்தின் அருகில் வந்து, அவசர அவசரமாக முத்தமிட்டு, தப்பித்தோம் பிழைத்தோம் என்று வியர்க்க விறுவிறுக்க ஓடி விட்டான். இந்தியக் கணவர்கள், "பூ... ூ" என்ற பார்வையை வீசி, "ஹூம்... நாங்கள் இந்தியர்கள்; எங்கள் கலாசாரம் இதற்கெல்லாம் இடம் கொடுக்காது என்று சொல்லியிருக்கக் கூடாது?" என்று பாய்ந்தார்கள்.

"சொல்லத்தான் நினைத்தோம்; ஆனால் 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்' என்றுதானே நம் பெரியவர்களும் உபதேசிக்கிறார்கள்? அதனால், "In Rome, do as the Romans" என்றிருந்து விட்டோம்" என வள்ளுவனை வக்காலத்து வாங்க வைத்தோமோ இல்லையோ...

அவ்வளவுதான்! "அப்படியா? அப்போது எங்களை எந்தப் பெண்ணாவது முத்தமிட்டால் சும்மா இருப்பீர்கள் அல்லவா?" என்று எங்கள் ஏகோபித்த அனுமதியைப் பெற்றுக் கொண்டு, கன்னத்தைத் நீட்டிக் கொண்டு ஆண்களெல்லாம் அலைந்ததுதான் மிச்சம்! எல்லோருக்கும் சிறப்புப் பரிசு கிடைத்து விடுகிறதா என்ன? சுற்றுலா முடிவடையும் தருவாயில், இவர்களுக்கு கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போன கதையை, கடைசியில் பார்க்கலாம்!

(தொடரும்)



# யமலோகத்தில் வீரப்பன்

சந்தனக் கடத்தல் வீரப்பன் போலீசுக்குத் தண்ணி காட்டிக் கொண்டிருக்கிறான். ஆனால் கன்னட சினிமாக்காரர்களோ அவனை எமலோகம் அனுப்பி வைத்துவிட்டனர். ஆம்! அண்மையில் வெளியாகியுள்ள ஒரு கன்னடப் படம், "எமலோகத்தில் வீரப்பன்."

ஏற்கெனவே 'ஹலோ எமா?' என்று ஒரு படம் வெளியாகி வெற்றி பெற்றது. தமிழ்நாடு, கர்நாடக மாநிலங்களைப் பொருத்தவரை வீரப்பன் ஒரு எவர் கிரீன் சப்ஜெக்ட்! பார்த்தார்கள்! இரண்டையும் இணைத்து 'எமலோகத்தில் வீரப்பன்' என்று படம் எடுத்து விட்டார்கள்.

கதை ரொம்ப சிம்பிள். எமலோகத்தில் திடீரென உயிர்களின் வரத்து அதிகரிக்கிறது. எமன், சித்ரகுப்தனிடம் காரணம் கேட்கிறான். "பிரபோ! உயிர்கள் குறிப்பாக போலீஸ்காரர்கள் அதிகம் மரணம் அடைவதற்குக் காரணம், பூலோகத்தில் இருக்கும் வீரப்பன் என்கிற மனிதன்தான். அவன் தாக்குதலால்தான் போலீஸ்காரர்களோடு பல அப்பாவி மக்களும் உயிரிழக்கிறார்கள்" என்று விளக்கம் தருகிறான்.

"அப்படியெனில், அந்த வீரப்பனையே எமலோகத்துக்குக் கொண்டு வந்து விடு. பூலோகத்தில் இனியும் அவனை விட்டு வைத்தால், அவனால் பலியாகி வரும் உயிர்களுக்கு எமலோகத்தில் இடமில்லாமல் போய்விடும்" என்று சித்ரகுப்தனுக்கு எமன் உத்தர விடுகிறான்.



தான் சரணடைய ஏகப்பட்ட கண்டிஷன்களை வீரப்பன் போடும் தருணத்தில், வீரப்பன் எமலோகத்துக்குக் கொண்டு வரப்படுகிறான். வந்த இடத்தில் அழகி அப்சரஸை மடக்கிப்போட்டு எமனுக்கு எதிராக பாலிடிக்ஸ் பண்ணுகிறான் வீரப்பன். ரொம்பவே நொந்து போய்விடும் எமன், "நீ பூலோகத்துக்கே போய்விடு!" என்று அனுப்பி விடுகிறான்.

படம் ரொம்பவும் சுமார் ரகம்தான் என்றாலும் வீரப்பன் தொடர்பானது என்பதாலேயே ஒருவித பரபரப்பு!

— கௌதம் ராம்



# சிரித்தல்... சிரித்தல்

எனக்கு நான்கடி முன்னால் சென்றாள் சித்ரா. நான் அவள் கூட நடக்க முயற்சித்து விரைந்து நடந்து அவளை எட்டிப் பிடித்தால் கூட, அவள் இன்னும் வேகமாக நடந்து, என்னை யாரோவாக காட்டிக் கொள்ள முயன்றாள். ''சித்ரா... நில்லு... மெதுவாப் போ...'' என்றேன்.

சித்ரா நின்றாள். ''நாம லவ்வர்ஸ் மாதிரியா நடந்துக்கிறோம். யாரோ ரெண்டு பேர் ரோட்டுல போற மாதிரி நடந்து போறோம். ஒருத்தர் கையை ஒருத்தர் பிடிச்சிட்டு நடந்து போக வேண்டாமா?'' என்றேன்.

''யாராவது பார்த்திடுவாங்க. பயம்மா இருக்கு.''

''யாரும் பார்க்க மாட்டாங்க. நம்மைப் பார்க்கிறவங்களுக்கு நாம யாருன்னே தெரியாது. நமக்குத் தெரிஞ்சவங்க வந்துடக் கூடாதுன்னுதான் கிட்டத்தட்ட பத்து கிலோ மீட்டர் தள்ளி வந்திருக்கோம். இங்க நமக்குத் தெரிஞ்சவங்க யாரும் வர மாட்டாங்க.''

இப்போது அவளுக்குச் சற்று பயம் விலகி, தைரியம் வந்திருக்க வேண்டும். என் கையைப் பற்றிக் கொண்டாள். அவள் கை ஜில்லென்றிருந்தது. இன்னும் முழுசாய்ப் பயம் விலகவில்லை என்று தோன்றியது.

''சித்ரா... இந்த நாளை நாம கொண்டாடணும். ஹோட்டல்ல சாப்பிடலாமா?'' என்று கேட்டேன்.

''இப்ப வீட்டுல இருந்து சாப்பிட்டுட்டுத்தானே வரேன்'' என்றாள்.

''நானும் கூடத்தான் சாப்பிட்டு வந்தேன். இருந்தாலும் உனக்கு ஏதாவது வாங்கித் தரணும் போல இருக்கு. ஏதாவது கிஃப்ட் வாங்கிக் கொடுத்தா வேணாம் வேணாம்ங்கிறே. வீட்டுல எப்படி வாங்கினே, யாரு வாங்கிக் கொடுத்தான்னு கேப்பாங்கன்னு சொல்றே. சாப்பிடலாம். நீ சாப்பிடுறதை நா ரசிக்கணும்...'' என்றதற்குச் சிரித்தாள். இப்பத்தான் வந்ததுல இருந்து சிரிக்கிறே.

"என்ன பண்றது, பயமா இருக்குல... சரி - நாம நடந்துட்டே இருக்கோமே, எங்க தான் போறோம்?"

"இப்ப ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிடுறோம். சாப்பிட்டுட்டு நாம் நேரா சினிமாவுக்குப் போறோம். போயிட்டு மதியமும் ஹோட்டல்ல சாப்பிடுறோம்."

"மதியமா... நா டிபன் பாக்ஸ் கொண்டு வந்திருக்கேன்."

"சரி.... அதை நான் சாப்பிடுறேன். அத்தை எப்படி சமைச்சு இருக்காங்கன்னு டேஸ்ட் பார்க்கிறேன்."

"அத்தையா?"

"ஆமா... உங்க அம்மாவை வேற எப்படிக் கூப்பிடுகிறதாம்?"

"சீ..." என்று சிரித்தாள்.

மதியம் ஹோட்டல்ல சாப்பிட்டு மதியமும் சினிமாக்குப் போறோம். சாயங்காலம் எங்க போகலாம்? பார்க்குக்குப் போகலாம். போயிட்டுக் கொஞ்ச நேரம் இருந்துட்டுக் கிளம்பலாம்."

"யாரும் நம்மைப் பார்த்திட மாட்டாங்களே?"

"பார்க்க மாட்டாங்க. ஒருவேளை அப்படி யாராவது பார்த்து நீ மாட்டிக்கிற மாதிரியாச்சுன்னா என்னை யார்னு தெரியாதுன்னு சொல்லிடு!" என்றேன்.

**யோகி**

சித்ரா என் காதலி. ஒரு கவரிங் கடையில் வேலை பார்க்கிறாள். நான் ஒரு மெடிக்கல் ஷாப்பில் வேலை பார்க்கிறேன். சித்ராவை பஸ்ஸில் வைத்துத்தான் பார்த்தேன். நான் ஏறும் பஸ் ஸ்டாப்பிற்கு இரண்டு ஸ்டாப் முன்னால் அவள் ஏறுவாள். அவளைப் பார்த்த மாத்திரத்தில் எனக்குப் பிடித்துப் போனது. கொஞ்ச நாட்கள் அலையாய் அலைந்து, திரிந்து - லெட்டர் கொடுத்து அவளையும் காதலிக்கும்படியாய்த் தூண்டியாயிற்று.

ஏழெட்டு மாதமாய் காதலிக்கிறோம். காதல் என்றால் சுற்றிக் கொண்டு அலைதல் கிடையாது. அதற்கெல்லாம் நேரம் கிடையாது. நான் சித்ரா ஏறும் ஸ்டாப்பிற்கே சென்று விடுவேன். பஸ் ஏறுவோம். பஸ்ஸில் எல்லாம் பேச முடியாது. பஸ்ஸில் தெரிந்தவர்கள் இருப்பார்கள். பஸ் ஸ்டாண்டில் இறங்கி அவள் கடைக்குப் போகும் போது பேசினால்தான் உண்டு. அது கூட நான் பேசினால்தான். அவள் "உம்...உம்..." என்றே வருவாள். பேசுவதை யாரும் பார்த்து விடுவார்கள் என்று, ரொம்பவும் பயந்த சுபாவம். இவளை - என்னைக் காதலிக்கும்படி செய்ததே பெரிய விஷயம் தான்.

இரவு கடையை அடைத்து விட்டுப் போகும் போது பெரும்பாலும் சித்ரா எனக்கு முன்பாகவே போயிருப்பாள். பெண் என்பதால், பஸ்ஸில் போக வேண்டும் என்பதால், எட்டே முக்காலுக்கு



அனுப்பி விடுவார்கள். என்னை அனுப்ப ஒன்பதரையாவது ஆகிவிடும். சித்ரா எனக்காகக் காத்திருக்க மாட்டாள். காத்திருக்கலாமே என்றால், 'வீட்டுல லேட்டாப் போனா திட்டுவாங்க. கடைசி பஸ்ல கூட்டம் ரொம்ப இருக்கும்' என்பாள். சில சமயம் மனம் இரங்கி அவளுக்காகவே தோன்றினால், எனக்காகக் காத்திருப்பாள். அப்போது பேசக்கூடிய வாய்ப்பு கிடைக்கும். பெரும்பாலும் பஸ் ஸ்டாண்டில் இருட்டு ஆக்கிரமித்திருக்கும். தைரியமாய், பயமின்றிப் பேசுவாள்.

இன்று காதலர் தினம். ஒரு வாரத்துக்கு முன்பே சித்ராவிடம் பேசும் வாய்ப்புக் கிடைத்த போது சொல்லி விட்டேன். "அடுத்த வார வியாழக்கிழமை லவ்வர்ஸ் டே. அன்னிக்கு நீ கடைக்கு லீவ் போடுறே."

"எதுக்கு லீவ் போடணும்?"

"அன்னிக்கு லவ்வர்ஸ் டே. நாம என்னிக்காவது அஞ்சு நிமிஷம் சேர்ந்து பேசியிருப்போமா. அன்னிக்கு முழுக்க பேசிட்டே இருக்கப் போறோம். நா அந்த நாளை எப்படியெல்லாம் கொண்டாடணும்னு முடிவு பண்ணியிருக்கேன் தெரியுமா?"

"எங்க பேமிலியைப் பத்தி உங்களுக்குத் தெரியும். ரொம்ப குடும்பக் கஷ்டம் எங்களுக்கு. நா சம்பாதிக்கிற பணம் வீட்டுக்கு ரொம்ப முக்கியம். நா கடைக்கு லீவ் போட்டா ஒருநாள் சம்பளத்தைப் பிடிச்சிடுவாங்க."

'நா வேணும்னா இருபத்தி அஞ்சு ரூபா கொடுக்கறேன்' என்றா சொல்ல முடியும். "சரி... நீ வராததுக்கு வேறவிதமான பயம் இருக்கா? உன்னை நான் ஏதாவது பண்ணிடுவேன்னு..." என்று கேட்டேன். அவள் ஒன்றும் சொல்லவில்லை. "உன்னை நான் தொடக் கூட மாட்டேன். நாம பேசிட்டே இருப்போம். ஒருநாள் முழுக்கப் பேசிட்டே இருப்போம். என் கனவுகள், உன் கனவுகள், நம்ம கனவுகள்... எனக்கு எவ்வளவோ இருக்கு – எதிர்காலத்தைப் பற்றி. நான் ஆறு மாசத்துல மெடிக்கல் ஷாப் வைச்சிடுவேன். அதுப்பத்தி பேசலாம். நா கடை வைச்சா என்ன பேர் வைக்கிறதுன்னு கூட முடிவு பண்ணிட்டேன்..."

"என்ன பேரு?"

"சித்ரா மெடிக்கல்ஸ்" என்றதற்குச் சிரித்தாள்.

"உனக்கு என்னை மாதிரி எந்த ஆசைகளும் இல்லையா... என்கிட்டே பேசணும். என்னைக் கொஞ்சணும்னு..."

"யாராவது பார்த்திடப் போறாங்க..." என்றாள். எப்படியோ அவளை லீவ் போட சம்மதிக்கச் செய்தாயிற்று.

அந்த ஹோட்டலுக்குள் நுழைந்தோம். "என்ன சாப்பிடுறே சித்ரா?"

"ஏதாவது..."

தோசைக்கு ஆர்டர் கொடுத்தேன்.

"வேற என்ன சாப்பிடுறே? பூரி சாப்பிடலாமா?"

"ம்."

பூரி கொண்டு வரச் சொன்னேன்.

சாப்பிட்டு விட்டு வெளியே வந்தோம். திரும்பவும் நான்கடி முன்னே நடந்தாள். "சித்ரா... என்ன இது" என்று எட்டிப் பிடித்தேன்.

"எங்கப்பா மாதிரி இருந்தது!"

"வழுக்கை விழுந்தவங்க எல்லாம் உங்கப்பாவா... உங்கப்பா டெய்லர் கடையில் பேண்ட் தைச்சிட்டு இருப்பார். நீ ஏன் பயப்படுறே?" என்று அவளைச் சமாதானப் படுத்தியபடியே நடந்தேன்.

அருகில் இருந்த தியேட்டருக்குச் சென்றோம். இன்னும் ஷோ ஆரம்பிக்க ரொம்ப நேரம் இருந்தது. ஓர் ஓரத்தில் நின்று பேசிக் கொண்டிருந்தோம். காற்று குளுமையாக வீசிய போதும் சித்ராவுக்கு வியர்த்தது. டிக்கெட் கொடுப்பதற்கான பெல் அடித்தார்கள். கௌண்டரில் டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்த போது சித்ரா சொன்னாள். "ஏங்க... எனக்குப் பயமா இருக்கு. கோவிச்சுக்காதீங்க. நா கடைக்குப் போறேன்..." என்று, நான் எங்கே திட்டுவேனோ என்கிற பயத்துடன் சொன்னாள்.

எனக்கு அப்போதுதான் தோன்றியது. இவளை அழைத்து வந்திருப்பதில் எனக்கு வேண்டுமானால் சந்தோஷமாய் இருக்கலாம். ஆனால் இவளுக்கு எவ்வித சந்தோஷமும் இருப்பதாய்த் தெரியவில்லை. என் சந்தோஷத்திற்காக – இவள் சந்தோஷத்தைக் கெடுக்க விரும்பவில்லை. "சரி... டிக்கெட்டை யார்கிட்டயாவது கொடுத்துட்டு வர்றேன். சேர்ந்தே போயிடலாம்" என்றேன்.

"என் மேல் கோபம் இல்லையே?"

"இல்லை. உனக்கு என்னைக்குப் பயம் தெளிஞ்சு நம்ம காதலை எல்லார்கிட்டயும் வெளிப்படுத்தற தைரியம் வருதோ அதுவரைக்கும் நான் காத்திருப்பேன்!" என்றேன்.

# விற்பனைக்குத்தான் எத்தனை உத்திகள்!




'இது கலியுகம்' என்றால் 'இல்லை போட்டியுகம்' என்று வியாபாரிகள் ஒரு வேளை திருத்தக்கூடும். அந்த அளவு கடும் போட்டி. தாராளமயமாக்கலைத் தொடர்ந்து இந்தியாவை முற்றுகையிடும் பிறநாட்டுத் தயாரிப்பு நிறுவனங்கள் ஒருபுறம்; உள்ளூரிலேயே உள்ள நிறுவனங்களும் தங்களை நிலைநிறுத்திக் கொள்ள உருவாக்கும் புது தயாரிப்புகள் மறுபுறம்... இதனிடையே வாங்குபவர்களும் ரொம்ப உஷாராகி விட்டார்கள். அவர்களைத் திருப்திப்படுத்த வேண்டுமானால் மற்ற பிராண்டுகளிடம் இல்லாத ஒரு விசேஷத்தன்மை தாங்கள் தயாரிக்கும் பொருளில் இருக்கிறது (இதை Unique Selling Proposition என்பார்கள்) என்று தம்பட்டம் அடிக்க வேண்டும்!

சமீபத்தில் சில கண்காட்சிகளையும், செயல்முறை விளக்கங்களையும் கண்ட போது, சில தயாரிப்பாளர்கள் அறிவித்துக் கொண்ட இந்த விசேஷத்தன்மை மிகவும் சுவாரஸ்யமாக இருந்தது. 'மார்க்கெட்டிங்' என்ற கலையில் இவர்கள் மிகவும் முன்னேறியிருக்கிறார்கள் என்பது புரிந்தது. இதன் காரணமாக உபயோகிப்பாளர்களும் மிகுந்த உஷாராக இருக்க வேண்டியது எத்தனை அவசியம் என்பதும் புரிந்தது.

● "132 நாடுகளில் பயன்படுத்தப்படும் எங்களது நீர் சுத்திகரிப்புக் கருவி இப்போது இந்தியாவுக்கு வந்திருக்கிறது. 150 வருட ஆராய்ச்சியின் பலன் இது" என்றார்கள் டஃப்பெல்ட் நிறுவனப் பிரதிநிதிகள். "பிரிட்டனிலிருந்து வந்துள்ள இந்தத் தொழில்நுட்பம் 99.99 சதவீதத்திற்கும் அதிகமான அளவில் பாக்டீரியாக்களை நீரிலிருந்து நீக்கி விடுகிறது. குளோரின், ஈயம் ஆகியவற்றையும் நீக்கிவிடும் எங்கள் கருவிக்கு மின்சாரம் தேவையில்லை" என்கிறார்கள்.

● கைதான் நிறுவனம் தங்களது புதிய அறிமுகமான 'மார்தான்' என்ற மின்விசிறியின் சிறப்பைத் தெரிந்து கொள்ள ஒரு சோதனையைச் செய்து பார்க்கச் சொல்கிறது. முப்பது சென்டி மீட்டர் இடைவெளி விட்டு, முடிந்தவரை அதிகமான மெழுகு வர்த்திகளை ஓர் அறையில் கொளுத்தி வைக்க வேண்டுமாம். இரண்டு நிமிடங்கள் ஓடவிட்டால், மற்ற மின்விசிறிகளை விட, மார்தான் மின்விசிறி அதிக அளவிலான மெழுகுவர்த்திகளை அணைத்திருக்குமாம். அப்படி இல்லையென்று நிருபித்தால் பரிசு உண்டாம்!

● 'ஓஸோன் படலத்தை பாதிக்கும் CFC வஸ்துக்கள் இல்லாதது என்ற பல்லவியை சில இந்தியத் தயாரிப்பு நிறுவனங்களும் கவிகரித்துக் கொண்டதாலோ என்னவோ சாம்சங், தேவூ போன்ற நிறுவனங்கள் தங்களது குளிர்பதனப் பெட்டியில் 'Cooling X-Flow Circulation' கொண்டது என்று அறிவிக்கின்றன. அதாவது இதன் உள்ளே ஒரு சின்ன மின்விசிறி பொருத்தப்பட்டிருக்கிறது. இது சுற்றுவதாலும், வேறொரு பகுதியில் காற்றை தன் பக்கம் இழுத்துக் கொள்வதாலும், ஃப்ரிட்ஜின் கதவைத் திறந்து மூடும் போது குளிர் காற்று வெளியேறி விடுவதில்லையாம். இதனால் மின்சாரம் மிச்சப்படுமாம்.

● "ரத்த ஓட்டம் அதிகமாகும், மூட்டு வலி மறையும், முதுகுவலி குறையும், காலில் வெடிப்பு இருக்காது" – எந்த ஒரு மருந்துக் கம்பெனியின் விளம்பரமும் அல்ல இது. சித்ரா என்ற பெண்மணிதான் தாம் விற்பனை செய்யும் பஞ்சலோக நகைகளுக்கு இத்தனை மருத்துவப் பயன்களும் இருப்பதாகக் கண்காட்சியில் பட்டியலிட்டிருந்தார்!

— ஜி.எஸ்.எஸ்.



# “கலைஞர் மீது வருத்தமே!”

— மதுரை ஆதீனம்

**ஒரு மடாதிபதியாக இருந்து கொண்டு, நாத்திகம் பேசும் தி.மு.க. மேடைகளில் வலம் வந்து சர்ச்சைகளில் சிக்கியவர் மதுரை ஆதீனம். இன்று தி.மு.க.வை விட்டு விலகியிருக்கிறார். காரணம் என்ன? அவரிடமே கேட்டோம்.**

“1987 – 88 களில் தி.மு.க. மேடைகளில் ஆவேசமாக முழங்கினீர்கள். 'தி.மு.கவை ஆட்சியில் அமர்த்தாமல் ஓயமாட்டேன்' என்று சவாலெல்லாம் விட்டீர்கள். ஆனால் 89-ல் தி.மு.க. ஆட்சி அமைத்த போது நீங்கள் அருகில் இல்லை. இன்று வரைக்கும் விலகியே உள்ளீர்கள். அந்தப் பழைய உறவுக்கு அப்படி என்னதான் நேர்ந்தது?”

“தி.மு.க. தமிழுக்காகவும், தமிழருக்காகவும் உழைக்கும் கட்சி என்று நாம் உணர்ந்ததால் அப்போது தீவிரமாக தி.மு.கவை ஆதரித்தோம். எம்.ஜி.ஆர். காலத்திலேயே தைரியமாகவும், பகிரங்கமாகவும் நாம் மேடையேறிப் பேசினோம். பிரசாரங்களிலும் தீவிரமாக ஈடுபட்டோம். இதனால் சமூகத்தில் நம்மைப் பற்றிய சர்ச்சைகளைக் கூடப் பெரிதுபடுத்தாமல் நாம் காட்டிய ஆர்வத்திற்கும், உழைத்த உழைப்பிற்கும் 1989ல் தி.மு.க. ஜெயித்தபோது 'மதுரை ஆதீனம்தான் அறநிலையத் துறை அமைச்சர்' என்று கூட பலர் மத்தியில் பேச்சு அடிப்பட்டது. மாறாக 89க்கு பிறகு இடைவெளிதான் அதிகமாகிப் போனது. கலைஞருடனான நமது நெருக்கத்தைப் பொறுக்காத யாரோதான் அவரிடம் நம்மைப் பற்றி தவறான செய்திகளைக் கூறி இந்த இடைவெளியை ஏற்படுத்தி விட்டார்கள். நம்மைப் பொறுத்தளவில் கலைஞர் மீது..அதே அன்போடு தான் இப்போதும் இருக்கிறோம்.”

“நீங்களே கலைஞரைத் தொடர்பு கொண்டு இதை விளக்கியிருக்கலாமே?”

“சமீபத்தில் கூட நம் ஆதீன இட ஆக்ரமிப்பு தொடர்பாக பிரச்னை ஏற்பட்டு, போலீஸ் வரை போக வேண்டியதாயிற்று. இந்நிலையில் ஆதீன இடத்தை மீட்டுத் தரும்படி கடிதம், தந்தி, ஃபோன், ஃபேக்ஸ் என்று எல்லா வகையிலும் கலைஞரைத் தொடர்பு கொண்டோம். ஆனால் ஆறுதல் தரும்படியான மறுதகவல் வரவில்லை. இதில் நமக்கு வருத்தமே!”

“அதனால்தான் ம.தி.மு.க. ஆதரவாளராகி விட்டீர்களா?”

“இதுவரை நாமே கேள்விப்படாத வதந்தி இது. மதுரையில் இலங்கைத் தமிழருக்கு ஆதரவாக வைகோ நடத்திய உண்ணாவிரதப் போராட்டத்தில் நாம் கலந்து கொண்டதை வைத்து, இப்படி ஒரு கேள்வி எழுப்புகிறீர்களோ என்னவோ? தமிழர் மீது கொண்ட பற்றால் மட்டுமே அதில் கலந்து கொண்டோம். இன்றும் தமிழுக்காகவும், தமிழ்ச் சமூகத்திற்காகவும் எந்த அரசியல் கட்சி நம்மை அழைத்தாலும் அப்போராட்டத்தில் நாம் பங்கு பெற்று வருகிறோம். அதே போல் ஒடுக்கப்பட்ட சமூக முன்னேற்றத்திற்காக நடைபெறும் சாதி மாநாடுகளிலும் சாதி உணர்வின்றிப் பங்கு பெறுகிறோம். இதில் சாயம் பூச வேண்டிய தில்லை.” ●

சந்திப்பு : **கிரண் நியூஸ் 'சரவணன்'**

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621**
**Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1600/- (Air Mail)**
**Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 800/- (Air Mail)**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

**16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,**
**சென்னை- 600 063.**
TEL & FAX : 2376129
Cell Phone : 98410 50464 (Direct- Swamiji)



## புத்தாண்டு - பொங்கல் நல்வாழ்த்துக்கள் !

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

ADCHOICE

